

திருப்பதி சுவாமிகள் சேவடி வாழ்க.

# முத்திநெறி

*

ஶ்ரீலஶ்ரீ

## திருப்பதி சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளியது.

*

வெளியிடுவோர்:

**M. இரத்தினசபாபதி B. A., B. T.,**

ஓலை நாயகம்,

கந்தசாமிக் கண்டர் அறநிலையம்,

வேலூர்] 1960 [சேலம்.



திருப்பதி சுவாமிகள் சேவடி வாழ்க.

# முத்திநெறி

*

ஸ்ரீலஸ்ரீ

## திருப்பதி சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளியது.

*

வெளியிடுவோர்:

M. இரத்தினசபாபதி B. A., B. T.,

ஓலை நாயகம்,

கந்தசாமிக் கண்டர் அறநிலையம்,

வேலூர் ] 1960 [ சேலம்.

முதற்பதிப்பு: ஆறுவது ஜெயந்தி மலர் 16—12—60

இந்நூல் கிடைக்குமிடம்:—

***M. இரத்தினசபாபதி B. A., B. T.,***

ஓலை நாயகம்,

கந்தசாமிக் கண்டர் அறநிலையம்,

வேலூர் (சேலம்.)

**விலை : ரூ. 1-50 ந. பை.**

கருணாநிதி மின்சக்தி அச்சகம், வேலூர் (சேலம்).

# உள்ளுறை.

# ஸ்ரீ கணபதி தோத்திரம்.

மோகமெனும் கடல்கடந்து முத்தியெனுங்
 கரைகாண்பான் முதிர்ந்த நாலாம்
பாகமெனும் மலர்கொண்டு பத்தியெனும்
 புனலாட்டிப் பரிந்து சாத்தி
சோகமெனப் பாவித்துத் துரியமெனும்
 விளக்கேற்றிச் சோகம் நீங்கி
ஆகமெனுங் கோவிலின்கண் அறிவென்னுங்
 கணபதிக்கே அன்பு செய்வாம்.

உள்ளமெனுங் கூடத்தில் ஊக்கமெனுந்
 தறிநிறுவி யுறுதி யாகத்
தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி
 இடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
 களித்துண்டு கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
 நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்.

உருகும் அடியார் அள்ளூர உள்ளே ஊறும் தேன் வருக!
உண்ணத் தெவிட்டாச் சிவானந்த ஒளியே வருக! புலன்வழிபோய்த்
திருகும் உளத்தார் நினைவினுக்கும் சேயாய் வருக! எமை ஆண்ட
செல்வா வருக! உமை ஈன்ற சிறுவா வருக! இணைவிழியால்
பருகும் அமுதே வருக! உயிர் பைங்கூழ் தழைக்கக் கருணை மழை
பரப்பு முகிலே வருக! நறும்பாகே வருக! வரை கிழித்த
முருகவேட்கு முன் உதித்த முதல்வா வருக! வருகவே!
மூரிக் கலைசைச் செங்கழுநீர் முனியே! வருக! வருகவே!

முன்னவனே யானை முகத்தவனே முத்திநலஞ்
சொன்னவனே தூய்மெய்ச் சுகத்தவனே—மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேகரனே
தற்பரனே நின்றுள் சரண்.

ஸ்ரீ

# ஸ்ரீலஸ்ரீ திருப்பதி சுவாமிகள்



படியார்க்கும் படித்தவர்க்கும் பதமுண்டாம்:
படு கோபப் பதக ரான
கொடியார்க்கும் குணமுண்டாம்; குவலயத்தில்
எந்நாளுங் கூறொ ணாத
மிடியார்க்கும் பெருந்திருவாம்; வேதாந்த
விளக்கொளியாய் மிளிரும் ஞான
அடியாருக் கடியர்திருப் பதிப்பெருமான்
திருவடிக்க ணன்பு ளார்க்கே.

ஓம்

மாணிக்கவாசகர்

முத்தி நெறி யறியாத
மூர்க்கரொடும் முயல்வேனைப்
பத்தி நெறி அறிவித்துப்
பழவினைகள் பாறும் வண்ணம்
சித்த மலம் அறுவித்துச்
சிவம் ஆக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவாறு
ஆர்பெறுவார்? அச்சோவே.

—திருவாசகம்

ஓம்.

சிவமயம்.

## திரு. புரவலர். பரிமள கண்டர் அவர்களின் வாழ்த்து.

கோலமுறு மன்மதற்குப் படைவீ டாகிக்
குலவுசுரும் பினங்கட்குச் சந்தை யாகிச்
சீலமுறு காவிரிக்குக் காஞ்சி யாகித்
திகழ்பொழில்சூழ் நஞ்சையிடை யாற்றின் கண்ணே
சாலமகிழ்ந் தன்பினொடு தமிழர் செய்த
தவப்பயன்கள் தியாகமொடு கலந்த ழைந்து
தாலமெலா மீடேறப் பரிமளப் பேர்ச்
சான்ருேராயப் பிறந்தனகாண்; அறங்கள் வாழ.

அம்பலத்திற் பிறைதுளங்க நடன மாடும்
அற்புதன்றன் கலையினிலே சுவையைச் சேர்த்த
செம்பொருளாம் மாகாளி அருளி ஞலே
திறமையுடன் அறங்கட்கு வேலி யிட்டு
நம்பியுல கின்பமுறப் பாது காத்து
நாவலரின் பாராட்டைப் பெற்ற தோன்றல்
சம்புகுல மாணிக்கம் பரிமளப் பேர்ச்
சான்ருேரின் நற்கீர்த்தி தழைத்து வாழ்க!

விற்பனர்கள் புகழ்பெற்ற பரிமளப் பேர்
வித்தகஞர்- கபிலமலைக் கந்த வேளின்
பொற்புடைய திருவருளால்- கலைநுட் பத்தின்
பொலிவறிந்த மெய்ஞ்ஞான புனித மூர்த்தி-
பற்பமல ரணையதிரு வடியைச் சார்ந்து
பார்த்தற்குக் கண்ணன் சொல் தெய்வநூலை
அற்புடனே முறையாகக் கற்றுத் தேர்ந்தார்
அவரருளால் திடம்பெற்ருர்; வாழ்வும் பெற்ருர்.

தம்முடைய குருமூர்த்தி பாதப் போதில்
தணியாத அன்புடைய பரிமளப் பேர்ச்
செம்மலார்- எமையாண்ட கருணை வள்ளல்
தெரிந்தளித்த- முத்திநெறி என்னும் நூலை
இம்மையே கற்றவர்பே ரின்பம் எய்த
எழிலாக அச்சிட்டு விரும்பித் தந்தார்
எம்முடைய தேசிகன்றன் அருளி ஞலே
இனிமையொடு பல்லாண்டு வாழி! வாழி!

கருவூர்,
தாயுமானவரில்லம்,
16—12—1960.

இங்கனம்,
அடியார்க்கடியேன்,
**S. சுந்தரன்.**

ஓம்

சிவமயம்.

அரவக்குறிச்சி அந்தணன் வாழ்க!

# நூன்முகம்.

எழுவகைப் பிறப்பில் எவ்விடத் தெக்கால்
எப்பிறப் பெவ்வண முறினும்
பழுதிலா நினது மலர்ப்பத மிரண்டும்
பாவியேன் மறந்திடா தருள்வாய்!
தொழுதுநன் னெறிநில் லடியவர் பவத்தைத்
துடைத்துயர் வீட்டினி லிருத்து
முழுதுணர் ஞான அடியவர்க் கடிய
மூவரும் ஒருவனும் முதலே!

நம் தமிழகத்தில் பல்லாயிரக்கணக்கான ஞானிகள் தோன்றி மக்கட்கு நல்வழி காட்டினர். அவர்களால் தமிழ் மக்கள் ஞான பரிபக்குவம் அடைந்தனர். தமிழ் இலக்கியம் செழித்தோங்கி வளம் பெற்றது.

அத்தகைய ஞானிகளின் பரம்பரையில் உதித்தவரே ஸ்ரீலஸ்ரீ திருப்பதி சுவாமிகள். நம் சுவாமிகள் பக்தியில் ஆழ்வார்கள், நாயன்மார்களைப் போன்றவர். ஞானத்தால் சுகப்பிரம்மரிஷியைப் போன்றவர். வைராக்கியத்தால் ஜனகரைப் போன்றவர். தெய்வநலப் பாசுரம் புனைவதில் தத்துவராயரைப் போன்றவர். சுருக்கமாகக் கூறவேண்டுமானால் முன்பு வாழ்ந்த ஞானிகளும், பக்தர்களும், யோகிகளும் சேர்ந்து ஒரு வடிவமாக—திருப்பதி சுவாமியாக—வந்துள்ளனர் என்று கூறலாம். நம் சுவாமிகளின் பெருமையை விரிப்பிற் பெருகும். சுருக்கின் எஞ்சும். என் செய்வது? வாழ்க அவர் புகழ்!

நம் சுவாமிகள் தாம் கண்ட அனுபவத்தைப் பல சீரிய நூல்களாக யாத்துள்ளனர். அவற்றுள் பல பலரால் முன்னமே வெளியிடப்பட்டுள்ளன. இப்போது சுவாமிகளின் திருவருளால் "முத்தி நெறி" வெளிவருகிறது.

நம் சுவாமிகள் "முத்தி நெறியை" அரவக்குறிச்சியில் இருந்தபோது திருவாய் மலர்ந்தனர். இந்நூல் பல்லாண்டுகள் உரையின்றி இருந்தது. குளித்தலை கடம்பர் கோயிலில் நம் சுவாமிகள் வாழ்ந்தபோது இந்நூற்கு உரையெழுதத் திருவுளம் பற்றினர். அப்போது சுவாமிகளின் அணுக்கத் தொண்டராய் இருந்த திரு. மா. சம்பந்த முதலியார் அவர்கள் சுவாமிகளின் திருக்குறிப்பறிந்து பணி செய்ய முன்வந்தனர். (திரு. மா. சம்பந்த முதலியார் அவர்கள் தற்போது திருவாரூரை அடுத்த ஓர் தேவஸ்தானத்தில் நிர்வாக அதிகாரியாக இருக்கின்றனர்.)

கோவில் அர்த்தஜாம பூஜை முடிந்தபிறகு சுவாமிகள் பாக்களுக்கு உரைகூற திரு. சம்பந்த முதலியார் முறையே எழுதி வந்தனர். சுமார் 6 மாத காலத்தில் முத்தி நெறி உரை எழுதி முடிந்தது. இந்நூல் உரையுடன் திரு. சம்பந்த முதலியாரிடத்தே இருந்து வந்தது. குளித்தலை திரு. நடேச முதலியார் என்பவர் முத்தி நெறியைப் படிக்க விரும்பி திரு. சம்பந்த முதலியாரிடம் சென்று, நூலைப் பிரதி செய்து வைத்திருந்தனர். இதை அறிந்த அடியேனுக்கு இந்நூலை அச்சிட்டு வெளியிட வேண்டும் என்னும் அவா உண்டாயிற்று. அடியேன் கருத்தை திரு. நடேச முதலியாரிடம் கூறினேன். அவர் மிக மகிழ்வுற்றுத் தம் பிரதியை உவப்போடு தந்து உதவினர். இந்நூல் படிக்கும் அன்பர் ஒவ்வொருவரும் திருவாளர். மா. சம்பந்த முதலியார் அவர்களுக்கும், திருவாளர். நடேச முதலியார் அவர்களுக்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளனர்.

அடியேன்பால் முத்திநெறி இருப்பதையறிந்த திருவாளர் புரவலர். M. பரிமள கண்டர் அவர்கள் நூலை வெளியிட விரும்பினர். விரும்பியதோடு பொருளுதவியும் செய்தனர். கண்டர் அவர்கள் தம் குருநாதர்மீது கொண்ட அன்பு இப்போது நூலாக வெளிவருகிறது. கண்டர் அவர்களின் வாழ்வே

அறத்தொடு பிணைந்தது. அவர் அறம் உயர்ந்தது; நிலையானது; உறுதியானது; பயனுடையது. அவர்கள் செய்யும் கல்வித் தொண்டும், சமயத்தொண்டும் உலகறிந்தது. அவர்கள் செய்யும் அறத்தால் ஆண்டுதோறும் பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் கல்விச் செல்வம் பெறுகின்றனர். கண்டர் வாழ்க! கண்டர் புகழ் வாழ்க!

முத்திநெறியை அச்சுவாகனத்தில் ஏற்றுவதற்கேற்ப அழகுற எழுதித்தந்த கருவூர் பசுபதீஸ்வரர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் சிரஞ்சீவி-சிவமணி-S. இராஜகோபாலன்B.A.,அவர்கள் காலத்தினால் செய்த நன்றி ஞாலத்தினும் மிகப்பெரிது. இவர்க்குக் குருநாதன் திருவருளால் எல்லா நலனும் உண்டாகுக.

இராமாமிர்தமயமான காவியத்தை இயற்றிய—கவிச் சக்ரவர்த்தி கம்பர் பெருமான் திருத்தாட் கமலங்களை கனவிலும் மறவாத கம்பராமன் என்னும் சிரஞ்சீவி. S. K. இராமராசன் அவர்கள் கண்டர் உயர்நிலைப்பள்ளியில் தம் கடமை தவறாது பணியாற்றிக் கொண்டே சுவாமிகளுடன் பழகிய அன்பர்கள் பலரை வினவியும், சுவாமிகளைப்பற்றிய பல நூல்களை மிகுந்த சிரத்தையுடன் படித்து ஆராய்ந்தும், உள்ளதை உள்ளவாறு சுவாமிகளின்சரித்திரத்தைத்தெளிவாகத் தொகுத்துக்கொடுத்தும் அச்சுப் பிரதிகளை சிரமம் பாராமல் திருத்திக் கொடுத்தும், மற்றும் இந்நூல் வெளிவரற்குப் பல்லாற்றானும் பேருதவி புரிந்தார். இவரது சான்றாண்மை என்றும் குன்றின்மேல் வைத்த நந்தா தீபமாகப் பிரகாசிக்கத் தக்கது.

பயன் தூக்கார் செய்த வுதவி நயன் தூக்கின் நன்மை கடலிற் பெரிது—என்ற தமிழ்மறை இலக்கியமாய் எவ்விதப் பயனும் கருதாது பெரும்பணியாற்றிய இவருக்கு எவ்விதக் கைமாறும் நாம் செய்வதற்கில்லை. இப்பெருந்தகைக்கு எல்லா நன்மைகளும் உண்டாக வேண்டுமாய் சச்சிதானந்த சற்குரு வள்ளல்பெருமானை மனமொழி மெய்களால் பிரார்த்தித்து வணங்குகிறேன்.

சுவாமிகள் சரித்திரமும் முன்னுரையும் அச்சுவாகனம் ஏறி அழகொடு பவனிவரற்கு ஏற்றபடி அழகுற எழுதித்தந்த சிரஞ்சீவி. முத்து மீனுட்சிசுந்தரம் B. A., B. T., அவர்கட்கு என் மனம் நிரம்பிய ஆசிகள். இந்நூலை உரியகாலத்தில் சீரிய முறையில் அச்சிட்டுக் கொடுத்த கருணைநிதி மின்சக்தி அச்சக அதிபர் சிரஞ்சீவி. T. K. குமரேசன் அவர்கட்கும், சிரஞ்சீவி. கோபாலன் அவர்கட்கும் என் ஆசிகள். இவர்கள் அனைவர்க்கும் குருநாதர் திருவருள் பொழிக!

சுவாமிகள் பக்திநெறி என்ற நூலை தஞ்சையில் இயற்றினர். அது முன்பு வெளியிடப்பட்டது. இப்போது முக்திநெறி வெளி வருகிறது. இந்நூல் ஒப்புயர்வற்றது. "சான்றோர் கவி"க்குக் கவிச்சக்ரவர்த்தி கம்பன் கூறிய இலக்கணம் இதற்குப் பொருந்தும். தமிழகம் படித்துப் பயன் பெறுக.

'பார்த்தவடி வெல்லாம் பரம்பொருளாய்ப் பார்க்கவொரு
வார்த்தையருள் மெய்ஞ்ஞான மாணிக்க மூர்த்தி
அடியார்க் கடிய னடிமலரே நாயேன்
குடியாய் இருப்பிடமாகும்

தாயுமானவரில்லம்,
கருவூர்,
16—12—60.

இங்ஙனம்,
அடியேன்,
**S. சுந்தரன்.**



# ஸ்ரீ சற்குரு துதி

(அடியார்க்கடியன் கருவூர். S. சுந்தரன்)

செங்கதிரோ னுதயத்திற் ஜெகத்தினிரு
ளென்னநினைச் சேர்ந்த வன்ப
ரிங்கிதய வஞ்ஞான விருணீக்கு
மொளிரவியே யிமையோர் போற்றச்
சங்கரனு மாலயனும் நின்பணிக்கே
முந்துவரே சகச ஞானத்
துங்கபரி பூரணமாஞ் சற்குருவே!
நினையன்றித் துணைவே றுண்டோ?

எத்தனை நா ளெத்துணைநூ லெவரிடத்துக்
கேட்டாலு மெதைக்கற் றாலு
முத்தமநின் ஹெருவாக்கிற் கெதிராமோ?
வஞ்ஞான வுலக முய்யச்
சத்துச்சித் தானந்த மொத்தவருட்
டிருமேனி தாங்கி வந்த
நித்தியநிர்க் குணவடிவே! நிராமயமே!
பராபரமே! நிமல வாழ்வே!

சொற்சுவையே விரும்பாது நாச்சுவைவேட்
டிடுமறிவில் துட்ட னேற்குஞ்
சிற்சுகத்தி லபேட்சையினை மிகையாக்கி
நினதுபதம் சேர்ப்பிப் பாயோ?
தற்சொருபந் தானுகிச் சகசநிலை
தழைத்தோங்குந் தவத்தோர் போற்றும்
நற்சிவமே வடிவான அகண்டதிருப்
பதிப்பரம! ஞான வாழ்வே!

சிவமன்றிச் சிறிதுமிலை யெனத்தெளியி
னல்லாது சீவர் யார்க்கும்
பவமன்றி வீடில்லை யெனப்பணித்தோய்!
நின்பதுமப் பதமே போற்றுந்
தவமன்றி வேறறியேன்; றண்ணருளாம்
விளக்கொளியே! சகசா னந்த
நவமன்றில் நடனமிடு மகண்டதிருப்
பதிப்பரம! ஞான வாழ்வே!

சொல்லாதி கடந்தொளிருஞ் சுகவடிவத்
திருப்பதிமெய்த் தோன்றல்! யார்க்கும்
நல்லாய்! நின் றுண்மறவா மனமுறவா
மலைதின்றேல் நமனு மன்றிப்
புல்லாதி பலவடிவும் புகுந்தியக்கி
யவ்வவற்றின் போத மாகி
யெல்லாமா யிருந்தொளிர எவருறவர்
எவர்பகைவ ரியம்புங் காலே.

பஞ்சவிந் திரியப் பாதகப் புலையர்
பாவியேன் மனத்தினைப் பறித்து
வெஞ்சமர் விடயத் தழல்நதி விடுப்ப
மெய்மறந் தயர்ந்தனன் வீணே
துஞ்சுமால் பிறவித் துயர்க்கடல் கடப்பான்
றெழுதெழுந் துன்றுணைக் கழலே
தஞ்சமென் றடைந்தார்க் கழிவில்
வீட்டின்பந் தருந்திருப் பதிக்குரு பரனே!

சித்தமும் வாக்குஞ் செயலெலா மவுனஞ்
செய்துசும் மாவிருந் துய்ய
நித்தமு நினது மருமலர்ப் பதத்தை
நீலனேற் கருளுநா ளுளதோ
முத்தமி ழோடு நாற்கவி யருளு
முழுதுணர் முனிவனே! ஞான
சுத்தவத் துவித வகண்டசிற் சொருப!
சுகதிருப் பதிக்குரு பரனே!

திருந்துமெய் யன்பர் பணிவிடை யென்றுந்
திரிகர ணத்தினுஞ் செய்து
மருந்தெனு மவர்க ளாணையி னொழுக
வஞ்சனேற் கருளுநா ளுளதோ?
வருந்துமேழ் பிறவி மலைகளைக் கடந்து
மகிழ்சுக திருப்பதி மலையி
லிருந்தர சியிற்றுஞ் சச்சிதா னந்த
இறைத்திருப் பதிகுரு பரனே.

ஓம்
திருப்பதி தேசிகர் சேவடி வாழ்க!

# ஸ்ரீ சற்குரு திருப்பதி சுவாமிகள் சரித்திரம்.

கானல்நீர் என்னும் காசினி வாழ்வே
கதியெனக் கதிகிலை மறந்த
தீனனேற் கிரங்கி யருள்வதுன் பரமே;
திருப்பதித் தேசிகன் என்னும்
ஞானகு ரியனே! சாந்தசந் திரனே!
நலம்பொழி கருணைமா முகிலே!
மோனநா யகனே! ஆனந்தக் கடலே!
முற்றிய அனுபவ மலையே! (சுந்தரஞ் செட்டியார்)

திங்கள் சூடிய பரம்பரன் திகழ்எழு தலத்தால்
கங்கை யிற்பெரும் புனிதமார் காவிரித் துறையாற்
றுங்க மார்சிவ யோகியர் தோன்றிய தொடர்பாற்
கொங்கு நாடுமுத் தலத்தினும் குலவுசீர் பெறுமால்.

**கொங்குநாடு:—** காவிரியும், தென்பெண்ணையும், பாலாறும், வையையும், பொருனையும்—பாய மேனி செழிப்புற்றுப் பொலிவது தமிழகம். தமிழகம் சேரநாடு, சோழநாடு, பாண்டிய நாடு என்ற மூன்று பகுப்பினைக் கொண்டது. சேரநாட்டின் ஒரு பகுதியாக விளங்குவது கொங்கு நாடு. கொங்கு நாடு பசுவளமும், பால் வளமும் மிகப்பெற்றது என்று சங்க இலக்கியம் கூறுகின்றது.

**அரவக்குறிச்சி:—** இக் கொங்கு நாட்டில் கருவூரை அடுத்து அரவக்குறிச்சி என்னும் பதி உள்ளது. அப்பதியையடுத்து நன்காஞ்சி என்னும் நதி ஓடுகிறது. அப்பதி பழநிக்குச் செல்லும் அன்பர்களின் திருவடித் தூளியால் புனிதம் பெற்றது. அங்கு வாழ்பவர்கள் வேளாண்மைத் தொழில் புரிபவர்கள்; கடவுள் பக்தி நிரம்பியவர்கள். பிறர்க்கு உதவிபுரிவதில் ஆர்வமுடையவர்கள்.

**தாய் தந்தையர்:–** அரவக்குறிச்சியில் சுப்பிரமணிய முத்தரசர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் நற்குணமும் நல் ஒழுக்கமும் வாய்ந்தவர். கடவுட் பற்றுடையவர். விருந்தினரை உபசரிப்பதில் மிக்க ஆர்வமுடையவர். இவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த அம்மையார் வெள்ளையம்மாள் என்னும் கற்பரசி. இவ்வம்மையார் சிறந்த பண்பு வாய்ந்தவர். கணவனையே தெய்வமெனக் கருதும் பெற்றியினர்.

சுப்பிரமணிய முத்தரசரும், வெள்ளையம்மாளும் இல்லறத்தை இனிதே நடாத்தினர். பசுநிரை காத்தல், தேவபூசை செய்தல், ஆதுலர்க்கு அன்னம் கொடுத்தல் முதலிய அறங்களை முறையாகச் செய்து வந்தனர்.

முத்தரசரும், வெள்ளையம்மாளும் "ஆடினர்க்கென்றும் பாடினர்க்கென்றும் வாடினர்க்கென்றும் வரையாது கொடுத்து வாழ்ந்த காலத்தே பதினைந்தாவது திருக்குமாரராய், திருப்பதி சுவாமிகள் (கி. பி. 1873—கலியுகாதி 4975) திருவவதரித்தனர். நம் சுவாமிகள் அவதரித்ததால் ஆண்டுகளுக்குள் ஸ்ரீமுக ஆண்டும், மாதங்களுக்குள் மார்கழி மாதமும், வாரங்களுக்குள் புதவாரமும், திதிகளுக்குள் அமரபட்ச திரயோதசியும் (45-33) நட்சத்திரங்களுக்குள் விசாக நட்சத்திரமும் (14-5) கடிகைகளுக்குள் அமிர்த கடிகையும், லக்கினங்களுக்குள் கும்ப லக்கினமும் புனிதம் பெற்றன.

தமிழ் நாடு செய்த தவப்பயன் வெள்ளையம்மாளின் மணி வயிற்றில் 'திருப்பதி சுவாமிகள்' என்னும் பெயரோடு பிறந்தது. பிறந்த சுவாமிகளின் அழகைக் கண்டு தாய் தந்தையர் பூரித்தனர். 'மேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக் கமலங்களும், வாக்கும், நயனமும், வாயும் முறுவலும்' கண்டு கண்டு பெற்றோர் பேரின்ப முற்றனர்.

நம் சுவாமிகள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தனர். 'குறு குறு நடந்தும், சிறுகை நீட்டியும், இட்டும் தொட்டும், கவ்வியும் துழந்தும், நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்' பெற்ற தாய் தந்தையர்க்குப் பேரின்பம் தந்தனர். தாமரையால் பொய்கையும், சந்திரனால்

வானமும், ஞானத்தால் ஆன்மாவும் பிரகாசம் பெறுவதைப்போல் நம் சுவாமிகளின் சார்பால் முத்தரசர் இல்லம் நிரம்பிய பொலிவும் விளக்கமும் பெற்றது.

**பால் உண்ணுமை:-** நம் சுவாமிகள் பிறப்பிலேயே ஞானி. சுவாமிக்கு இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலமும் தெரியும். ஆனுல் தெரிந்ததாகவே காண்பித்துக் கொள்ள மாட்டார். மல்லிகையை ஆடை கொண்டு மறைத்தாலும், அதன் மணம் புறத்தே தெரிவது போல்—சுவாமிகள் எவ்வளவு தூரம் தம்மை மறைத்துக் கொண்டாலும் அவருடைய இறைமைத் தன்மை கூர்த்த அறிவினர்க்குத் தெரியாமற் போகாது. இதற்கு ஒரு சான்று காண்போம்.

நமது சுவாமிகளின் பெற்ருேர்கள் புலால் உண்பவர்கள். மாதத்திற்கு இரண்டொரு நாள் புலால் இன்றி இருக்கமுடியாது. அது பரம்பரையாக வந்த பழக்கம். வெள்ளையம்மாள் புலால் உண்ட அன்று சுவாமிகள் பால் உண்பதில்லை. வற்புறுத்திக் கொடுத்தாலும் ஏற்பதில்லை. சுவாமிகள் பால் உண்ணுத நாட்களில் தாயாரின் மனம் உருகும். ‘‘ஐயோ! குழந்தை பால் குடிக்கவில்லையே! பசியோடு இருக்கிறதே! எவருடைய கண்ணுயினும் பட்டிருக்குமோ! உடல் நலத்தில் ஏதாவது குறை இருக்குமோ!’’ என்று நினைந்து நினைந்து வருந்துவார்.

பாலுண்ண வில்லை பசித்தழவோ தானுமில்லை
மேலுண்பான் என்ருல் விழியுந் திறக்கவில்லை
உச்சி குளியவில்லை உள்ளங்கால் வேர்க்கவில்லை
அச்சங்கை யுண்டா மரிவையரிங் கெய்தவில்லை
மறுகியன்னை நின்று மயங்கினுற் சற்றே
குறுமூரல் செய்யும் குழவியையும் கண்டதுண்டோ.

(தாலாட்டு)

எற்று கூறி ஏங்குவார். ஒரு முறை சுவாமிகள் பால் உண்ணுது இருந்தபோது வெள்ளையம்மாள் சுவாமியைத் திருமலை வைத்தியர் என்பவரிடம் காண்பித்தார். அவர் குழந்தையைப் பரிசீலனை செய்து குழந்தையின் உடல் நலமாகவே உள்ளதென்றும், பால் உண்ணுமைக்கு வேறு காரணம் இருக்கவேண்டும் என்றும்

கூறினர். பால் உண்ணாத நாட்களில் வீட்டில் ஏதேனும் விசேடம் நிகழ்வுதுண்டா என்று கேட்டனர். அம்மையார் எந்த விசேடமும் நிகழ்வதில்லை என்று கூறினார்.

திருமலை வைத்தியர் வெறும் வைத்தியர் மாத்திரமன்று. சிறந்த வேதாந்தி. ஆகையால் குழந்தை பால் உண்ணாத காரணத்தைக் கண்டுபிடித்தார். சுவாமிகள் பால் உண்ணாத காரணத்தை அறிந்ததிலிருந்து பெற்றோரும் வீட்டில் உள்ள அனைவரும் புலால் உணவை நீக்கிச் சைவராயினர். இது அற்புதமல்லவா?

இந்நிகழ்ச்சி சுவாமிகளின் ஞான பரிபக்குவத்தை வெளிப்படையாகக் காட்டுகிறது. சில பச்சிலைகள் வயது வந்து முற்றிய பிறகே மணம் பெறும். திருத்துழாய் சிறிய செடியாக முளையாக இருக்கும் போதே மணம் வீசும். நம் சுவாமிகள் திருத்துழாய் போன்று இயல்பிலேயே ஞானம் பெற்றவர்கள்.

"கருவரங்கத் துட்கிடந்தே கைதொழுதேன் கண்டேன்
திருவரங்க மேயான்திசை"

என்ற பொய்கையாரின் வாக்கு நம் சுவாமிகளுக்கும் பொருந்தும்.

**கல்வி:—** நம் சுவாமிகள் 5-ஆம் ஆண்டிலே ஆரம்பப் பள்ளியில் சேர்க்கப்பட்டார். இயல்பிலேயே கூர்த்த அறிவும், குணநலங்களும் வாய்க்கப் பெற்ற நம் சுவாமிகள் கல்வித் திறமையாலும் அடக்கத்தாலும் ஆசிரியரின் அன்புக்குப் பாத்திரர் ஆனார்.

நம் சுவாமிகளுக்கு ஆரம்பப் பள்ளியில் பயிலும்போதே கடவுள் ஆராதனையில் ஈடுபாடு உண்டாயிற்று. பள்ளியில் படிக்கும் நேரம் போக மற்ற நேரங்களில் தம் இளைய சகோதரர் ஆகிய இராமலிங்க முத்தரசருடன் கற்களை விக்கிரகங்களாக வைத்து வழிபாடு செய்வார். அவல், கடலை, சர்க்கரை முதலிய நிவேதனங்களை ஆண்டவனுக்குப் படைத்து வீதியில் போவோர் வருவோர்க்கு விநியோகிப்பது சுவாமிகளின் வழக்கம்.

இளமையிலிருந்தே சுவாமிகள் தீயவருடன் சேராமலும் தீயனவற்றைப் பேசாமலும், தீயனவற்றைச் சிந்திக்காமலும் பழகி

வந்தனர். இப்பழக்கம் இவருக்கு ஓர் உறுதியான கவசமாக இருந்து வந்தது.

**விநாயக உபாசனை:-** அரவக்குறிச்சியிலிருந்து கருவூர்க்குச் செல்லும் பாதையில் சுவாமிகளின் தந்தையாரின் தோட்டம் இருந்தது. அத் தோட்டத்தில் நாவல்மரம் ஒன்று உண்டு. அந்த நாவல் மரத்திற்குக் கிழக்குத் திசையில் ஒரு விக்கினேசுவரர் கோவிலும், சத்திரமும் கட்டப்பட்டிருந்தன. நம் சுவாமிகள் அங்கு அடிக்கடி சென்று வருவார். விநாயகப் பெருமானை உளங்குளிர வணங்குவார். அபிஷேகம் செய்வார்; பூமாலை சூட்டுவார்; ஆராதனை செய்வார். கடமைக்காக பூசை செய்யாமல் பக்தியால் உருகிப் பூசை செய்தமையால் விநாயகப் பெருமான் உளங் குளிர்ந்தான். ஒரு நாள் நம் சுவாமிகள் விநாயகரை வழிபாடு செய்துவிட்டுத் தியானத்தில் அமர்ந்தனர். அத் தியானம் நிர்விகற்ப சமாதியிற் கொண்டுபோய் விட்டது. இந்நிர்விகற்ப சமாதியைப் பெற பெரிய பெரிய யோகியர் பல்லாண்டு பல்லாண்டு முயன்றும் அடைய முடியாமல் வருந்தியது உலகறிந்த செய்தி. நம் சுவாமிகட்கோ அது விநாயகப் பெருமான் திருவருளால் எளிதே கை கூடிற்று. இந்நிர்விகற்ப சமாதி நிலை சுவாமிகட்குச் சகச சமாதியாக எப்போதும், நீங்காமல் இருந்து வந்தது. ஆகையினால் தான் சுவாமிகளின் நூலில் எங்கும் பேதம் காணமுடிவதில்லை.

> "எங்கும் சிவமயமாய் எங்கும் திருநடமாய்
> எங்குமது தானாய் இருப்பதாய்"

விளங்கும் ஞானிகள் பேதத்தைக் கருதுவார்களா? கருதத்தான் இயலுமா? சுவாமிகள் தமக்கு இத்தகைய நிலை வந்ததை யாரிடமும் கூறியதில்லை.

**இலக்கியப்பயிற்சி:-** நம் சுவாமிகள் ஆரம்பப் பள்ளியில் ஆறும் வகுப்புவரை பயின்றார்கள். பிறகு இலக்கண இலக்கியங்களைக் கற்கவேண்டும் என்னும் வேட்கையுண்டாயிற்று. இவருக்கு எழுந்த வேட்கையைத் தணிக்க இறைவன் கருதினான். இறைவன் கருத்துப் பழுதுருவண்ணம் தக்க ஆசிரியர் ஒருவர் கிடைத்தார். அவர் யார்? அவர்தான் நல்ல மாகாளிப்பட்டி

தெய்வசிகாமணிக் குருக்கள். அவர் குருக்கள் மரபில் பிறந்தவர். இலக்கண இலக்கியங்களை முறையாகப் பயின்றவர். செய்யுள் இயற்றும் ஆற்றல் வாய்ந்தவர். முதன் முதலில் 'ரிபுகீதை' என்ற நூலை அச்சிட்டு வெளியிட்டவர். அவர்பால் நம் சுவாமிகள்

"பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன்குறிப் பிற்சார்ந்து
இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன ஆர்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்து" (நன்னூல்)

கல்வி கற்பாராயினர். நம் சுவாமிகள் தெய்வசிகாமணிக் குருக்களிடத்தில் நன்னூல், காரிகை, தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, இராமாவதாரம், பாரதம், திருவிளையாடற் புராணம், பெரிய புராணம் போன்ற இலக்கியங்களையும் பயின்று தமிழ்க் கடலாக விளங்கினர். குருக்களிடத்தில் தெய்வ உபாசனைக்குரிய மந்திரோபதேசமும் பெற்றுக்கொண்டார். ஆங்கிலத்திலும், வடமொழியிலும் கூட நம் சுவாமிகளுக்கு ஓரளவு புலமை உண்டு சுவாமிகள் கற்ற கல்வியை

"சின்னஞ் சிறுவயதில் செந்தமிழும் ஆங்கிலமும்
நன்னூல் இலக்கியமும் நாகரமும்—மன்னமன்ன
தெய்வ சிகாமணியன் தேசிகன் பாலுணர்ந்து"

என்று யுக்தி சாகரச் சிறப்புப் பாயிரம் கூறுகிறது.

**கனவுக் காட்சி:—** இலக்கண இலக்கியம் பயின்ற பின் நம் சுவாமிகளுக்கு மெய்ப்பொருளைக் காணவேண்டும் என்னும் வேட்கை உண்டாயிற்று. கருவி நூற் பயிற்சியால் மட்டும் மெய்ப் பொருளைத் தெரிந்து கொள்ள முடியாது. ஞான நூல்களையும் கற்கவேண்டும். அதற்குரிய குருநாதர் எப்போது வருவாரோ என்று சிந்தித்த வண்ணம் இருந்தனர்.

வேத வாகமச் சென்னியில் விளைபொருள் அபேதம்
பேத மாகிய பிணக்கறுத் திருட்பிணி யவிழ்த்து
நாத ஞகிய தன்னையும் என்னையும் நல்கும்
போத ஞகிய குருபரன் வ்ருவதெப் போதால்

கரவி லாதபே ரன்பினுக் கெளிவருங் கருணைக்
குரவ ஞரரு ளன்றியிக் கொடியவெம் பாசம்
புரையில் கேள்வியாற் கடப்பது புணையிஞ லன்றி
உரவு நீர்க்கடல் கரங்கொடு நீந்துவ தொக்கும்.
(திருவிளையாடல்)

என்று நினைந்து நினைந்து வருந்துவாராயினுர்.

நம் சுவாமிகள் ஞான தேசிகரைத் தேடிய வண்ணமாய் வாழ்ந்த காலத்தில் எம்பிரான் திருவருள் செய்ய நினைத்தான் அத் திருவருள் சுவாமிகளின் கனவாகத் தோன்றி நனவாகப் பலித்தது. ஓர் நாள் சுவாமிகள் வழக்கம் போல்,

கையால் தொழுதுன் கழற் சேவடிகள்
கழுமத் தழுவிக் கொண்டு
எய்யாது என்றன் தலைமேல் வைத்து
எம்பெருமான் பெருமான் என்
றையா என்றன் வாயால் அரற்றி
அழல்சேர் மெழு கொப்ப
ஐயாற் றரசே! ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே! (திருவாசகம்)

என்று நினைந்து தூங்குவாராயினர். தூக்கத்தினிடையே ஒரு முனிவர் காட்சியளித்தார். அந்த,

" சுந்தர முனிவன் சிந்துர நுதலும்
கருணை யலையெறிந் தொழுகும் கண்ணும்
வாரிசம் போல மலர்ந்த வதனமும் "

கண்டு சுவாமிகள் அடியற்ற மரம் போல் வீழ்ந்து வணங்கிஞர். கனவில் காட்சியளித்தமுனிவரர்சுவாமிகளைத்தழுவிக்கொண்டார்.

பிறகு " தேன் ததும்பித் தித்தித்தமுதூறி, தான் தெளிந்து ஊன் தங்கி நின்று உருக்கும்" திருவடித் தீட்சை செய்து உபதேசித்தனர். அவ்வுபதேசம் பெற்றதும் சுவாமிகள்—எதை உணர வேண்டும் என்று வேதங்கள் முறையிடுகின்றனவோ—அதை ஒரு நொடியில் உணர்ந்து கொண்டார். முனிவரர் " அற்புதமான அமுத தாரைகளை எற்புத்துளை தொறும்" பாய்ச்சினர். சுவாமிகள் பரமானந்தத்தில் இருந்த போது முனிவரர் மறைந்து விட்டார். இந்நிலையில் நம் சுவாமிகள் விழித்துக் கொண்டனர். விழித்தவுடன் எல்லாம் வெறுங் கனவாகப் போயிற்றே என்று வருந்திப் புலம்பினர்.

முத்தா உன்றன் முகவொளி நோக்கி
முறுவல் நகை காண
அத்தா சால ஆசைப் பட்டேன்

என்று கூறி அரற்றுவாராயினர். உபதேசித்த பெருந்தகையின் ஊரறியேன்! பேரறியேன்! உறவறியேன்! அந்தோ என் செய்வேன்! தம்மானை அறியாத சாதியார் உளரோ? என்று கூறி நைந்தார்.

சுவாமிகள் முனிவரரைக் கனவிற் கண்ட நாளிலிருந்து அவர் வடிவையே தியானித்து வருவாராயினர். எத் தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனம் இருக்கும் மோனத்தேஎன்பர். நம் சுவாமிகள் உண்ணும் போதும்,உறங்கும் போதும் விநாயகருக்கு ஆராதனை செய்யும் போதும் அன்பர்களுடன் பேசும் போதும் கனவிற் கண்ட முனிவரையே எண்ணி எண்ணி ஏங்கி வந்தனர். தத்துவராயரை அவருடைய ஆசாரிய மூர்த்தி " குருவுக்கு வீங்கி " என்றூராம். அது நம் சுவாமிகள் திறத்தில் நூற்றுக்கு நூறு உண்மை.

**தீர்த்தயாத்திரை:—** வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை கண்ட தாயுமானவர் குருவைப் பெறுவதற்கு ஒரு வழி கூறி உள்ளார். குருவைப் பெற வேண்டும் என்பவர் மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய்த் தொழ வேண்டும். தொழுதால் வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்கும் என்றூர். நம் சுவாமிகள்

ஒரு வில் வீரன்.
துன்றி எழுபது வெள்ளம் குரங்கின் சேனை
சூழ்போத, வாய்த்த திருத் துணைவரோடும்
சென்ற வழி, இன்று அளவும் துளவம் நாறும் (பாரதம்)

சேது முதல்

திங்களுடன் அரவு உறவு செய்யும் வேணிக்
கொந்தவிழும் மலர்இதழித் தொடையோன் வைகும்
கொடி மதில் சூழ். (பாரதம்)

இமயம் வரை உள்ள தலங்களுக்குச் சென்று தீர்த்தங்களில் நீராடியும் மூர்த்திகளைத் தரிசித்தும் கடைசியில் திருவையாற்றிற்கு வந்தனர். திருவையாறு, சிவபெருமான் எழுந்தருளியுள்ள தலங்களுக்குள் மிகச் சிறப்புடையதாகும். நால்வர்களின் நறுந்தமிழ் கேட்டு செம்பொற் சோதியும், அறம் வளர்த்த நாயகியும் பேரின்பத்தோடு அங்கு வீற்றிருக்கின்றனர். சங்கீதத்திற்கு உயிரளித்த தியாகையர் பிறந்ததும் அவ்வூரே.

**சற்குரு தரிசனம்:-** இத்தகைய புகழ் வாய்ந்த திருவையாற்றுக்கு வந்த போது நம் சுவாமிக்கு நன்னிமித்தங்கள் தோன்றின. உள்ளத்தே என்றுமில்லாத ஆனந்தம் உண்டாயிற்று. திருவையாற்றுக்குச் சென்ற மறுநாள் நம் சுவாமிகள் காவிரியில் குளித்துவிட்டு கோவிலின் தெற்குப் பக்கம் எழுந்தருளியுள்ள ஆட்கொண்டாரைப் பணிந்து கொண்டு இருக்கும்போது எதிரே பல மாதங்கட்கு முன் கனவில் தோன்றிய முனிவரரைக் கண்டார். கண்டதும் முற்றும் மறந்து முனிவரின் திருவடியில் வீழ்ந்து பணிந்தார்.

அம்முனிவரர் யார்? அவர்தான் பிரம்ம ஸ்ரீ சுயம்பிரகாச சிவானந்த சுவாமிகள். சுயம்பிரகாசர் அந்தணர் குலத்தில் பிறந்தவர். வடமொழியையும் தென் மொழியையும் முறையாகப் பயின்றவர். பிரம்ம சாட்சாத்காரம் பெற்றவர், பக்குவம் பெற்றவர்க்கே உபதேசம் செய்பவர். அவரைக் குருவாகப் பெற, பலர் முயன்றும், அவர்களையெல்லாம் வேண்டாம் என்று ஒதுக்கியவர். அவரும் பல மாதங்கட்கு முன் திருப்பதி சுவாமிகட்கு தாம் உபதேசம்செய்வதாகக் கனவு கண்டார். சிறந்த சீடரை

அவரும் எதிர்நோக்கியவண்ணமாக இருந்தார். இந்நிலையில் தன்னை வணங்கிய சுவாமிகளைப் பார்த்ததும், சிவானந்தர், 'வந்துவிட்டாயா?உன்னைத்தான் எதிர்பார்த்திருந்தேன்' என்றார்.

களித்துக் கலந்ததோர் காதற்
கசிவொடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் நின்றஇப்
பத்தரைக் கோதில் செந்தேன்

தெளித்துச் சுவையமுதூட்டினார் சிவானந்தர். கடலையடைந்தது காவிரி. அன்று முதல் நம் சுவாமிகள் சிவானந்தருக்குப் பணிவிடை செய்து வருவாராயினர். தலைவனை அடைந்த தலைவியைப் போலவும், தாய் மடியடைந்த சேயைப் போலவும் மிக்க இன்பம் உற்றனர்.

தம் மாணாக்கரின் பண்பையும் சீலத்தையும் கண்டு, சிவானந்தர் மிக்க மகிழ்ச்சியடைந்து, மகாவாக்கிய உபதேசம் செய்தனர். அதனால் நமது சுவாமிகள் 'அபரோட்ச' அனுபவம் பெற்றனர். நம் சுவாமிகள் உற்றாரை மறந்து, ஊரை மறந்து, பல மாதங்கள் திருவையாற்றிலே வாழ்வாராயினர்.

**அரவக்குறிச்சி வாசம்:-** சுவாமிகள் தீர்த்த யாத்திரைக்குச்சென்று நீண்ட நாட்களாகியும் வாராமையால் முத்தரசரும், வெள்ளையம்மாளும் மிகக் கவலையுற்றனர். தெய்வசிகாமணிக் குருக்கள் சுவாமிகள் இருக்குமிடம் தெரிவித்தமையால் வெள்ளையம்மாள் திருவையாற்றுக்குச் சென்று முனிவரரின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி அழுதனர். தம் புதல்வரைத் தம்மோடு அனுப்ப வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். கருணை வள்ளலான ஸ்ரீசிவானந்தர் திருப்பதி சுவாமியைப் பார்த்து

ஈன்று வளர்த்த தாய்தந்தைக்
கெவரே கைம்மா றியற்றிடுவோர்?
ஆன்ற மதலை நூறுவய
தளவும் அடிமைத் திறம்பூண்டு
மூன்று புவனத் துள்ளபொருள்
முற்றும் அளித்து முறைமுறையே
ஏன்று வழிபா டியற்றிடினும்
ஒருநாள் வளத்தற் கியலாதே-என்றும்
(தனிப்பாடல்)

அன்னையா னவள்தா னைக்கும்
அதிகம்; அன்னையும் பிதாவும்
முன்னையோர் தெய்வம் என்ற
மொழிக் கெவர் முதன்மை பூண்டார்?
பின்னொராச் சிரமத் தேகிப்
பிதாவையும் வணக்கம் கொள்ளும்
சன்னியா சிகளும் வந்தத்
தாயரைத் தொழுவ ரன்றே

(பிரபோத சந்திரோதயம்)

என்றும் சாத்திரங்கள் கூறுகின்றன, ஆகையால் "நீ சென்று தாய் தந்தையருக்குப் பணிவிடை செய்து பிறகு வருக" என்று பணித்தனர். குருவின் கட்டளையைத் தள்ள முடியாத நிலையில் சுவாமிகள் தாயாரோடு அரவக்குறிச்சிக்கு வந்து வாழ்ந்து வருவாராயினர்.

**குருநாதரின் பிரிவு:-** சுவாமிகள் அரவக்குறிச்சியில் விநாயகப் பெருமானுக்கு வழிபாடு செய்தும், முனிவரரின் உபதேசங்களைத் தியானித்தும் வாழ்ந்து வருவாராயினர். இங்ஙனம் சுவாமிகள் இருந்த போது திருவையாற்றில் ஸ்ரீ சிவானந்தர் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினர். இஃது அறிந்த சுவாமிகள்

உலையா அன்பு என்புருக ஓலம் இட்டு
அலைகடல் திரையின் ஆர்த்து ஆர்த்து ஏங்கி
தலைதடுமாறி வீழ்ந்து புரண்டு அலறி வருந்தினர்.

தம்மை ஆட்கொண்ட பெருமான் மறைந்ததும், மாணிக்கவாசகர்

வஞ்சவினைக் கொள்கலமாம் உடலைத் தீவாய்
மடுக்கிலேன்; வரையுருண்டு மாய்ப்பே னல்லேன்;
நஞ்சொழுகு வாளாலும் குறைப்பே னல்லேன்
நாதனே அதுவும்நின துடைமை யன்றோ!
அஞ்சினேன் தானேயும் அழியா தாவி
ஐயனே! நினைப்பிரிந்தும் ஆற்ற கில்லேன்;
என் செய்கோ! என்செய்கோ எந்தாய்

(திருவிளையாடல்)

என்று புலம்பினாற் போல சுவாமிகள் கண்ணீர் விட்டுக் கதறினர்.

சுவாமிகள் சிவானந்தரிடம் அன்பு பூண்டமையை,

அய்யாற்றி னருளிறைசி வானந்த வாரிதியி
னடிக்கண் சார்ந்து
மெய்யாற்றின் மரபு சுயம் பிரகாச
வள்ளலென மிளிர்வோய் வாழ்க

என்று கருவூர் திரு. சுந்தரஞ் செட்டியார் அவர்கள் " திருப்பதி தேசிகர் பாமாலையில் கூறியுள்ளனர். குருநாதரின் பிரிவாற்றுமல் சுவாமிகள் பாடியதே குருமான்மியம். இக் குருமான்மியம் பக்தி நெறியின் தொடக்கத்தில் சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வமயம் சுவாமிகளின் இளைய சகோதரர் இராமலிங்க முத்தரசரின் பத்தினியார் ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தனர். சுவாமிகள் அக் குழந்தைக்குத் தனது ஞான தேசிகரின் திருநாமத்தையே சூட்டினர். சுவாமிகள் ஸ்ரீ சிவானந்தரின் உபதேசம் பெற்றதில் இருந்து வீட்டுக்குப் போவதில்லை. பிள்ளையார் கோவில் மடத்தில் தான் தங்கியிருப்பார். இராமலிங்க முத்தரசர் வீட்டிலிருந்து ஆகாரங்கள் கொண்டுவரப்படும். வெளியில் எங்கும் செல்லாமல் மடத்திலிருந்து கொண்டே நூல்களை ஆராய்ந்தும், விநாயகருக்குப் பணிவிடை புரிந்தும் வாழ்ந்த நம் சுவாமிகள் தமிழகத்திற்குச் செய்த தொண்டுகள் சாலச் சிறந்ததாகும். இவ்வமயத்தில் தான் நம் சுவாமிகளால் விநாயகரின் திருவருள் வழிகாட்ட—வேதாந்த சாரமான பல நூல்கள் இயற்றப்பட்டன.

ஞான லோகம், முத்திநெறி, சிவசூத்திர விமர்சனி, பழமொழிப்போதம், வித்யாகீதை, திருநாமமாலை, தேவிதோத்திரம் தட்சிணாமூர்த்தி தோத்திரம் முதலான நூல்கள் சுவாமிகளால் திருவாய் மலரப்பட்டன. இந்நூல்களுக்கு விரிவுரையும் விளக்கவுரையும் சுவாமிகளாலேயே பின்னர் இயற்றப்பட்டன. இவ்வமயத்தில்தான் திரு. T K. இராமசாமி நாயுடு, (மண்டி, கரூர்) திரு. V. R. துரைசாமி நாயுடு, (இரும்பு வியாபாரம், கரூர்) திரு. ரெ. வேங்கடசாமி நாயுடு, (வாங்கல், பழையவூர், கரூர் வழி) திரு. கோ. தெ. இராமசாமி முதலியார், (திருவள்ளுவர் நிலையம், கருவூர்) திரு. C கிருஷ்ணசாமி நாயுடு, (பனியன் பாக்டரி, கரூர்)

திரு. சுந்தரஞ் செட்டியார், (நெய்க்கடை,கரூர்,) அத்திக்கோம்பை சுவாமிகள் முதலானவர்கள் நம் சுவாமியை அணுகி உபதேசம் பெற்றனர்.

இக்காலத்தில் சுவாமிகளின் இருமுது குரவரும் சிவபிரான் திருவடிநீழல் அடைந்தனர். குடியிருந்த வீட்டிற்குக் கொள்ளி வைக்கவேண்டிய கடமை நிறைவேறியதும் சுவாமிகள் வீட்டை விட்டு வெளியேறுவதற்கேற்ற சந்தர்ப்பம் நோக்கியிருந்தனர். சந்தர்ப்பமும் வந்தது.

ஒரு நாள் இரவு 12 மணிக்குச் சுவாமிகளின் சகோதரர்கள் அனைவரும், சுவாமிகள் இருக்கும் மடத்திற்கு வந்தனர். சுவாமிகள் 'இந்த அகாலத்தில் எதற்காக வந்தீர்கள்? இன்றியமையாத செய்தி ஏதேனும் உண்டா?'' என்றனர். சகோதரர்கள், 'நிலம் பாகப்பிரிவினை செய்வதில் எங்களுக்குள் தகராறு. தாங்கள்தான் தீர்க்கவேண்டும். இதனால் நாங்கள் கலக்கமடைந்துள்ளோம்'என்றனர். சுவாமிகள் எல்லாவற்றையும் கேட்டு, எல்லோரும் திருப்தியுறும்படி பாகப்பிரிவினை செய்து 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு' என்ற தத்துவத்தை உணர்த்தியதோடு தமக்கு நிலத்தில் சிறுபாகமும் வேண்டாம் என்று கூறிவிட்டனர். பகையுடன் வந்தவர் நட்புடன் திரும்பினர்.

**விருத்தாசல வாசம்:–** சுவாமிகளுக்கு இனி ஊரில் இருப்பது நன்றன்று என்று உள்ளுணர்வில் ஒரு தோற்றம் உண்டாயிற்று. பாகப் பிரிவினை செய்த அன்று சுவாமிகள் விடியற்காலையில் எப்போதும்போல் 4½ மணிக்கு எழுந்தார். விநாயகப்பெருமானைப் பணிந்தார். பணிந்து சற்றே நின்றார். உற்றாரையும், உறவினரையும், ஊரையும் விட்டுப் பிரிவதில் வருந்தாத சுவாமிகள் விநாயகப்பெருமானை விட்டுப் பிரியும்போது சற்றே மனக்கலக்கம் உற்றனர். 'அண்ணலே! யான் போய் வருகிறேன். ஒன்றுமறியாக் காலத்தே என்னை உயர்த்திய உன்னை விட்டுப்பிரிய மனம் வரவில்லை. நாய்க்குத் தவிசிட்டது போல் எனக்குச் சிறந்த பதவியை தந்த உன்னை என்றும் மறவேன்'' என்று விநாயகப்பெருமானை நோக்கிக் கூறினார். விநாயகப்

பெருமான் திருவருள் வழிகாட்ட அரவக்குறிச்சியை விட்டுப் புறப்பட்ட சுவாமிகள் சுமார் 10 நாட்களில் விருத்தாசலம் அடைந்தனர். அப்போது சுவாமிக்கு வயது 40.

சுவாமிகள் விருத்தாசலத்தில் ஆழத்துப் பிள்ளையார் கோவிலில் நிர்விகற்ப சமாதியில் இருந்து வருவாராயினர். விநாயகரின் திருவருளால் நம் சுவாமிகளின் ஞானமதி பூரணம் பெற்றது. சுவாமிகள் 4 மணிக்கு எழுந்து மணி முத்தாற்றில் தீர்த்தமாடி விட்டுத் திருநீறு பூசி தூய ஆடை தரித்துப் பழமலை நாதனையும் விருத்தாம்பிகையையும் பணிவார். ஆழத்துப் பிள்ளையார் கோவிலுக்குப் போய்,அங்கு பத்மாசனத்தில் அமர்ந்து தியானம் செய்வார். சரியாக மத்தியானம் 2 மணிக்கு தியானத்திலிருந்து விழித்து சைவத் தெருவிற்குச் சென்று மேல் துண்டில் பிச்சை ஏற்று மணிமுத்தாற்றிலே சென்று உண்பார். உண்டபின் ஆடையை ஆற்றிலே கழுவி விட்டு மீளவும் விநாயகர் கோவிலுக்கு வந்து ஆன்ம விசாரம் செய்வார்.

**கருவூர் வாசம்:—** சுவாமிகள் அரவக்குறிச்சியில் இருந்த போது கருவூர் அன்பர்கள் சிலர் சுவாமிகளிடம் சென்று கண்டு உரையாடி விட்டு வருவார்கள். அவர்கள் சுவாமிகள் ஊரை விட்டுப் போய் விட்டார் என்று கேள்விப்பட்டு மிக்க வருத்தமுற்றனர். சில வாரத்திற்குப் பின் சுவாமிகள் விருத்தாசலத்தில் இருப்பதை அறிந்து, அங்கு சென்று சுவாமிகளை கருவூருக்கு வரும்படி அன்பர்கள் அழைத்தனர். சுவாமிகள் அரவக்குறிச்சிக்குத் தம்மை அனுப்பாமல் இருந்தால், கருவூருக்கு வருவதாகக் கூறினர். அதற்குடன்பட்ட அன்பர்களுடன் கருவூருக்கு வந்தனர். அவருடைய திருவடித் தூளியால் கருவூர் புனிதம் பெற்றது.

சுவாமிகள் கருவூரில் பசுபதி முதலியார் சத்திரத்தில் தங்கியிருந்தனர். அப்போது சுவாமிகளை அடைந்து, வேதாந்த பாடம் கேட்டுக்கொண்டவர் பலர். சொரூப சாரம் என்ற நூலை இரண்டு அந்தணர்கள் கேட்டுக்கொண்டனர். ஸ்ரீ சுந்தரம் செட்டியார் அத்திக் கோம்பை சுவாமிகள் முதலானவர்கள் சுவாமிகளுக்கு அணுக்கத் தொண்டர்களாக

இருந்து பணிவிடை புரிந்து வந்தனர். சுவாமிகள் கருவூரிலிருந்த போது 4 மணிக்கு எழுந்து விடுவார். அமராவதிக்குப் போய்த் தீர்த்தமாடி விட்டு, திருநீறு புனைந்து பிரம்மசாட்சாத்காரத்தோடு பசுபதீஸ்வரர் கோயிலை அடைந்து பிரானையும் பிராட்டியையும் வணங்குவார். மத்தியானம் 1 மணிக்கு திருவள்ளுவர் நிலையம் இராமசாமி முதலியார் வீட்டிலிருந்தாவது, நெய்க்கடை சுந்தரம் செட்டியார் வீட்டிலிருந்தாவது நம் சுவாமிகளுக்குத் திருவமுது வரும். வந்த அமுதை உண்ட பிறகு 3 மணிவரை ஓய்வு எடுத்துக் கொள்வார்கள். 3 மணிக்கு மேல் 6 மணி வரை அன்பர்கள் வந்து சந்தேகம் கேட்டால் நிவர்த்தி செய்தும், யாரும் இல்லை என்றால் முன்பு எழுதிய நூல்களுக்கு உரை எழுதியும் காலத்தை நன்முறையில் போக்கி வருவார்.

**சந்தனக் குச்சி:-** சுவாமிகட்குத் தினந்தோறும் நெய்க் கடை சுந்தரம் செட்டியார் அவர்கள் ஆலம் விழுது தருவது வழக்கம். ஒரு நாள் செட்டியார் அவர்கள் ஏதோ அலுவலால் சுவாமிகட்கு விழுது தர மறந்து விட்டார். அன்று சுவாமிகள் ஆற்றுக்குப் போகும் போது எதிரே வந்த சந்தன முதலியார் என்பவரிடம் பற்கொம்பு தரும்படி கூறினர். அவர் பக்கத்தில் இருந்த கருவேல்மரத்திலிருந்து ஒரு பற்கொம்பு பறித்துத் தந்தார். அன்று சந்தன முதலியார் சிறந்த பாக்கியவான் ஆயினர். 7 மணிக்கு சுந்தரம் செட்டியாருக்கு, தம்முடைய கடமையில் இருந்து தவறியது தெரிந்து வருத்தமுற்றார். அப்போது சுவாமிகளிடம் சென்று தம்முடைய பிழையைக் கூறி மன்னிப்பு வேண்டி நின்றார். சுவாமிகள், "இதற்காகவா வருத்தப் படுகிறீர்கள்! தினந்தோறும் ஆலம் விழுது கொண்டு பல் துலக்கும் எனக்கு இன்று சந்தனக் குச்சியல்லவா கிடைத்தது?" என்று சிலேடையாகக் கூறி மகிழ்வித்தனர். சுவாமிகள், சச்சிதானந்த மயமான பிரம்ம சாட்சாத்காரம் பெற்றவராகையால் எப்போதும் தம்மை அணுகியவரை மகிழ்வித்த வண்ணமாய் இருப்பார்.

**கைப்பிச்சை:—** இங்ஙனம் சுவாமிகள் வாழ்ந்த போது கைப்பிச்சை என்பவர் சுவாமிகட்கு அணுக்கத் தொண்டராயினர். இவர் சென்னிமலையில் பிறந்தவர். இவருடைய இயற்பெயர்

கிருஷ்ண பிள்ளை. இவர் கோபுரச் சிற்பம் செய்வதில் வல்லவர். இவர் பல ஆண்டுகள் கரமாகிய பாத்திரத்தில் பிச்சை ஏற்று உண்டமையால் இவருக்குக் கைப்பிச்சை என்ற பெயர் உண்டாயிற்று. இவர் திருவண்ணுமலையில் வாழ்ந்த ஸ்ரீ சேஷாத்திரி சுவாமி அவர்களுக்குத் தொண்டாற்றி அவருடைய ஆணையால் நம் சுவாமிகளை ஆசாரிய மூர்த்தியாக ஏற்றுக்கொண்டார். கைப்பிச்சை நம் சுவாமிகளிடம் கொண்ட அன்பு கடலினும் பெரிது; வானினும் உயர்ந்தது. இவ்வன்பு நம் சுவாமிகளுக்குப் பல சந்தர்ப்பத்தில் தொல்லையாய் இருந்தது. சுவாமிகள் எப்போதும் அடக்கமாக இருப்பவர். பிறர் தம்மைத் தொழுவதை அடியோடு வெறுப்பவர். ஆனுல் கைப்பிச்சையோ சுவாமிகளை எங்கு கண்டாலும்—கண்ட இடம் வீதியாய் இருந்தாலும், கோயிலாய் இருந்தாலும்—உடனே அடியற்ற மரம் போல் வீழ்ந்து வணங்குவார். ஒருமுறை கைப்பிச்சையின் வணக்கத் தொல்லை பொருமல் சுவாமிகள் திருப்பராய்த்துறைக்குப் போய்விட்டார். பிறகுஅன்பர்கள்வேண்டிக்கொள்ள கருவூர்க்குத் திரும்பி வந்தார். இக் கைப்பிச்சை சுவாமிகளைப் பற்றி திருக்கடம்பந்துறை ஸ்ரீமான் குருசாமி முதலியார் அவர்கள் 'கைப்பிச்சை வெண்பா நாற்பது' என்ற நூலை இயற்றியுள்ளார். அந்நூலைப் பயில்பவர்கள் கைப்பிச்சையின் பெருமை உணர்வர். நூலாசிரியரின் புலமையையும் உணர்வர்.

"வாடி யிருந்து வயிருருங் கொக்குப் போல்
நாடித் திருப்பதி தாள் நாண்மலரைக்—கூடியே
இன்புறுவ தல்லால் இருமைக்கும் வேறிலையென்
றன்பிற்கைப் பிச்சையறிந் தான்".

இத்தகைய வெண்பாக்கள் அந்நூலில் மிளிர்ந்து கைப்பிச்சையின் பெருமையைப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

வாழ்க கைப்பிச்சை வெண்பா!

**வேலூர் வாசம்:–** நம் சுவாமிகள் அரவக்குறிச்சியில் வாழ்ந்தபோதே உபதேசம் பெற்றவர் அத்திக்கோம்பை சுவாமிகள். அவர்கள் திடமான வைராக்கியமுடையவர். அவர்

அடிக்கடி நன்செய் இடையாற்றுக்கு வந்து புரவலர்—திரு. M. பரிமள கண்டர் அவர்களைச் சந்தித்துச்செல்வது வழக்கம். அத்திக்கோம்பையின் சார்பிஞல் கண்டர் அவர்களுக்கு வேதாந்தப் பற்றும், ஞானிகளின் தொடர்பும் உண்டாயிற்று. அத்திக்கோம்பை சுவாமிகள் வரும் போதெல்லாம் திருப்பதி சுவாமிகளைப் பற்றிக் கூறுவது வழக்கம். இதஞல் புரவலர்—பரிமள கண்டருக்கு, சுவாமிகளைக் கண்டு உபதேசம் பெற வேண்டும் என்னும் அவா உண்டாயிற்று, அவ்வவா சுவாமிகளை வேலூருக்கு அழைத்து வந்தது. சுவாமிகள் தொடர்பால் வேலூர் புனிதம் பெற்றது.

வேலூர் சேல வளநாட்டில் நாமக்கல் கூற்றத்தில் உள்ளது. வளத்தால் சோழ நாட்டையும் வெல்வது. காவிரியின் தீம்பால் நுகர்ந்து பெருமிதத்தோடு விளங்குவது. கொங்கு நாட்டின் நெற் களஞ்சியம் என்று வேலூரைக் கூறலாம். வேலூர்க் காவிரிக் கரையில் காசி விசுவநாதர் ஆலயம் உள்ளது. பெரும்பாலும் கோவில் சந்தடியின்றி அமைதியாக இருக்கும். அவ்விடமே சுவாமிகள் தங்குவதற்கு ஏற்ற இடமென்று புரவலர்—திரு. பரிமள கண்டர் அவர்கள் கருதிஞர்கள். முதன்முதலில் புரவலர்—திரு. பரிமள கண்டர் அவர்கள் சுவாமியைக் காசி விசுவநாதர் கோயிலில் சந்தித்தனர். திரு. கண்டர் அவர்கள் சுவாமியை வணங்கியபோது, சுவாமிகள், “ஐயா! ஐயா! என்னையா கும்பிடுகிறீர்கள்? உள்ளே இருக்கும் ஈசுவரனைக் கும்பிடுங்கள்” என்று கூறிஞர். வணக்கத்தைப் பெற்றுக் கொள்ளாமல் சுவாமிகள் ஒரு புறத்தில் விலகிக்கொண்டார்.

இதையறிந்த அத்திக்கோம்பை சுவாமிகள், சுவாமிகளைப் பார்த்து “சுவாமி தாங்கள் இப்படிச் செய்தது சரியல்ல! கண்டர் அவர்கள் மிகச் சிறந்தவர். சாதுக்களிடம் மிக்க ஈடுபாடு உடையவர். செல்வரே எனினும் செருக்கற்றவர். பழுத்தமரம் பல்கோடி பறவைகளுக்கு ஆதாரமாக இருப்பது போல, கண்டர் அவர்கள் ஏழை எளியவர்களுக்கு உறுதுணையாக இருக்கிருர்கள். அவரைத் தாங்கள் ஆட்கொண்டால், தமிழகத்துக்கே நன்மை விளையும்” என்று கூறினர். அத்திக்கோம்பை சுவாமிகளின் கூற்றை நம் சுவாமிகள் ஏற்றுக்கொண்டார்.

மறு நாள் திரு. கண்டர் அவர்கள் வந்து வணங்கியபோது அவர்களுடைய வணக்கத்தை ஏற்றுக்கொண்ட சுவாமிகள், ''ஐயா! தாங்கள் கட்டுக் குடுமியும், கனத்த மீசையுமாய், பூணூல் அணிந்து விளங்குகிறீர்கள். இவற்றை எடுத்து விடவேண்டும். இது சைவ மரபுக்கு ஏற்றதல்ல'' என்று கூறினர். சுவாமிகளின் பொன்னுரை கேட்ட கண்டரவர்கள் அவ்வண்ணமே அவற்றை நீக்கிவிட்டார். கட்டுக்குடுமி சிறுகுடுமியாயிற்று. மீசை விடை பெற்றுக்கொண்டது. பூணூல் விலக்கப்பட்டது.

மறுநாள் கண்டர் அவர்கள் புதிய கோலத்துடன் சுவாமிகளைச் சந்திக்கச் சென்றார். சுவாமிகளின் பொன்னார் திருவடிக் கமலங்களில் வீழ்ந்து வணங்கினர். கண்டரின் புதிய கோலத்தைக் கண்ட சுவாமிகள் ஆனந்த மேலீட்டால் சிறிதே புன்னகை பூத்து, ''ஐயா! ஐயா! தாங்கள் இப்போது சிவக் கொழுந்தாக விளங்குகிறீர்கள்! இனி தாங்கள் வேதாந்த பாடம் கேட்கலாம்'' என்று கூறினர்.

நம் சுவாமிகள் வருவதற்கு முன்பு புரவலர். திரு. பரிமள கண்டர் அவர்கள் அத்திக்கோம்பை சுவாமிகளிடம் ''ஞான ஜீவ வாதக் கட்டளையும்', 'கீதாசாரத் தாலாட்டும்', 'கைவல்ய நவநீதமும்', பாடம் கேட்டிருந்தனர். அவற்றை மனப்பாடமும் செய்திருந்தனர். ஒருமுறை கண்டர் அவர்கள், ''கீதாசாரத் தாலாட்டில்' தமக்குள்ள ஒரு சந்தேகத்தைச் சுவாமிகளிடம் கேட்டனர்.

அச்சந்தேகத்தை—சுவாமிகள் சுவானுபூதியோடு கூடிய உரையால் விலக்கினர். அதைக்கேட்ட கண்டர் அவர்கள் மிக்க வியப்புற்று '' சுவாமி! யான் முன்னமே கீதாசாரத் தாலாட்டு முழுவதையும் பாடம் கேட்டுள்ளேன். பாடல்கள் முழுமையும் பாராமல் கூடச் சொல்லுவேன்—என்றாலும் இன்றுபோல் என் உள்ளம் ஒரு நாளும் இன்பம் அடைந்ததில்லை; உண்மையையும் அறிந்ததில்லை. தாங்கள் உரை கூறும்போது அடியேனுக்கு நன்றாகப் புரிகிறது. ஆகையால் தாங்களே தாலாட்டு முழுமைக்கும் உரை கூறி அருள் செய்யவேண்டும்'' என்று கூறினர்.

கண்டர் கூறிய வார்த்தைகள் சுவாமிகளின் மனத்தை உருக்கிவிட்டன. "பவ்ய ஜீவனுக இருக்கிருர். இவருக்குக் கற்பிப்பது நம் கடமை. இவரால் தமிழகமே நன்மை பெறும்." என்று கருதினுர். தினந்தோறும் சுவாமிகள் கீதாசாரத் தாலாட்டுக்கு விரிவுரை கூறிவந்தார். சுவாமிகளின் உரை அனுபவரீதியோடு கலந்தது. ஆகையால் கண்டர் அவர்களின் மனம் உண்மையை உணர்ந்தது; ஆனந்தம் கொண்டது. இந்நிகழ்ச்சி 1934-ஆம் ஆண்டு நிகழ்ந்தது.

**தீர்க்க தரிசனம்:**– புரவலர் கண்டர் அவர்கள் 'கீதாசாரத் தாலாட்டுப்' பாடங்கேட்டு முற்றியபின் 'கைவல்ய நவநீதம்' கேட்கத் தொடங்கினர். இவ்வமயம் கண்டர் அவர்களுக்கு 'ஆஸ்த்மா' நோய் ஏற்பட்டது. நோய் முற்றி நடக்க முடியாமல் படுக்கையிலேயே கிடந்தனர். திரு. கண்டர் அவர்கள் சுவாமிகளைப் பார்க்கமுடியாமலும், பாடங் கேட்க முடியாமலும் இருக்கிறது என்று வருந்தினர். ஓர் நாள் பிணியின் கொடுமையால் நினைவற்று சோர்ந்து உறங்கினர். பக்கத்திலிருந்த வெள்ளைக் குட்டி சுவாமி அவர்களும் அத்திக்கோம்பை சுவாமிகளும் மனம்கலங்கி இடையாற்றிலிருந்து வேலூருக்கு வந்து நம் சுவாமிகளைப் பார்த்து, "சுவாமி! கண்டர் பேச்சு மூச்சற்று இருக்கிருர். உடல் நழுவி விடும் போல் இருக்கிறதே" என்று கூறிக் கண்ணீர் விட்டனர். இதைக்கேட்ட சுவாமிகள் 5 நிமிடம் ஒன்றும் பேசாமல் மௌனமாக இருந்தனர். பிறகு தூக்கத்தில் இருந்து எழுந்தவர், போல் திருக்கண் மலர்ந்து அன்பர்களை நோக்கி, "ஐயா! யார் சொன்னது, கண்டர் உடல் நழுவி விடும் என்று? அவரால் இன்னும் எவ்வளவோ தர்மங்கள் நடக்க இருக்கின்றன. கோடம்பாக்கம் வைத்தியசாலையில் கிடைக்கும் தாமிர பஸ்பம் கொண்டு வந்து சாப்பிடும்படி செய்யுங்கள்", என்று கூறினர். சுவாமிகள் சொல்லிய தீர்க்க தரிசனம் பொய்யாகவில்லை. சுவாமிகள் கூறியபடியே புரவலர்-கண்டர் அவர்கள், கோடம்பாக்கம் மருந்தை வாங்கிவரச் செய்தனர். அம்மருந்து மிகக் கடுமையாக இருந்தமையால், புரவலரின் நண்பரும் உறவினரும் அம்மருந்தை உண்ண வேண்டாம் என்றனர். குருநாதர் சொல்லிலே மிக்க நம்பிக்கை கொண்ட

புரவலர் அவர்கள் அக்கடுமையான மருந்தையுண்டு நலம் பெற்றனர். குருநாதர் சொற்படி நடப்பவர்களுக்கு எந்த நன்மைதான் உண்டாகாது?

**வெள்ளைக் குட்டி சுவாமி:-** திரு. பரிமள கண்டரின் சிற்றப்பாராகிய வெள்ளைக்குட்டி சுவாமி என்பவரும் அடிக்கடி நம் சுவாமியைக்கண்டு நல்லுரை கேட்டு வந்தனர். வெள்ளைக் குட்டி சுவாமியின் பண்பைக் கண்டு சுவாமிகள் அவருக்கு 'மகா வாக்கிய உபதேசம்' செய்தனர். சுவாமிகள் வெள்ளைக்குட்டி சுவாமியின் அன்பைக்கண்டு, "ஐயா! தாங்கள் என்னை விடமாட்டீர் போல இருக்கிறதே! தாங்கள் எனக்கு வாலாக அல்லவா ஆகிவிட்டீர்கள்!" என்றனர்.

சுவாமிகள் வேலூரில் வாழ்ந்தபோது, திரு. மாணிக்கம் பிள்ளை என்பவரும் அவருடைய தம்பியாகிய திரு. வைரப்ப பிள்ளை என்பவரும் சுவாமிகளுக்கு ஆகாரம் கொடுத்து வந்தனர். திரு. மாணிக்கம் பிள்ளை அவர்கள் சுவாமிகளுக்குச் செய்த தொண்டால் உயர்வடைந்தது ஊர் அறிந்த செய்தி. பக்கத்தே காவிரி ஓடுவதாலும் கோயிலில் உள்ள லிங்கம், பாண லிங்கம் ஆதலாலும் அடிக்கடி சந்திக்கும் திரு. புரவலர் அவர்கள் சிறந்த பண்புடையவர் ஆதலாலும் சுவாமிகட்கு வேலூர் வாசம் திருப்தியாக இருந்தது.

**தஞ்சாவூர் வாசம்:-** கருவூர் அன்பர்களின் வேண்டு கோளின்படி கருவூர்க்குச் சென்று சில நாட்கள் அங்கு இருந்து விட்டுப் பிறகு தஞ்சாவூருக்குப் போய் அங்கு ஆறுமாத காலம் தங்கியிருந்தனர். அங்கு தமிழாசிரியராக இருந்த திரு. சுந்தரேச அய்யர் என்பவர் சுவாமிகளை தம்முடைய மேல் மாடி வீட்டில் வைத்து ராஜோபசாரம்செய்து பயபக்தியுடன் பணிவிடை புரிந்து வந்தனர். அப்போது சுவாமிகள் இயற்றிய நூல் "பக்திநெறி".

தஞ்சையில் அப்போது மிகச் சிறப்போடு விளங்கிய பிரம்மானந்த சுவாமிகள் (குப்புசாமி ராஜு), சசிராம அய்யர், சங்கத்து நாராயண சுவாமிகள், பண்டித உலகநாதம் பிள்ளை முதலான ஞானிகளாலும் அறிஞர்களாலும் நம் சுவாமிகள் மிகவும் போற்றப்பட்டனர்.

**திருவாரூர் வாசம்:-** தஞ்சையில் ஆறு மாதங்கள் இருந்த பிறகு நம் சுவாமிகள் திருவாரூர்க்குப் போயினர். அங்கு நம் சுவாமிகள் தட்சிணாமூர்த்தி மடத்தில் தங்கி இருந்தனர்.

திருவாரூரில் வடக்கு மடவாளகத்தில் சிவசாமித் தேசிகர் என்ற ஒரு ஞானி இருந்தார். அவருக்கு 64 கலைகளும் தெரியும் என்று அறிஞர்கள் கூறுவார்கள். அவர் வட மொழியையும் தென் மொழியையும் முறையாகப் பயின்றவர். சிறந்த வைத்தியர். இவர் தருகின்ற மருந்துகள் அனைத்தும் பாலில் கலந்தே சாப்பிட வேண்டும். அதனால் அவரது மருந்து வைத்தியசாலை "பால் மருந்து வைத்தியசாலை" எனப் பெயர் பெற்றது.

திரு. சிவசாமித் தேசிகர் நம்சுவாமிகளின் பெருமையுணர்ந்து சுவாமிகளின் அணுக்கத் தொண்டராயினர். சுவாமிகளும் தேசிகரின் பண்பையுணர்ந்து 'வாசிஷ்டம் முழுமையும்' பாடம் சொல்லியதோடு, "மகா வாக்கிய உபதேசமும்" செய்தனர். அப்போதுதான் சுவாமிகள் திரு. V. R. சுப்பிரமணிய அய்யரால் மொழி பெயர்க்கப்பட்ட 'திரிபுரா ரகஸ்யம்' என்ற நூலை—தேசிகர் வேண்டுகோளின்படி—பிழையறப் பரிசோதித்து வெளியிட்டனர். இப்பதிப்பில் சுவாமிகள் தன்னுடைய பெயரை வெளியிட விரும்பாமல் 'அடியார்க்கு அடியார்' என்றே குறிப்பிட்டனர். இது சுவாமிகளின் சிறந்த பண்பாட்டைக் காட்டுகிறது. அரவக்குறிச்சியில் இருந்தபோது இயற்றிய 'தேவிஸ்தோத்திரமும்' 'வித்தியா ஸ்தோத்திரமும்'—இந்நூலின் தொடக்கத்தில் சேர்க்கப் பட்டன. 'வித்தியா ஸ்தோத்திரத்தில்' வருகிற

மாலை வடிவே! மரகதமே! மாமணியே!
ஏழை அடியேற் கிரங்கி யருளாயே!
ஞானக் குயிலே! நயந்த அருட்கிளியே!
மோன மயிலே! முழுதுமெனைக் காவாயே!

என்ற தாழிசைகள் எவ்வளவு இனிமையாக இருக்கின்றன!

திருவாரூரிலிருந்து நம் சுவாமிகள் காசிக்குச் சென்றனர். சிவசாமித் தேசிகரும், அத்திக்கோம்பை சுவாமிகளும் உடன் சென்றனர். காசிக்குப் போய்த் திரும்பிய மூன்றும் நாள் சிவசாமித்

தேசிகர் உடற் சட்டையைக் கழற்றி எரிந்துவிட்டுப் பிரம்மத்தோடு ஐக்கியமாயினர். எல்லாம் மாயை என்று தெரிந்திருந்தும், நம் சுவாமிகள் சிவசாமி தேசிகர் பிரிவால் சற்றே மனம் கலங்கினர். பேயைப் பிரிவதும் பெரும் வருத்தம் தரும் என்பர் புலவர். தாயினும் சிறந்த தண்ணளி பூண்ட தேசிகரைப் பிரிந்தபோது சுவாமிகள் வருந்தாமல் இருப்பார்களா?

**குளித்தலை வாசம்:-** தேசிகர் பிரிந்த பிறகு திருவாரூர் வாசம் சுவாமிகளுக்குப் பிடிக்கவில்லை. நேரே கருவூருக்கு வந்தனர். கருவூரில் சுமார் ஆறு மாதங்கள் தங்கியிருந்தனர். அப்போதுதான் திரு. சரவண சுவாமிகளால் தன் குருநாதராகிய ஸ்ரீலஸ்ரீகுப்புசாமி ராஜு அவர்கள் மீது இயற்றப்பட்ட 'பிரமானந்த சுவாமிகள் தோத்திரப்பா' என்ற நூலைப் பிழையறத் திருத்தித் தந்தனர். ஒரு சிறப்புப் பாயிரமும் புனைந்து அளித்தனர். 'பழமொழிப் போதம்' என்ற நூல் அரவக்குறிச்சியில் நம் சுவாமிகளால் எழுதப்பட்டது. அது நீண்ட நாளாக அச்சுக்கு வராமல்இருந்தது.அன்பர்களின் வேண்டுகோளின்படி அதனையும் இச்சமயத்தில் வெளியிட்டனர். பிறகு குளித்தலைக்குச் சென்றனர். இது நிகழ்ந்தது 1932.

**கடம்பர் கோயில் வாசம்:-** குளித்தலையில் ஒரு பகுதியாக இருப்பது கடம்பர் கோயில். இங்குள்ள இறைவன் தேவாரப்பாமாலை சூடியவன். இங்குதான் அப்பர்

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற

ஒப்புயர்வற்ற தெய்வ மணங்கமழும் பாசுரம் பாடினர். இவ்வூர் நம் சுவாமிகளுக்கு உகப்புடையதாகஇருந்தது.கடம்பர் கோயிலில் வசித்துவரும் பரம பாகவதராகிய ஸ்ரீரங்க ராமானுதாசர் என்பவர் சுவாமிகளை அடைந்து சீடராகித் தம் இல்லத்திலேயே திருவமுது ஏற்றுக்கொள்ளும்படி வேண்டிக் கொண்டனர். நம் தேசிக மூர்த்தியும், பாகவதரின் பக்தி வலையில் சிக்குண்டு அவர் இல்லத்திலேயே அமுது அருந்தி வருவாராயினர்.பாகவதருடைய மனைவியாரும், பாகவதரும் சுவாமிகளுக்கு யாதொரு குறையும்

நேராதபடி கவனித்து வந்தனர். சுவாமிகளை அடிக்கடி தரிசிக்க வரும் அன்பர்களுக்கும், சீடர்களுக்கும், தொண்டர்களுக்கும், பாகவதர் விருப்பத்தோடு பணிவிடை புரிந்து அமுதளித்து வந்தனர். சுவாமிகளின் தொடர்பால் பாகவதர் இல்லம் பரமபதம் ஆயிற்று. கண்ணன் வந்தபோது விதுரன்

"முன்ன மேதுயின் றருளிய முதுபயோ ததியோ?
பன்ன காதிபப் பாயலோ? பச்சையா லிலேயோ?
சொன்ன நால்வகைச் சுருதியோ? கருதிநீ வரற்கு
என்ன மாதவம் செய்ததிச் சிறுகுடில்?" என்று

கூறி மகிழ்ந்ததைப்போலப்பாகவதரும் சுவாமிகளின் வருகையால் உளம் குளிர்ந்தனர்.

சுவாமிகள் கடம்பந்துறையில் இருந்தபோது குளித்தலை உயர்நிலைப்பள்ளியில் பிரம்மஸ்ரீ S. இராமசுப்பய்யர் என்னும் அந்தணர் தமிழாசிரியராய் இருந்தனர். அவர் இலக்கண இலக்கியங்களை முறையாகப் பயின்றவர். சிறந்த அன்பர். அவர் சுவாமிகளை அடைந்து தொண்டராகி இராமாயணம் முதலிய நூல்களில் தமக்கு ஏற்பட்ட ஐயங்களையெல்லாம் முறையாகக் கேட்டுத் தெளிந்து சுவாமிகளால் மெய்ப் பொருள் உணர்ச்சியும் பெற்றனர்.

**தன் அடிச் சோதிக்கெழுந்தருளல்:-** சுவாமிகள் எப்போதும் கடம்பவனேஸ்வரர் ஆலயத்தில் தியானம் செய்த வண்ணமாய் இருப்பார்கள்.

"மற்றும் தொடர்ப்பா டெவன்கொல்? பிறப்பறுக்கல்
உற்றார்க் குடம்பு மிகை." என்று

வள்ளுவர் திருவாய் மலர்ந்தனர். நம் தேசிக மூர்த்தி அவர்கள் இந்நிலவுலக வாழ்வில் செய்வன செய்து இனி ஒன்றும் செய்ய வேண்டியதில்லை என்ற நிலையை அடைந்தனர். சுவாமிகள் தமது 64-ஆவது ஆண்டாகிய ஈஸ்வர வருஷம் ஐப்பசித் திங்கள் 26-ஆம் நாள் குருவாரம் பூர்வபட்ச அஷ்டமி அவிட்டம் கூடிய நன்னாளில் பகல் 22½ நாழிகை அளவில் அகண்ட பரிபூரண

சச்சிதானந்த சொப்பிரகாச மோன சாசுவத நிர்விகற்ப சமாதியில் அமர்ந்தனர். விதேக கைவல்ய பிரம்ம சாட்சாத்கார நிலையை அடைந்தார்கள். சுவாமிகள் பரிபூரண தசையை அடைந்தபிறகு சுவாமிகளின் சீடர்களில் ஒருவராகிய பிரம்மஸ்ரீ இராமசுப்பய்யர் என்பவர் கையறுநிலைப் பதிகம் என்னும் நூலை இயற்றினர். ஸ்ரீலஸ்ரீ திருப்பதி சுவாமிகளின் சமாதி கடம்பர் கோவிலுக்கும் அகண்ட காவேரிக்கும் நடுவில் ஆற்றங்கரையின் தென்பக்கத்தில் அமைந்துள்ளது. அரவக்குறிச்சியில் தோன்றிய கருணை வெள்ளம் கருவூரை வளப்படுத்தி, வேலூரை விளக்கமுறச் செய்து, ஆரூரில் அருட்சோதி காட்டி, கடம்பன் துறையில் சங்கமம் ஆகிவிட்டது. அவ்வருட் பெருக்கில் நீராடித் தமிழகம் நன்மை பெறுக!

சுபம்!



# சுவாமிகளின் பண்பும், புலமைத் திறனும்.



**ஜாதகம்:—** சுவாமிகள் ஜாதகம் மிகச் சிறப்பு வாய்ந்த ஜாதகம். அறிஞர்கள் இத்தகைய ஜாதகம் அமைவது அருமை என்பர். சுவாமிகள் ஜாதகம் பின்வருமாறு:-

கலியுகாதி 4975-க்கு ஸ்ரீமுக ஆண்டு மார்கழித் திங்கள் புதவாரம் அமரபக்ஷத் திரயோதசி 45-33 விசாகம் 14-5 அமிர்த கெடிகை கூடிய சுபதினத்தில் சூரிய உதயாதி நாழிகை 12-41-க்கு கும்ப லக்கினத்தில் சுவாமிகள் திருவவதரித்தனர்.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | | |
| ல<br>மா | இராசி | | |
| செ<br>சனி | | | |
| சூ | பு-சுக்<br>சந் | கே | வி |

**தோற்றம்:-** நம் தேசிக மூர்த்தி மெலிந்த தோற்றமும், மாநிறமும் உடையவர்; குளிர்ந்த பார்வையும் சாந்தப் பொலிவும்

உடையவர். இவரைப் பார்த்த யாவரும், இவரை ஒரு சிறந்த ஞானி என்று கருதுவர். இவருடைய கைகள் முழந்தாள் வரை நீண்டிருக்கும். அங்கைகள் பொன்னிறம் பெற்றுப் பொலிவொடு விளங்கும். கைவிரல்கள் வருக்கைச் சுளைபோல் மென்மையும் பொன்மையும் பெற்று மிக அழகாக இருக்கும்.

நம் சுவாமியைப் பார்ப்பவர்கள்—புராணம் படித்தவராய் இருப்பின் அவர்கட்குக் குசேலர் நினைவு வரும்; சரித்திரம் படித்தவராயிருப்பின் மகாவீரர் நினைவு வரும்; அரசியல் அறிந்தவராயிருப்பின் காந்தியடிகள் நினைவு வரும்; தமிழ் இலக்கியப் புலமை பெற்றவராயிருப்பின் திரு. வி. க. நினைவுவரும்; சமரச சன்மார்க்கப் பற்றுடையவராயிருப்பின் இராமலிங்க அடிகள் நினைவு வரும்.

நம் சுவாமிகள் கரையும் கறையும் இல்லாத வெள்ளை வேட்டி அணிவர் சுவாமிகள் உள்ளம் எத்தகையது என்பதை அவருடைய ஆடை தெரிவித்த வண்ணமாய் இருக்கும்.

**பழக்க வழக்கம்:-** சுவாமிகள் தினந்தோறும் 4-மணிக்கே எழுந்துவிடுவார். படுக்கையில் இருந்தபடியே சுமார் ஒருமணி நேரம் அகண்டாகார நிலையில் இருப்பார். பிறகு இருப்பிடத்தில் இருந்து சுமார் ஒருமைல் தூரம் சென்று காலைக் கடன்களை முடித்துக்கொண்டு தீர்த்தமாடிவிட்டுத் திருநீறு அணிந்து வெள்ளை ஆடை புனைந்து கோவிலுக்குச் செல்வார். கோவிலுக்குச் சென்று சுவாமியின் சந்நிதியில் சுமார் 3 மணி நேரம் அபேத உணர்வோடு தியானத்தில் இருப்பார். மக்கள் வந்த வண்ணமும் போன வண்ணமுமாக இருப்பர். சுவாமிகள் எதையும் கவனியாது நிலை பெயராத பேரின்ப நிலையில் ஆழ்ந்திருப்பார்.

**உணவு:-** சுவாமிகள் காலையில் எவ்வித உணவும் உட்கொள்வதில்லை. மத்தியானம் 1-மணிக்குமேல்—தமது சுவானுபூதிக்கும் உடல் நிலைக்கும் தக்கபடி அளவறிந்து ஆகாரம் ஏற்றுக்கொள்வார்கள். சிலசமயம் காலங்கடந்தும் உண்பார். அதனால் வருத்தமடைவதில்லை. சுவாமிகள் உண்ணலையும் உறங்கலையும் வாழ்க்கையின் இலட்சியமாகக் கருதவில்லை.

"நைபிறப்பின் மேலாம் நரனு யுதித்துமொரு
தெய்வமுள தென்றுளத்திற் சிந்தித்தும்—பொய்மயக்கா
முண்ணலுறங் கற்கே யுழைப்பார் யமன்வருங்காற்
பண்ணுவதென் னந்தோ பயந்து"

என்று பக்தி நெறியில் நம் சுவாமிகள் அருளிச்செய்துள்ளனர்.

**குணங்கள்:–** இவர் மிக்க சாந்தமுடையவர். எவரேனும் சீற்றத்துடன் பேசினும் அமைதியாக இருந்து கனிவொடு பேசி நல்லறிவு கொளுத்துவார். சுவாமிகள் பொருளைப் பொருளென்று ஒருகாலும் கருதியதில்லை. இவர் கை ஒருகாலும் பணத்தைத் தொட்டதில்லை. இதனால் இவருக்குக் "காசு தொடான்" என்ற பெயர் ஏற்பட்டது. சுவாமிகள் மிக்க சீலமுடையவர்கள். மாதர்களது கண்கள் என்னும் வண்டுகள் படாத சுவாமிகளது இதய தாமரை எப்போதும் சிவாகாரமாகவே விளங்கும்.

"வண்டு படாதலர் சண்பக மேயென மாருகிப்
பண்டர ஞேடமர் செய்மதன் வண்டு படாமேனி"

என்று துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் கூறியதற்கு நம் சுவாமிகள் வாழ்வு இலக்கியம்.

சுவாமிகள் எந்நிலையிலும் பிறர் குற்றத்தை எடுத்துக் கூறுவதில்லை. பிறரிடம் ஒரு பண்பு சிறிதே இருந்தாலும் அதைப் பாராட்டுவார். மறந்தும்கூட சுவாமிகள் தம்மைப்பற்றிப் புகழ்ந்து கொள்ளமாட்டார். தாம் முன்பு வெளியிட்ட நூல்களில் தம் பெயரைக் குறிப்பிடாமல், "அடியார்க்கடியன்" என்றே குறிப் பிட்டனர். சுவாமிகள் எல்லோரிடத்திலும் இரக்கமுடையவர்கள். சுவாமிகளை ஜீவகாருணிய வடிவம் என்றே குறிப்பிடலாம்.

**குருபக்தி:–** சுவாமிகள் கருவூரில் இருந்தபோது அங்கு வந்த அன்பர் ஒருவர் 'நல்லமாகாளிப்பட்டியில் தெய்வசிகாமணிக் குருக்கள் சிவபதவி அடைந்து விட்டார்கள்' என்று கூறினர். அதுகேட்ட சுவாமிகள் சற்றே மௌனமாக இருந்தனர். பிறகு

பாரின்மிசை யப்பிரத்தி யட்சபல
தாதாவாய்ப் பரனின் மேலாம்
ஆரியனாய் பிரத்தியட்ச பலமீவோ
னவித்தை அகற்றும் ஞான
சூரியனாய் உயர்நல்ல மாகாளிப்
பட்டியுறை தூயோ னாகி
வாரிநிகர் தெய்வசிகா மணிக் கருணை
வள்ளலிரு மலர்த்தாள் போற்றி.

என்ற அருமையான கவிதையை அருளினர். சிவபிரான் அப்பிரத்தியட்ச பலன் ஈவோன் என்றும் குருநாதன் பிரத்தியட்ச பலன் ஈவோன் என்றும் கூறிய திறம் பாராட்டற்கு உரியது.

**புலமை:-** சுவாமிகள் சிறந்த புலமையுடையவர்கள். இலக்கண இலக்கியங்களை முறையாகப் பயின்றவர்கள். அநாயாசமாகக் கவிமாரி பொழிபவர்கள். ஆசு மதுரம் வித்தாரம் சித்திரம் என்னும் நாற்கவிகள் புனைவதில் இணையற்றவர் இவரை நாற்கவிப் பெருமான் என்று கூறலாம். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும் சுவாமிகளின் புலமையை அழகுபடுத்தின. சுவாமிகளுக்கு வடமொழியிலும் நல்ல புலமை உண்டு. நாமக்கல் பிரம்மச்சாரி (கோழிக்கடலூர்) ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரியார் அவர்களும் பிரம்மஸ்ரீ சங்கரானந்த சுவாமிகளும் நம் சுவாமிகளின் வடமொழிப் புலமையைப் பாராட்டியுள்ளனர். சுவாமிகளின் பாக்கள்:—

சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை ஆழமுடைத்தாதல்.

என்ற இலக்கணத்திற்கு இலக்கியமாய்ப் பொலிவன.

சங்கத்துப் பண்டித சித. நாராயணசாமி அவர்கள்

"கற்றுங் கறிந்தடங்கிக் கண்டெவரும் போற்றவரும்
பற்றேது மின்றிப் பரம்பொருளாய்—எற்றைக்கும்
நின்ற திருப்பதியா நின்மலன்சொல் லேவருக்கும்
மன்ற பிறப்பறுக்கு மன்"

என்று கூறியது மிக்க உண்மை என்பதை சுவாமிகளின் நூல் பயின்றவர்கள் நன்கு உணர்வார்கள்.

சுவாமிகளின் மாணுக்கரும் குளித்தலை உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியரும் பேரறிஞருமாகிய S. R. இராமசுப்பய்யர் அவர்கள்

''இக்குமெழிற் சர்க்கரையு மீர்ங்கண்டு மிக்கீதைக்
கொக்குமதோ விப்பூ வுலகதனில்—இக்கீதை
பூதலத்தா லெல்லார்க்கும் புத்தமுதா மற்றதன்றி
மீதலத்தார்க் கும்விருந்தா மே''

என்று 'ஸ்ரீ வித்தியா கீதை' க்குக் கூறிய பாயிரம் சுவாமிகளின் எல்லா நூல்களுக்கும் பொருந்தும்.

**சமரசம்:-** சுவாமிகள் மிக்க சமரசம் உடையவர்கள் மூர்த்தி பேதமோ, மத பேதமோ சுவாமிகளிடம் சற்றும் கிடையாது. தத்துவ வாதத்திலும், சமய வாதத்திலும் சுவாமிகள் என்றும் தமது கருத்தைச் செலுத்தியதில்லை. சுவாமிகள் வேதாந்த சித்தாந்தங்களின்முடிந்த நிலையை உணர்ந்து, சமரச நிலையில் இருப்பவர்கள்.

''அன்பே வடிவாம் அடியார்க் கடியனிரு
மன்பே ரடிமலரை வாழ்த்தினர்க்குத்—துன்பப்
பவமே யுருது பசுத்துவம்போய் மோன
சிவமே சதானந்தத் தே''

ஸ்ரீலஸ்ரீ திருப்பதி சுவாமிகள் திருவடி வாழ்க!

நலம் தழைக!



ஸ்ரீ

# பாயிரம்.

கடல்புடைசூழ் தமிழகத்திற் பிறப்ப தற்குக்
கனிந்துதவம் புரிந்திட்ட பெரியீர்! வம்மின்!
அடல்மிக்க மாயையினை வென்று வாகை
யணிந்திட்ட வீரர்பிரான் வாய் மலர்ந்த
திடமுடைய **முத்திநெறி** எனும்வி ளக்கைத்
தினந்தோறும் பயின்றகத்தில் ஏற்றி வைத்தால்
மடமைதரு மிருள்நீங்கும்; ஞானம் ஓங்கும்;
மாசற்ற சிவமேயாய்ப் பொலிவீர்! உண்மை!

பெருந்தகையீர்! மாயையெனும் காரி ருட்குப்
பிறங்கொளிசேர் செஞ்சுடராம்; ஞானம் என்னும்
திருந்தியநற் குமுதங்கள் மலர்வ தற்குச்
செவ்விநிறை மாமதியாம்; கலை மகட்குப்
பொருந்தியநன் மணிமுடியாம்; பிணியுற் றோர்க்குப்
பொலிவுதரு நன்மருந்தாம்; எம்மை யாண்ட
அருந்தவன் மெய்ஞ் ஞானகுரு புனிதமூர்த்தி
அருளாளன் பகர்**முத்திநெறி** யாம் நூலே.

இங்ஙனம்,
**S. K. இராமராசன்.**
கம்பராமன்.

கம்பநிலையம்,
வேலூர்-சேலம்,
16—12—60.

ஓம்.



ஸ்ரீ கணேசாய நம:

ஸ்ரீ சற்குருநாதன் துணை.

(தனியன்)

கட்டளைக் கலித்துறை

விருப்பதி கங்கொண்ட புன்மன
    மேபாழ் விடகுடும்பப்
பொருப்பதி ஞலென்ன சாதித்
    தணையிப் புவியதனிற்
கருப்பதி வந்து பிறந்து
    வருந்தாக் கதியுதவுந்
திருப்பதி நாத னிருதாண்
    மலர்ப்பதஞ் சேர்குவையே.

திருப்பதிப் பெருமான் றிருமல ரடிகளே
அருட்பெரும் பேற்றை யடையநற் புணையாம்.

ஓம்.

அறுசீர் விருத்தம்.

பக்திநெறி படர்ந்துமொரு பரம்பொருளைப்
 பாராது வருந்து வோர்க்கு
முத்திநெறி தனைமொழிந்தான் சுயம்பிரகா
 சன்என்னும் முத்தர் கோமான்;
உக்திநிறை முந்நூறு பாக்களையும்
 கற்றதனை உள்ளு ணர்ந்தோர்
சக்தியொடு சிவமாகிப் பேரின்பம்
 தானேயாய்த் தழைத்து நிற்பர்.

எந்நூலுங் கற்றபயன் எய்துவர் முத்திநெறி
முந்நூற்றில் ஒன்றுலு மே.

திருவீங்கோய்மலை,
25—3—60.

ஸ்ரீமத் அத்வையானந்த சரஸ்வதி.
சிவானந்த சாதன நிலையம்,

உ

ஸ்ரீ கணேசாய நம:

ஸ்ரீமத்

# திருப்பதி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய

# முத்தி நெறி

மூலமும்—பதவுரையும்—பொழிப்புரையும்.

---

## குருமான்மியம்

(குருவின் மகிமை)

### காப்பு

அகவற்பா

மங்கலக் குறியாய் மலர்தரு கொன்றைத்
தொங்கல னைந்நதி சூழ்சிவா னந்தன்
தோத்திரஞ் செயவருள் சுடர் சின்
மாத்திரன் யானை வதனனெம் மானே.

(ப—ரை) மங்கலக் குறியாய் = மங்கலத் தன்மையைக் குறிப்பதாகிய, மலர்தரு = மலர்கின்ற, கொன்றை = கொன்றைப் பூவினாலான, தொங்கலன் = மாலையையுடையவனாகி, ஐந்நதி = திருவையாற்றில், சூழ் = எழுந்தருளியிருக்கின்ற, சிவானந்த = ஸ்ரீசிவானந்த குருநாதனது, தோத்திரஞ் செய = துதி செய்யும்படி, அருள் = கிருபை புரியும், சுடர் = சோதிமயமாகிய தெய்வமான, சின்மாத்திரம் = ஞான மட்டுமே வடிவாகிய, யானை வதனன் = யானை முகத்தவனான, எம்மானே = நம்முடைய தலைவனேயாம்.

தொங்கல் = மாலை.

மங்களத்தன்மை என்பது கொன்றைமாலை,

ஞான வடிவமென்பது யானைமுகம்.

(பொ—ரை) மங்களத் தன்மையைக் குறிப்பதாகிய மலர்கின்ற கொன்றைப் பூவினாலான மாலையையுடையவனாகித் திருவையாற்றில்எழுந்தருளியிருக்கின்றஸ்ரீசிவானந்த குருநாதனது துதி செய்யும்படி கிருபை புரியும் சோதிமயமாகிய தெய்வமான ஞானமட்டுமே வடிவமாகிய யானை முகத்தையுடையவனை நம்முடைய தலைவனேயாம். 1

## நூல்

### வெண்பா

சிவானந்த நாதனருட் செம்பொற்றா ளுள்க
சிவானந்த நாதனருஞ் சீரா—சிவானந்த
மாடமணி யையாற்று வந்துபணிந் தேத்துவநம்
மாடமணி யையாற்று வான். 1

(ப—ரை) (5) சிவானந்த நாதன் = ஸ்ரீசிவானந்த குருநாதனது, அருள் = அருள் வடிவமாகிய, செம்பொன் தாள் = நல்ல பொன்போன்ற பாதங்களை, உள்கசிவால் = சிந்திக்கும் உருக்கத்தினால், (8) நம்தம் = நம்முடைய, நா = நாவினால், (7) தன் அரும்சீர் = அவனது அருமையாகிய சிறந்த, ஆசி = வாழ்த்துதலை, (4) வான் அந்தம் = ஆகாய பரியந்தம் உயர்ந்த, மாடம் = மாளிகைகளின், அணி = வரிசைகளையுடைய, ஐயாற்று = திருவையாற்றினை, வந்து = அடைந்து, (6) பணிந்து = நமஸ்கரித்து, (9) ஏத்துவம் = துதிப்போம், (2) நம்மாடு = நம்மிடத்து, (1) அ = அந்த, மணி = நன்மையான முத்தியை விளக்கும், ஐ = அருள் வடிவான அழகை, (3) ஆற்றுவான் = செய்யும்பொருட்டு.

(பொ—ரை) அந்த நன்மையான முத்தியை விளக்கும் அருள் வடிவமான அழகை நம்மிடத்துச் செய்யும்பொருட்டு,

ஆகாய பரியந்தம் உயர்ந்த மாளிகைகளின் வரிசைகளையுடைய திருவையாற்றினையடைந்து, ஸ்ரீ சிவானந்த குருநாதனது அருள் வடிவமாகிய நல்ல பொன்போன்ற பாதங்களைச் சிந்திக்கும் உருக்கத்தினால் நமஸ்கரித்து, அவனது அருமையாகிய சிறந்த வாழ்த்துதலை நம்முடைய நாவில் ஸ்துதிப்போம்.

வாழ்த்துதல் = ஆசீர்வாதம், மணி = நன்மை, ஐ = அழகு. 1

### கலிவிருத்தம்

மேலெ ழுந்து விரிந்தசொல் வேதனுஞ்
சால வாழ்ந்து சலித்தவுண் மாயனுங்
கால றுஞ்சிற் கனன்மலை யைந்நதிச்
சீல னெங்கள் சிவானந்த நாதனே. 2

(ப—ரை) மேல் எழுந்து விரிந்த = மேலெழுந்த வாரியாக, சொல்வேதனும் = வாக்கென்னும் பிரம தேவனும், சால ஆழ்ந்து = மிகவும் ஆழ்ந்தாழ்த்து, சலித்த = சலித்துவிட்ட, உள்மாயனும் = மனதென்னும் விஷ்ணு பகவானும், கால்அறும் = அறியமுடியாமற் பின்வாங்கிய, சித்கனல்மலை = ஞானமென்னும் அக்கினி மலையானது, ஐந்நதி = திருவையாற்றில் வீற்றிருக்கின்ற, சீலன் = சிறந்தோனாகிய, எங்கள் = நம்முடைய, சிவானந்த நாதனே = ஸ்ரீ சிவானந்த குருநாதனே.

(பொ—ரை) மேலெழுந்த வாரியாக வாக்கென்னும் பிரம தேவனும், மிகவும் ஆழ்ந்தாழ்த்து சலித்துவிட்ட மனதென்னும் விஷ்ணு பகவானும், அறிய முடியாமற் பின்வாங்கிய ஞானம் என்னும் அக்கினி மலையானது, திருவையாற்றில் வீற்றிருக்கின்ற சிறந்தோனாகிய நம்முடைய ஸ்ரீ சிவானந்த குருநாதனே. 2

## கலித்துறை

மூவு டற்புர முடித்தஞா னக்கினிச் சுவாலைக்
காவி வத்திரங் கருணையத் துவிதக்கண் மணிப்பூண்
சீவ வான்மல நீற்றசாத் தீகவெண் பொடிகொ
டேவ ணைந்நதி வாழ்சிவா னந்ததே சிகனே. 3

(ப—ரை) மூவுடல்=மூன்று சரீரமென்னும், புரம்= புரங்களை, முடித்த=அழித்த, ஞான அக்கினிச் சுவாலை= ஞானக்கினிச் சுவாலையென்னும், காவிவத்திரம் = காவிவஸ்திரமும், கருணை = அருள்வடிவமாகிய, அத்துவித = அத்துவித திருஷ்டி என்னும், கண்மணிப்பூண் =ருத்திராக்க மாலையும், சீவ = சீவனென்னும், ஆன் = பசுவினது, மல = அஞ்ஞானமாகிய சாணத்தை, நீற்ற = தகித்த, சாத்தீக = சத்துவமென்னும், வெண் பொடி = திருநீற்றையும், கொள் = தரித்த, தேவன் = பிரகாச சொரூபியானவன், ஐந்நதி = திருவையாற்றில், வாழ் = விளங்கு கின்ற, சிவானந்த தேசிகனே = ஸ்ரீ சிவானந்த குருநாதனே.

(பொ—ரை) மூன்று சரீரமென்னும் புரங்களை அழித்த ஞானக்கினிச் சுவாலை என்னும் காவி வஸ்திரமும், அருள் வடிவமாகிய அத்துவித திருஷ்டியென்னும் ருத்திராக்க மாலையும், ஜீவன்என்னும் பசுவினது அஞ்ஞானமாகிய சாணத்தைத் தகித்த சத்துவமென்னும் திருநீற்றைத் தரித்த பிரகாச சொரூபியானவன் திருவையாற்றில் விளங்குகின்ற ஸ்ரீ சிவானந்த குருநாதனே. 3

## அறுசீர் விருத்தம்

முனிவன் சீற்றப் புலியை முடித்தவ் வுரியே சாந்தத்
தனிமை யுடைய தாகத் தரித்தோ னகந்தைக் களிற்றைக்
கனிய வுரித்துப் பரமாங் காரப் போர்வை போர்த்தோ
னினிதை யாற்றுச் சிவானந் தேசு, னெங்க ளிறையே. 4

(ப—ரை) முனி=வெறுக்கின்ற, வன்சீற்ற=வலிய கோப மாகிய, புலியை, முடித்து=கொன்று, அவ்வுரியே = அக்

குணத்தையே, சாந்த = சாந்தமென்னும், தனிமை = ஒப்பற்ற, ஆடை அது ஆக = வஸ்திரமாக, தரித்தோன் = தரித்தவனும், அகந்தைக் களிற்றை = அகங்காரமென்னும் யானையை, கனிய = நன்ருக, உரித்து, பரமாங்கார = பரமாங்காரமென்கிற, போர்வை போர்த்தோன் = போர்வையாகக் கொண்டவனும், இனிது = இன்ப வடிவான, ஐயாற்று = பஞ்சநதியில் எழுந்தருளிய, சிவானந்த ஈசன் = ஸ்ரீ சிவானந்தனென்னும் பெயருடைய ஈசுவரனை, எங்கள் இறையே = நமது குருநாதனே.

(பொ—ரை) வெறுக்கின்ற வலிய கோபமாகிய புலியைக் கொன்று அக்குணத்தையே சாந்தமென்னும் ஒப்பற்ற வஸ்திரமாகத் தரித்தவனும் அகங்காரமென்னும் யானையை நன்ருக உரித்து பரம ஆங்காரமென்கிற போர்வையாகக் கொண்டவனும் இன்பவடிவமான பஞ்ச நதியில் எழுந்தருளிய ஸ்ரீ சிவானந்தனென்னும் பெயருடைய ஈசுவரனை நமது குருநாதனே. 4

## வஞ்சி விருத்தம்

வழுவில்சுப வாசனை வண்ணமாங்
கழிசிரசு மென்புகங் காளமுந்
தழுவுமுடி வாயசிற் சத்தியா
நழுவிலணி மன்சிவா னந்தனே. 5

(ப—ரை) வழு இல் = குற்றமற்ற, சுப = நல்ல, வாசனை வண்ணம் = வாசனைகளின் வடிவம், ஆம் = என்னும், கழிசிரசும் = கபாலமும், என்பு = எலும்புகளும், கங்காளமும் = முழுஎலும்பும், தழுவும் = பொருந்திய, முடிவாய = முடிவான, சித்சத்தியாம் = ஞானசக்தியாகிய, நழுவில் = நழுவுதலில்லாத, அணியன் = அலங்காரத்தையுடையவன், சிவானந்தனே = ஸ்ரீ சிவானந்த குருநாதனே.

(பொ—ரை) குற்றமற்ற நல்ல வாசனைகளின் வடிவமென்னும், கபாலமும் எலும்புகளும், முழு எலும்பும் பொருந்திய

முடிவான ஞானசத்தியாகிய நழுவுதலில்லாத அலங்காரத்தை உடையவன் ஸ்ரீ சிவானந்த குருநாதனே. 5

கலித்துறை

அன்னமய முதலாய கோசமெனு
மைந்நதியி லாருயிரதாம்
வன்னவிடை மிசைவாத மித்தைதன்
மயமும்ம லர்க்கணவனுய்த்
துன்னியவ ருட்டுரிய வாரியுமை
பான்மகிழ்சு காதீதமா
மன்னியசி வானந்த நாதனடி
யொன்றிடும் வணங்கல்புரிவாம். 6

(ப—ரை) அன்னமயம் முதலாய=அன்னமயம் முதலாகிய, கோசமெனும்=பஞ்ச கோசங்களின் உணர்ச்சியென்கிற, ஐந்நதியில்=திருவையாற்றில், ஆருயிர் அது ஆம்=அருமையான சத்துவகுண சீவனென்னும், வன்னவிடை மிசை=வெள்ளை வர்ணமான விடபத்தின் மேல், வாதம் மித்தை, தன்மய=தன்மயமென்கிற, மும்மலர்க் கணவன் ஆய்=மலர் போன்ற மூன்று கண்களையுடையவனுய், துன்னிய=பொருந்திய, அருள்=அருள் வடிவமான, துரியவாரி=சமுத்திரம் போன்ற துரிய நிலையென்னும், உமை=உமா தேவியின், பால் மகிழ்=அர்த்த பாகத்தில் விளங்குகின்ற, சுகாதீதமா = துரியாதீதமாக, மன்னிய = நிலைத்த, சிவானந்தநாதன்=ஸ்ரீ சிவானந்த குருநாதனது, அடி=பாதத்தில் ஒன்றிடும் வணங்கல்=கலத்தலாகிய வணக்கத்தை, புரிவோம்= செய்வோம்.

(பொ—ரை) அன்னமய முதலாகிய பஞ்ச கோசங்களின் உணர்ச்சியென்கிற திருவையாற்றில் அருமையான சத்துவ குண சீவனென்னும், வெள்ளை வர்ணமான விடபத்தின் மேல் வாதம், மித்தை, தன்மயமென்கிற மலர் போன்ற மூன்று கண்களையுடையவனுய்ப் பொருந்திய அருள் வடிவமான சமுத்திரம் போன்ற துரிய

நிலையென்னும் உமா தேவியின் அர்த்த பாகத்தில் விளங்குகின்ற துரியாதீதமாக நிலைத்த ஸ்ரீ சிவானந்த குருநாதனது பாதத்திற் கலந்தலாகிய வணக்கத்தைச் செய்வோம்.

கணவனுய்—கண்ணவனுய் என்புதன் இடைக்குறை. 6

அறுசீர் விருத்தம்.

அவத்தையின் சான்று தானு
யமர்ந்தவைம் முகனென் ரேடு
நவத்திசைப் புயங்க ளோங்க
நனியக மகமென் றெங்கும்
பவித்தபே யுடனஞ் ஞானப்
பாயிரு ணடித்தும் பன்மா
தவர்க்குணர் வருமையாற்றுத்
தனிசிவா னந்த னெம்மான். 7

(ப—ரை) அவத்தையின்=சாக்கிர சொற்பன சுழுத்தி துரியம் துரியாதீதமென்கிற ஐந்து அவஸ்தைகளின், சான்று=சாக்ஷி, தானுயமர்ந்த=தானய் விளங்குதலென்னும், ஐமுகன்=ஐந்து முகத்தையுடையவன், (3) ஒன்ரேடு நவத்திசை=பத்துத் திசைகளென்கிற, புயங்கள் ஓங்க=தோள்கள் பிரகாசிக்க, (2) நனி=நன்ருக, அகம் அகம் என்று=நான் நான் என்று, எங்கும் பவித்த=எவ்விடத்தும் தோன்றிய, பேயுடன்=பேய்களோடு, (4)அஞ்ஞான=அஞ்ஞானமென்னும்,பாயிருள்=பெரிய இருளில், நடித்தும்=நடனஞ்செய்தும், பல் மாதவர்க்கு=மகா தபசிகள் பலராலும், உணர்வரும்=அறியமுடியாத, ஐயாற்று=பஞ்ச நதியில் வீற்றிருக்கின்ற, தனி=ஒப்பற்ற, சிவானந்தன்=ஸ்ரீசிவானந்த குருநாதனுன், எம்மான்=நமது தலைவனே.

(பொ—ரை) சாக்கிர சொற்பன சுழுத்தி துரியம் துரியாதீத மென்கிற ஐந்து அவஸ்தைகளின் சாக்ஷிதானய் விளங்குதலென் னும் ஐந்து முகத்தையுடையவன் நன்ருக நான் நானென்று எவ் விடத்தும் தோன்றிய பேய்களோடு பத்து திசைகளென்கிற

தோள்கள் பிரகாசிக்க அஞ்ஞானமென்னும் பெரிய இருளில் நடனஞ்செய்தும் மகா தபசிகள் பலராலும் அறிய முடியாத பஞ்ச நதியில் வீற்றிருக்கின்ற ஒப்பற்ற ஸ்ரீ சிவானந்த குருநாதனே நமது தலைவனே. 7

தனையல தொன்றிலை யெனும்வே
ணியிற்கிரியா சத்திநதி தரித்தில்லாத
தெனவுறுமிச் சாமயவிச் சகத்தெனுந்தேய்
மதியுமவ ணிருத்திச் சுட்டு
வினைமதிநச் சரவைவிவே கப்பணிக
ளாப்பூண்டு மிகுசாத் தீக
மனமெனும்வெண் கயிலையமர் சிவானந்த
விறைபோத மலர்த்தாள் போற்றி. 8

(ப—ரை) தனையலது = தன்னைத்தவிர, ஒன்றும் இலை எனும் = வேறொன்றும் இல்லை என்கிற உணர்ச்சியாகிய, வேணியில் = சடாமுடியில், கிரியா சத்தி = கிரியா சத்தியென்னும், நதி தரித்து = கங்கா நதியைத் தாங்கி, இல்லாதது, எனஉறும் = என்று சொல்லும்படியான, இச்சாமய = இச்சை வடிவமாகிய, இச்சகத்து = இப்பிரபஞ்சம், எனும் = என்கிற, தேய்மதியும் = தேய்ந்த பிறையையும், அவண் இருத்தி = அவ்விடத்தில் தரித்து, சுட்டு வினை = இவ்விதமென்று குறித்த செயலையுடைய, மதி = புத்தியெனும், நச்சரவை = விஷசர்ப்பத்தை, விவேக = விவேகமென்னும், பணிகளா = ஆபரணங்களாக, பூண்டு = அணிந்து, மிகு சாத்தீக = மேலான சத்துவ குணத்தையுடைய, மனமெனும் = மனதென்னும், வெண் கயிலை = வெள்ளிமயமான கைலாயத்தில், அமர் = எழுந்தருளியிருக்கின்ற, சிவானந்த இறை = ஸ்ரீ சிவானந்த குருநாதனது, போத = ஞானமென்கிற, மலர்த்தாள் = மலர் போன்ற திருவடிகளுக்கு, போற்றி = நமஸ்காரம்.

(பொ—ரை) தன்னைத்தவிர வேறொன்றுமில்லையென்கிற உணர்ச்சியாகிய சடாமுடியில் கிரியா சத்தியென்னும் கங்கா நதியைத் தாங்கி இல்லாததென்று சொல்லும்படியான இச்சை வடிவமாகிய இப்பிரபஞ்சமென்கிற தேய்ந்த பிறையையும்,

அவ்விடத்தில் தரித்து இவ்விதமென்று குறிக்கும் செயலையுடைய புத்தியென்னும் விஷ சர்ப்பத்தை விவேகமென்னும் ஆபரணங்களாக அணிந்து, மேலான சத்துவ குணத்தையுடைய மனதென்னும் வெள்ளிமயமான கைலாயத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ சிவானந்த குருநாதனது ஞானமென்கிற மலர் போன்ற திருவடிகளுக்கு நமஸ்காரம்.

செவ்வை யறிவு மழுவையொன்
றுண்டெனுஞ் செங்கைகொண்டு
தவ்வுமுண் மான்சகத் தின்றெனும்
வாமக்கை சார்த்துயர்நோக்
கொவ்வப் பரோட்சமன் றென்றப
யந்தரித் தும்வரத
மிவ்வப ரோட்சந்தொம் மென்பான்
சிவானந்த னெம்மிறையே. 9

(ப—ரை) (2) செவ்வை அறிவு=நல்ல ஞானமென்கிற, மழுவை, ஒன்று உண்டு எனும்=ஒன்றே இருக்கின்றதென்னும், செங்கைகொண்டு=சிறந்த வலக்கரத்தில் ஏந்தி, தவ்வும்=தாவுகின்ற, உள்மான் = மனமென்கிற மானை, சகத்து இன்றெனும்= பிரபஞ்சமென்பதுயில்லையெனும், வாமக்கை = இடக்கரத்தில், சார்த்து=பிடித்து, உயர் நோக்கு=அதுமேல் வேறென்கிற பார்வையை, ஒவ்வ=பொருந்த, பரோட்சம், அன்று என்று = அல்லவென்றும்,அபயந்தரித்தும்=அபயகரங் காட்டியும்,வரதம்= வரதகரங் காட்டுதலால், இவ் அபரோட்சம்=இந்த அபரோட்சமான, தொம் என்பான் = நீயே என்றருளுவான், (1) சிவானந்தன்=ஸ்ரீ சிவானந்த குருநாதனுகிய, எம்மிறை = நமது தலைவன். ஏ—அசை.

(பொ—ரை) ஸ்ரீ சிவானந்த குருநாதனுகிய நமது தலைவன் நல்ல ஞானமென்கிற மழுவை ஒன்றேயிருக்கின்றதென்னும் சிறந்த வலக்கரத்தில் ஏந்தி தாவுகின்ற மனமென்கிற மானை பிரபஞ்சமென்பது இல்லையெனும் இடக்கரத்தில் பிடித்து அது மேல் வேறென்கிற பார்வையை பொருந்தப் பரோட்ச மல்லவென்னும்

அபயக்கரம் காட்டியும் வரதகரம் காட்டுதலால் இந்த அபரோட்ச மான நீயே என்றருளுவான். 9

## எண் சீர் விருத்தம்

இயற்பிரம விசாரப்பாற் கடலெழுசூ னியநஞ் சினையகஞ்சான்
றெனுமிடற்றுட் கொடுபோதக் கழலான்
மயக்கமகி டத்துவரு மறதியெனுங் கூற்றை மாய்த்துயர்நற்
குணகணங்கள் சூழ்ந்திடப்பொய் மடமைத்
துயர்ப்பகையா கியசச்சி தானந்த வுணர்வாஞ் சூலமுமே
விடுமனைத்துஞ் சுடும்விருத்தி ஞான
நயக்கனலுங் கைக்கொடுமே லாஞானச் சுடலை நடித்தருளுஞ்
சிவானந்த நாதன்றாள் போற்றி. 10

(ப—ரை) இயல்=சுபாவமாக விளங்குகின்ற, பிரம விசார=பிரமத்தின் விசாரணையென்னும், பாற்கடலில், எழு= தோன்றிய, சூனிய நஞ்சினை=சூனிய பாவனை என்கிறவிஷத்தை, அகம் சான்று எனும் = நானே சாக்ஷியென்னும், மிடற்றுள் = கண்டத்தினுள்ளே, கொடு=அடக்கிக்கொண்டு, போதக்கழலால்= ஞானமாகிய பாதத்தால், மயக்கமகிடத்து = மயக்கமென்னும் எருமைக்கடாவின் மேல், வரும்=வருகின்ற, மறதியெனும்=மறப்பாகிய, கூற்றை=யமனை, மாய்த்து=அழித்து, உயர்=உயர்ந்த, நற்குண=சற்குணங்களென்கிற, கணங்கள்=பூதகணங்கள், சூழ்ந்திட=சூழ, பொய் மடமைத்துயர்=அசத்துச்சடம் துக்கம் என்பவற்றின் பகையாகிய, சச்சிதானந்த, உணர்வாம்=உணர்ச்சி என்னும், சூலமும், மேவிடும், அனைத்தும்=தோன்றுகின்ற யாவையும், நயக்கனலும்=சிறந்த அக்கினியையும், கைக்கொடு= கைக்கொண்டு, மேலாம் ஞானச் சுடலை=திடஞானமென்னும் மயானத்தில், நடித்தருளும்=நடனஞ்செய்தருளுகின்ற, சிவானந்த நாதன்=ஸ்ரீ சிவானந்த குருநாதனது, தாள் போற்றி=திருவடிகளுக்கு நமஸ்காரம்.

(பொ—ரை) சுபாவமாக விளங்குகின்ற பிரமத்தின் விசாரணையென்னும் பாற்கடலிற்றோன்றிய சூனிய பாவனையென்கிற

விஷத்தை நானே சாக்ஷியென்னுங் கண்டத்தினுள்ளேயடக்கிக் கொண்டு ஞானமாகிய பாதத்தால் மயக்கமென்னும் எருமைக் கடாவின் மேல் வருகின்ற மறப்பாகிய யமனையழித்து உயர்ந்த சற்குணங்கள் என்கிற பூத கணங்கள் சூழ அசத்துச்சடம் துக்கம் என்பவற்றின் பகையாகிய சச்சிதானந்த உணர்ச்சியென்னும் சூலமும் தோற்றுகின்ற யாவையுந் தகிக்கின்ற விருத்தி ஞான மென்னும் சிறந்த அக்கினியையும், கைக்கொண்டு திடஞான மென்னும் மயானத்தில் நடனஞ் செய்தருளுகின்ற ஸ்ரீ சிவானந்த குருநாதனது திருவடிகளுக்கு நமஸ்காரம். 10

### கலித்துறை

காசிக முற்சிர மாசில்ப கீரதி கழறுஞ்சொல்
பேசிய தன்னுரு வோசிவ லிங்கபி ரானுக
வாசிகொ ளைந்நதி வாசம தாயசி வானந்த
தேசிகன் வாசச ரோசம லர்க்கழல் சிந்திப்பாம். 11

(ப—ரை) காசி = ஸ்ரீ காசியென்பது, கழல் = தனது பாதமாகவும், சிரம் = சிரசின் மேலிருக்கின்ற, மாசு இல் பகீரதி = குற்றமற்ற கங்கையானது, கழறும் = பேசுகின்ற, சொல் = தன் வாக்காகவும், பேசிய = சொல்லப்பட்ட, தன் உருவோ = தனது சொரூபமோ, சிவலிங்க பிரானுக = சிவலிங்கப்பெருமானுகவும் விளங்க, அசி கொள் = வாழ்த்துதலைப் பெற்ற, ஐந்நதி = திருவையாற்றில், வாசம் அது ஆய = வாழ்கின்ற, சிவானந்த தேசிகன் = ஸ்ரீ சிவானந்த குருநாதனது, வாச = வாசனை பொருந்திய, சரோச மலர்க் கழல் = தாமரைப் புஷ்பம் போன்ற பாதங்களை, சிந்திப்பாம் = நாம் தியானிப்போம்.

(பொ—ரை) ஸ்ரீ காசியென்பது தனது பாதமாகவும் சிரசின் மேலிருக்கின்ற குற்றமற்ற கங்கையானது பேசுகின்ற தன் வாக்காகவும், சொல்லப்பட்ட தனது சொரூபமோ சிவலிங்கப் பெருமானுகவும் விளங்க வாழ்த்துதலைப் பெற்ற திருவையாற்றில் வாழ்கின்ற ஸ்ரீ சிவானந்த குருநாதனது வாசனை பொருந்திய தாமரைப் புஷ்பம் போன்ற பாதங்களை நாம் தியானிப்போம். 11

## எண் சீர் விருத்தம்

ஆரணம் புகழ் சுந்தர தேசிக னடிகள்
போற்றி கிருட்டின மூர்த்தியாந்
தீர போற்றிசு யம்பிர காசமா தேவ
போற்றிநற் சாமிநா தச்சுகா
கார போற்றி மெய்ப் பஞ்சநதீச வெங்கண்ணி
னுண்மணி போற்றிக ளிப்புடன்
சீர மைந்தவை யாற்றிற்சி வானந்த தேவ
தேவநின் சேவடி போற்றியே. 12



உ

ஸ்ரீ சற்குருநாதன் துணை.

# முத்திநெறி

## மூலமும் — உரையும்

## நூல்

### வெண்பா.

சத்தியஞா னைந்த தற்பரமே யாவையுநீ
நித்தலுமென் றன்பா னினைதல்பர பத்தியதே
யெல்லாமு நானே யெனச்சாந்தி யுற்றிடலே
நல்லார் சொன் ஞான நடை. 1

(ப—ரை) (1) சத்திய ஞான ஆனந்த=சச்சிதானந்தமாகிய, தற்பரமே=தத்பதத்தின் பொருளான ஈசனே, (3)யாவையும் நீ=எல்லாம் நீயே, (2) நித்தலும்=எப்போதும், (4)என்று=என, அன்பால் நினைதல்=அன்பினாலே தியானித்தலே, பரபத்தி அது(ஏ)=பரபத்தியாம், எல்லாமும் நானே என=சகலமும் நானே என்று, சாந்தியுற்றிடலே=அறிந்து சாந்தியடைதலே, நல்லார் சொல்=மேலோர்களால் சொல்லப்பட்ட, ஞான நடை=ஞான மார்க்கமாம். (ஏ—அசை)

(பொ—ரை) சச்சிதானந்தமாகிய தத்பதத்தின் பொருளான ஈசனே எப்போதும் எல்லாம் நீயே என அன்பினால் தியானித்தலே பரபத்தியாம். சகலமும் நானேயென்று அறிந்து சாந்தி அடைதலே மேலோர்களாற் சொல்லப்பட்ட ஞான மார்க்கமாம்.

## அறு சீர் விருத்தம்

சீவ ரகந்தை மமதையுடன் செய்யும் பாவ புண்ணியங்கட்
காவர் தாமே பிணையிருள்சே ரறிவி னவருந் துட்டர்களும்
வாவு மசுர ரியல்பினரு மனிதர் தம்மிற் கடையருமா
மாவின் மூட ரொருபோது மருவா ரான்ம வத்துவையே. 2

(ப—ரை) சீவர்=சீவர்கள், அகந்தை மமதையுடன்= யானெனதென்னும் அபிமானத்தோடும், செய்யும்=செய்கின்ற, பாவ புண்ணியங்கட்கு =பாவ புண்ணியங்களுக்கு, (4) ஆவர்= ஆவார்கள், (2) தாமே=தாங்களே, (3) பிணை, (5) இருள்சேர் அறிவினரும்=மயங்கிய அறிவுடையவர்களும், துட்டர்களும்= துஷ்டர்களும், வாவும்=தாவுகின்ற, அசுரர் இயல்பினரும்=அசுர சுபாவமுடையவர்களும், மனிதர் தம்மில்=மனிதர்களில், கடையரும் = கீழ்ப்பட்டவர்களும், ஆம்=ஆகிய, மா இல் மூடர் = மகிமையற்ற மூடர்கள், ஒருபோதும்=ஒருக்காலும், (7)மருவார்= அடையார்கள், (6) ஆன்ம வத்துவையே = ஆன்மாவென்னும் தனது சொருபத்தையே.

(பொ—ரை) சீவர்கள் யானெனதென்னும் அபிமானத் தோடு செய்கின்ற பாவ புண்ணியங்களுக்குத் தாங்களே பிணை யாவார்கள். மயங்கிய அறிவுடையவர்களும் துஷ்டர்களும் தாவு கின்ற அசுர சுபாவமுடையவர்களும் மனிதர்களில் கீழ்ப்பட்டவர் களுமாகிய மகிமையற்ற மூடர்கள் ஒருக்காலும் ஆன்மாவென்னும் தனது சொருபத்தையே அடையார்கள். 2

ஈசன் சந்நி தானத் திதயம் பலவாய்த் திரியு
மாசொன் றியதீத் தொழிலோர் வருவல் வினைக்கட் டெய்தி
நாசம் பவமுற் றுழல்வார் நளிர்விண் சூழ்ந்த நிலத்திற்
றேசின் றியமுள் விரைத்துச் செந்நெற் பெறுவா ருண்டோ 3

(ப—ரை) ஈசன் சந்நிதானத்து=ஈசுவரனுடைய சந்நிதா னத்தில், இதயம் பலவாய்= பலவிதமான சங்கற்பங்களைச் செய்து

கொண்டு, திரியும்=அதற்குத் தக்கபடி நடக்கின்ற, மாசு ஒன்றிய=குற்றம் பொருந்திய, தீத்தொழிலோர்=தகாத செயலையுடையவர்கள், வரு=ஏற்படுகின்ற, வல் வினைக்கட்டு=வலிய கர்மக் கட்டுப்பாட்டை, எய்தி=பொருந்தி, நாசம்பவம்=இறப்பையும் பிறப்பையும், உற்று உழல்வார் = அடைந்து திரிவார்கள், (1)நளிர்=குளிர்ந்த, விண் சூழ்ந்த நிலத்தில்=மேகங்கள் சூழ்ந்த பூமியில், தேசு இன்றிய=நன்மையற்ற, முள் விரைத்து=முள் விதைகளை விதைத்து, செந்நெல் பெறுவார் உண்டோ=சிறந்த நெல் விளைவை அடைபவர்களும் உண்டோ. இல்லை.

(பொ—ரை) குளிர்ந்த மேகங்கள் சூழ்ந்த பூமியில் நன்மையற்ற முள் விதைகளை விதைத்து சிறந்த நெல் விளைவை அடைபவர்களும் உண்டோ. இல்லை. ஈசுவரனுடைய சந்நிதானத்தில் பலவிதமான சங்கற்பங்களைச் செய்துகொண்டு அதற்குத் தக்கபடி நடக்கின்ற குற்றம் பொருந்திய தகாத செயலையுடையவர்கள் ஏற்படுகின்ற வலிய கர்மக் கட்டுப்பாட்டைப் பொருந்தி, இறப்பையும் பிறப்பையும் அடைந்து திரிவார்கள்.

பலவெள் ளம்வரி னுந்நடு
நின்ற பருங்கற் சலியாபோ
லலர்நா மம்முரு பலபரி
பாகம தாயினு மோர்வணமா
யுலவுறு சின்மய மதுவே
நாமென வுணர்பர ஞானிகள்பாற்
புலர்வுறு விஷமச் சங்கைசெய்
தோனழல் புகும்யுக மாயிரமே. 4

(ப—ரை) பல வெள்ளம் வரினும்=அநேக பிரவாகங்கள் வந்தாலும், நடு நின்ற=நதியின் மத்தியிலிருக்கின்ற, பருங்கல்= பெரிய பாறையானது, சலியா போல்=அசையாதது போல, அலர்=தோன்றுகின்ற, நாமம் உரு=நாம ரூபங்கள், பல=பலவிதமாய், பரிபாகம் (அது) ஆயினும்=காரியப்பட்டாலும், ஓர் வணம் ஆய் = ஒரேவிதமாய், உலவுறு = விளங்குகின்ற, சின்மயம்

அதுவே=ஞான வடிவமாகிய அந்தப் பிரமமே, நாம் என உணர்= நாமாயிருக்கிறேமென்று உணர்ந்த, பரஞானிகள் பால்=மேலான ஞானிகளிடத்து, புலர்வுறு=பயனற்ற, விஷமச் சங்கை செய்தோன்=தகாத கேள்விகளைக் கேட்டோன், (3) அழல் புகும்= நரகத்தையடைவான், (2) யுகம் ஆயிரம் (ஏ) =ஆயிரக்கணக்கான யுகங்களாக.

(பொ—ரை) அநேக பிரவாகங்கள் வந்தாலும் நதியின் மத்தியிலிருக்கின்ற பெரிய பாறையானது அசையாதது போல, தோன்றுகின்ற நாம ரூபங்கள் பலவிதமாய்க் காரியப்பட்டாலும் ஒரே விதமாய் விளங்குகின்ற ஞான வடிவமாகிய அந்தப் பிரமமே நாமாயிருக்கிறேமென்றுணர்ந்த மேலான ஞானிகளிடத்து பயனற்ற கேள்விகளைக் கேட்டோன் ஆயிரக்கணக்கான யுகங்களாக நரகத்தையடைவான்.

அது—பகுதிப் பொருள் விகுதி. ஏ—அசை.

### கொச்சகக் கலிப்பா.

தன்வாய் வருமுதிரந் தான்கரண்டும் வெற்றென்பின்
மன்வாய்த் ததென்று மயங்குநாய் போற்சீவர்
தன்மாத் திரசுகத்தைத் தாம்பிறவின் பாலுளதா
மன்மாறுற் றுள்குமலான் மற்றனைத்துந் துன்புருவே. 5

(ப—ரை) தன் வாய்=தனது வாயிலிருந்து, வரும் உதிரம்=உண்டான உதிரத்தை, தான் கறண்டும்=பற்றிக் கறண்டுகின்ற, வெறு என்பின்=பசையற்ற எலும்பிலிருந்து, மன் வாய்த்தது என்று=நன்ருக கிடைத்தது என, மயங்கும் நாய் போல்= எண்ணி மயங்குகின்ற நாயைப் போல, சீவர்=சீவர்கள், தன் மாத்திர சுகத்தை = தனது சொரூபமாகிய ஆனந்தத்தையே, தாம் = தாங்கள், பிறவின் பால் = மற்ற வஸ்துக்களிலிருந்து, உளதா=உண்டானதாக, மன் மாறுற்று =மிக விபரீதமாய், உள்கும் = நினைப்பார்கள், அலால்=அப்படியல்லாமல் உண்மையாக, மற்றனைத்தும்=சகல வஸ்துக்களும், துன்புருவே=துக்க வடிவமேயாகும்.

(பொ—ரை) தனது வாயிலிருந்து உண்டான உதிரத்தைப் பற்றிக் கறண்டுகின்ற பசையற்ற எலும்பிலிருந்து நன்ருக கிடைத்ததென எண்ணி மயங்குகின்ற நாயைப் போல சீவர்கள் தனது சொரூபமாகிய ஆனந்தத்தையே தாங்கள் மற்ற வஸ்துக்களிலிருந்து உண்டானதாக மிக விபரீதமாக நினைப்பார்கள். அப்படியல்லாமல் உண்மையாகச் சகல வஸ்துக்களும் துக்க வடிவமேயாகும்.

## கலி விருத்தம்

அற்ப மோர்பொருட் டன்றி யழுதுதீ
நிற்பர் போன்மழ நெட்டுயிர்ப் புற்றிடும்
பற்பல் காலுந்தம் பாவனை யாலுயிர்
வற்பு றுந்துயர் வாய்த்தன் மடமையே. 6

(ப—ரை) அற்பம்=சிறிதும், ஓர் பொருட்டு அன்றி=ஓர் காரியமுமில்லாமல், அழுது, தீ நிற்பர் போல்=தீயை மிதித்தவர் போல, மழ=குழந்தைகள், நெட்டுயிர்ப்பு உற்றிடும்=பெருமூச்சு விட்டு வருந்துவர், (அது போல) பற்பல் காலும்=பல காலமும், தம் பாவனையால்=தம்மாற் கற்பிக்கப்பட்ட பாவனைகளால், உயிர்=சீவர்கள், வற்புறும் துயர்=பெருந் துன்பத்தை, வாய்த்தல்=அடைதலானது, மடமையே=அறியாமையேயாம்.

(பொ—ரை) சிறிதும் ஓர் காரியமுமில்லாமல் அழுது தீயை மிதித்தவர் போலக் குழந்தைகள் பெரு மூச்சு விட்டு வருந்துவர். அது போலப் பல காலமும் தம்மாற் கற்பிக்கப்பட்ட பாவனைகளால் சீவர்கள் பெருந்துன்பத்தையடைதலானது அறியாமையேயாம்.

கலங்கி டாதவே காக்கிர சித்தமாய்
பலஞ்செய் தத்துவ பாவனை யெய்துறுர்
தலங்கொள் காவியந் தர்க்க முழவுட
னலைந்த வாணிகத் தாழ்ந்த மனத்தரே. 7

(ப—ரை) (2) கலங்கிடாத = சலனமற்ற, ஏகாக்கிர, சித்த மாய் = சித்தத்தையடைந்து, பலம் செய் = சுபாவமான பிர்மா னந்த சுகத்தை விளக்குகின்ற, தத்துவ பாவனை = உண்மையான ஆத்ம நிச்சயத்தை, எய்துரு = அடைய மாட்டார்கள், (1) தலங் கொள் = பூமியில் வழங்குகின்ற, காவியம், தர்க்கம், முழவுடன் = முழக்கத்தோடு, அலைந்த வாணிகத்து = மனச் சஞ்சலமுடைய வாணிகத் தொழில்களில், ஆழ்ந்த மனத்தர்(ஏ) = பற்றிய பாவனை உடையவர்கள். ஏ—அசை.

(பொ—ரை) பூமியில் வழங்குகின்ற காவியம் தர்க்கம் முழவினோடு மனச்சஞ்சலமுடைய வாணிகத்தொழில்களிற் பற்றிய பாவனையுடையவர்கள் சலனமற்ற ஏகாக்கிர சித்தத்தையடைந்து சுபாவமான பிர்மானந்த சுகத்தை விளக்குகிற உண்மையான ஆத்ம நிச்சயத்தையடையமாட்டார்கள்.

கைசெய் மைந்தரா காரந் துயில்பய
மைது னங்களை வாய்ந்து பசுவொப்பார்
மெய்மை தேறும் விவேகமொன் றெய்துரு
துய்வி லாமை யுறுமத னலரோ. 8

(ப—ரை) (1) கை செய் மைந்தர் = சிருஷ்டிக்கப்பட்ட மனிதர்கள், (3) ஆகாரம் = உணவு, துயில் = நித்திரை, பயம், மைதுனங்களை = சேர்க்கை என்னுமிவைகளை, வாய்ந்து = பொருந்தி, பசு ஒப்பார் = மிருகத்திற்குச் சமானமாகிருர்கள், (2) மெய்மை = உண்மைப் பொருளை, தேறும் = அறிந்து தெளிந்து கொள்ளும், விவேகம், ஒன்று = ஒன்று மட்டும், எய்துருது = அடையாமல், உய்விலாமை உறும் அதனல் = வாழ்விழந்து போதலால், (அரோ—அசை.)

(பொ—ரை) சிருஷ்டிக்கப்பட்ட மனிதர்கள் உண்மைப் பொருளையறிந்து தெளிந்து கொள்ளும் விவேகம் ஒன்றை மட்டும் அடையாமல் வாழ்விழந்து போதலால் உணவு நித்திரை பயம் சேர்க்கை என்னும் இவைகளைப் பொருந்தி மிருகத்துக்குச் சமான மாகிருர்கள். 8

தரங்கிணிய டைந்தவர்த மைக்கொடு கிழக்கே
விரைந்திடுமெ திர்ந்துகரை மேவுவர்கு றுக்கா
யிரும்பொழில்பி றந்தவரி ழிந்தநெறி பற்ரு
தொருங்குமன மாய்முயலி னொன்றிடுவர் நன்றே. 9

(ப—ரை) (1) தரங்கிணி = நதியானது, அடைந்தவர் தமை = தன்னுள் இறங்கினவர்களை, கொடு = இழுத்துக்கொண்டு, கிழக்கே = தன் போக்கிலேயே, விரைந்திடும் = வேகமாகச் செல்லும், எதிர்ந்து = ஆனால் இறங்கினவர் அதனை எதிர்த்து, (3) கரை மேவுவர் = கரையை அடைவார்கள், (2) குறுக்காய் = குறுக்கே சென்று, (4) இரும்பொழில் = (அது போல்) பெரிய உலகில், பிறந்தவர் = பிறந்த மனிதர், இழிந்த நெறி = துன்மார்க்கத்தை, பற்ருது = அடையாமல், ஒருங்கு = வசமான, மனமாய் = மனத்தை யுடையவர்களாய், முயலின் = சன்மார்க்கத்தில் நடந்தால், (6) ஒன்றிடுவர் = சேர்வார்கள், (5) நல்ல கதியே.

(பொ—ரை) நதியானது தன்னுள் இறங்கினவர்களை இழுத்துக் கொண்டு தன் போக்கிலேயே வேகமாகச் செல்லும். ஆனால் இறங்கினவர் அதனை எதிர்த்து குறுக்கே சென்று கரையையடைவார்கள். அதுபோல் பெரிய உலகில் பிறந்த மனிதர் துன்மார்க்கத்தையடையாமல் வசமான மனத்தை உடையவர்களாய்ச் சன்மார்க்கத்தில் நடந்தால் நல்ல கதியே சேர்வார்கள்.

மான பாமர மார்க்கநற் கன்மானுட்
டான மோடு சகுண உபாசனை
தேன நிர்க்குணத் யான முறையினு
லூன மற்றுயர்ந் தோங்குமொன் ருென்றினே. 10

(ப—ரை) (1) மான = அபிமானத்தோடு கூடிய, பாமர மார்க்கம் = அவிவேகிகளின் கொள்கை, நல் கன்ம அனுட்டானம் = நல்ல கர்மானுஷ்டானம், சகுண உபாசனை, தேன்அ = (உத்தம பக்குவர்களுக்கு) இனிமையாகிய, நிர்க்குணத்யானம் = நிர்க்குணத்

தியான மென்னும் இவைகள், முறையினுல் = கிரமமாக, (8) ஊனம்=குறைவு, அற்று, உயர்ந்து ஓங்கும்=உயர்வையடை யும், ஒன்று=பின்னுள்ள ஒன்று, ஒன்றின் ஏ = முன்னுள்ள ஒன்றைவிட. ஏ—அசை.

(பொ—ரை) அபிமானத்தோடு கூடிய அவிவேகிகளின் கொள்கை நல்ல கர்மானுஷ்டானம் சகுணோபாசனை, உத்தம பக்குவர்களுக்கு இனிமையாகிய நிர்குணத் தியானமென்னும் இவைகள் கிரமமாக பின்னுள்ள ஒன்று முன்னுள்ள ஒன்றைவிட குறைவற்று உயர்வையடையும்.

### வெண்பா

அஞ்ஞ ருறவா லவிவேகந் துர்க்குணங்கள்
விஞ்ஞை யறுதுயரம் வீழ்பவமாந்—தஞ்ஞ
ருறவால் விவேக முயர்குணஞ்சந் தோஷ
மறிவாய வீட்டின்ப மாம். 11

(ப—ரை) அஞ்ஞர் உறவால்=அறிவற்றவர்களின் சினே கத்தால், அவிவேகம் துர்க்குணங்கள், விஞ்ஞை அறு=விசேஷ ஞானத்தைக் கெடுக்கின்ற, துயரம்=துயரங்கள், வீழ்பவம்= இழிந்த பிறவிகள், ஆம்=உண்டாகும், தஞ்ஞர்=அறிஞர்களின், உறவால்=சினேகிதத்தினுல், விவேகம், உயர்குணம்=சற்குணம், சந்தோஷம்=மகிழ்ச்சி, அறிவு ஆய=ஞானமாகிய, வீடு இன்பம்=மோக்ஷானந்தம் என்னும் இவைகள்,ஆம்=உண்டாகும்.

(பொ—ரை) அறிவற்றவர்களின் சினேகத்தால் அவிவேகம் துர்க்குணங்கள் விசேஷ ஞானத்தைக் கெடுக்கின்ற துயரங்கள் இழிந்த பிறவிகள் உண்டாகும். அறிஞர்களின் சினேகத் தால் விவேகம், சற்குணம், மகிழ்ச்சி ஞானமயமாகிய மோக்ஷானந்தம் என்னுமிவைகள் உண்டாகும்.

## கலி நிலைத் துறை

மகளிர் போகத்தின் மூடர்செய் வாஞ்சையு மகிக்கு
ளகலு நூற்களான் வாதியர் விசாரிக்கு மமைவுந்
தகைத லான்மனம் யோகியர் படுமிடர் தனையும்
துகளி லாதகூ டத்தர்பாற் செலுத்துதல் சுகமே. 12

(ப—ரை) (2) மகளிர் = மாதர்களின், போகத்தில், மூடர் செய் வாஞ்சையும் = மூடர்கள் செய்கின்ற பிரீதியும், (1) மகிக்குள் = உலகில், (3) அகலும் நூற்களால் = விஸ்தாரமான சாஸ்திரங்களைக் கொண்டு, வாதியர் = வாது செய்கிறவர்கள், விசாரிக்கும் = ஆராய்கின்ற, அமைவும் = அமைதியும், தகைதலால் மனம் = மனதையடக்குவதால், யோகியர் = யோகிகள், படும் இடர் தனையும் = அடைகின்ற வருத்தத்தையும், துகள் இலாத = சங்கற்ப மற்ற பரிசுத்தமான, கூடத்தர் பால் செலுத்துதல் = ஆத்மானுபவத்தை அடைதற்காக ஏற்குதல், சுகம் ஏ = பரம சுக காரணமாம். ஏ—அசை.

(பொ—ரை) உலகில் மாதர்களின் போகத்தில் மூடர்கள் செய்கின்ற பிரீதியையும், விஸ்தாரமான சாஸ்திரங்களைக்கொண்டு வாது செய்கிறவர்கள் ஆராய்கின்ற அமைதியையும், மனத்தை அடக்குவதால் யோகிகளடைகின்ற வருத்தத்தையும், சங்கற்ப மற்ற பரிசுத்தமான ஆத்மானுபவத்தையடைதற்காக ஏற்குதல் பரம சுக காரணமாம்.

## வெண்பா

தாழ்ந்து முயர்ந்துஞ் சமனும் பல்காலுஞ்
சூழ்ந்து சகசிருட்டி தோன்றிநிகழ்ந்—தாழ்ந்தொழித
லென்று முளபடியே லிவ்வாறு மாகாவென்
றென்று நினைவதற்குண் டோ. 13

(ப—ரை) தாழ்ந்தும் = தாழ்வாகியும், உயர்ந்தும் = உயர்வாகியும், சமனும் = சமமாகியும், பலகாலும் = இவ்வாறுபலதரமும்,

சூழ்ந்து = ஏற்பட்டு, சகசிருட்டி = பிரபஞ்ச உற்பத்தியானது, தோன்றி = தோற்றி, நிகழ்ந்து = விளங்கி, ஆழ்ந்து ஒழிதல் = லயமாதல், என்றும் = எக்காலமும், உளபடியேல் = உள்ள சுபாவமேயானுல், இவ்வாறு ஆம் = இப்படியாகவேண்டும், ஆகா = அப்படியாகக் கூடாது, என்று, ஒன்று = ஒரு காரியத்தை, நினைவதற்குண்டோ = நினைக்கக் கூடுமோ, கூடாது.

(பொ—ரை) தாழ்வாகியும் உயர்வாகியும் சமமாகியும் இவ்வாறு பலதரமுமேற்பட்டுப் பிரபஞ்ச உற்பத்தியானது தோற்றி விளங்கி லயமாதல் எக்காலமுமே உள்ள சுபாவமேயானுல் இப்படியாகவேண்டும் அப்படியாகக் கூடாது என்று ஒரு காரியத்தை நினைக்கக் கூடுமோ. கூடாது.

### கலித்துறை

எதிர்படார் துன்புறவு மறியாரெ
திர்த்தபிற ரிடரிற்செலா
ரதிர்பகைஞர் துயர்மிகக் கோருவார்
தமரிடர ழுந்துவார்தா
மிதுவுடல்வ ருந்தநா னென்றதைவ
ருந்துவேன் யானெனபராற்
புதுமையீ தபிமான வரவொன்று
போலவைகள் பூதவியலே. 14

(ப—ரை) எதிர்படார் = மனிதர் தமக்கு எதிர்படாதவர்கள், துன்பு உறவும் = துன்பமடைந்திருந்தாலும், அறியார் = தாம் அதை அறியமாட்டார், பிறர் இடரில் = அன்னியர் துன்பப் படுதலில் செலார் = செல்லார், அதிர் பகைஞர் = நடுங்குகின்ற பகைவர், துயர் = துன்பமடைதலைப் பார்த்து, மிக = அது அதிகமாகும்படி, கோருவார் = வேண்டுவார், தமர் = தம்மைச்சேர்ந்தவர், இடர் = துன்பப்படுதலைப் பார்த்து, அழுந்துவார் தாம் = தாம் அபிமானித்து வருந்துவார், இது உடல் = இந்தத் தனது தேகம், வருந்த = துன்பமடைய, நான் என்று அதை = அந்தச் சரீரத்தை

நானென்று கருதிக்கொண்டு, வருந்துவேன் யான்=நான் துன்பமடைகின்றேன், என்பர் ஆல் =என்று சொல்வார், புதுமை= ஆச்சர்யம், ஈது=இந்த வித்தியாசங்கள், அபிமானவரவு= அபிமானத்தின் காரியமாம், ஒன்று போல் = அபிமானம் இன்றேல் ஒருவிதமாக, அவைகள்=அந்த வித்தியாசத் தோற்றங்கள், பூத இயலே=பஞ்ச பூத காரியமே எனத்தோன்றும். ஆல்—அசை.

(பொ—ரை) மனிதர் தமக்கு எதிர்படாதவர்கள் துன்பமடைந்திருந்தாலும் தாம் அதை அறியமாட்டார். தமக்கு எதிர்ப்பட்ட அன்னியர் துன்பப்படுதலிற்செல்லார். நடுங்குகின்ற பகைவர் துன்பமடைதலைப் பார்த்து அது அதிகமாகும்படி வேண்டுவார். தம்மைச் சேர்ந்தவர் துன்பப்படுதலைப்பார்த்து தாம் அபிமானித்து வருந்துவார். இந்தத் தனது தேகம் துன்பமடைய அந்தச் சரீரத்தை நானென்று கருதிக்கொண்டு நான் துன்பமடைகின்றேன் என்று சொல்வார். ஆச்சர்யம்! இந்த வித்தியாசங்கள் அபிமானத்தின் காரியமாம். அபிமானம் இன்றேல், ஒரே விதமாக அவ் வித்தியாசத் தோற்றங்கள் பஞ்ச பூதக் காரியமே எனத் தோன்றும்.

## கலி விருத்தம்

விளைபிர பஞ்சநீள் விருத்தி கட்கெலாந்
திளைமனோ ராச்சியந் திடஞ்செய் சாதன
முளையதாய்ப் பவங்களின் மூல மாதலீ
துளவற நூன்முறை யொழுக்கின் மாய்த்தியால். 15

(ப—ரை) விளை=தோற்றுகின்ற, பிரபஞ்ச=பிரபஞ்சத்தின், நீள் விருத்திகட்கு எலாம்=பலவிதமான காரியங்கள் எவைக்கும், திளை = நினைவு வடிவமாகிய, மனோராச்சியம் = மனோராச்சியமானது, திடம் செய்=வலிமையான, சாதனம் = சாதனமான, முளையதாய்=முளையாகி, பவங்களின் மூலம்=பிறவிகளுக்குக் காரணம், ஆதல்=ஆதலால், ஈது உளவு அற=இந்த மனோராச்சியம்

உண்டாகாதபடி, நூல் முறை ஒழுக்கின்=சாஸ்திரங்களில் கிரமமாகச் சொல்லப்பட்ட, ஒழுக்கத்திஞல், மாய்த்தி=கெடுப்பாய். ஆல்—அசை.

(பொ—ரை) தோற்றுகின்ற பிரபஞ்சத்தின் பலவிதமான காரியங்கள் எவைக்கும் நினைவு வடிவமாகிய மனோராச்சியமானது வலிமையான சாதனமான முளையாகிப் பிறவிகளுக்குக் காரணமாதலால், இந்த மனோராச்சியம் உண்டாகாதபடி சாஸ்திரங்களில் கிரமமாகச் சொல்லப்பட்ட ஒழுக்கத்திஞல் கெடுப்பாய்.

### அறுசீர் விருத்தம்

ஞானநன் னெறியு ணர்த்து
    நயத்தசாத் திரங்க ளன்றி
யேனைநூல் பார்க்க லாகா
    தியல்பினின் வேண்டு மாயி
ஞனதன் னிலைவி டாம
    லவனியின் மீது சாவ
தானமாய்ப் பூர்வ பட்ச
    தரமெனப் பார்த்துத் தள்ளே. 16

(ப—ரை) ஞான நல் நெறி உணர்த்தும் = நல்ல ஞான நெறியை விளக்குகின்ற, நயத்த சாத்திரங்களன்றி = மேன்மையான சாத்திரங்களைத் தவிர, ஏனை நூல் பார்க்கலாகாது=மற்ற சாத்திரங்களைப் பார்க்கக்கூடாது, இயல்பினில்=சகாயத்திற்காக, வேண்டுமாயின்=வேண்டுமென்ருல், ஆன தன் நிலை=ஏற்பட்ட தன்நிச்சயத்தை, விடாமல்,(1)அவனியின் மீது=இவ்வுலகத்தில், (3) சாவதானமாய்=சாக்கிரதையாய், பூர்வ பட்ச தரம் என= பூர்வபட்சமானதென்று, பார்த்துத்தள் (ஏ) = பார்த்து விட்டு விடுவாய். ஏ—அசை.

(பொ—ரை) இவ்வுலகத்தில் நல்ல ஞான நெறியை விளக்குகின்ற மேன்மையான சாத்திரங்களைத்தவிர மற்ற சாத்திரங்களைப்

பார்க்கக் கூடாது. சகாயத்திற்கு வேண்டுமென்றால் ஏற்பட்ட தனது நிச்சயத்தை விடாமல் சாக்கிரதையாய்ப் பூர்வபட்சமான தென்று பார்த்து விட்டு விடுவாய்.

## கலி விருத்தம்

தொடர்சந் தேக சொரூபமா மாயைதா
னடைவு றும்பொரு ளன்றென் றறிந்திடார்
தடைசெய் சங்கையுட் சங்கைசெய் காரண
மிடரஞ் ஞான மெனப்புகல் வாரரோ. 17

(ப—ரை) தொடர் = தொடர்ந்து வருகின்ற, சந்தேக சொரூபம், ஆம் மாயை = ஆகின்ற மாயையானது, தான் அடைவுறும் = அடையத்தக்க பொருள், அன்று என்று அறிந்திடார் = அல்லவென்று அறியாதவர்கள், தடை செய் = தடையாகிய, சங்கையுட் சங்கை = சங்கைக்குள் சங்கை, செய் = செய்கின்ற, காரணம், இடர் = துன்பமான, அஞ்ஞானம் = அஞ்ஞானமே, எனப்புகல்வார் = என்று அறிஞர்கள் சொல்வார்கள். அரோ—அசை.

(பொ—ரை) தொடர்ந்து வருகின்ற சந்தேக சொரூபமாகின்ற மாயையானது தான் அடையத்தக்க பொருளல்ல என்று அறியாதவர்கள், தடையாகிய சங்கைக்குட் சங்கை செய்கின்ற காரணம் துன்பமான அஞ்ஞானமேயென்று அறிஞர்கள் சொல்லுவார்கள்.

## வெண்பா

உனதெனநீ கொண்ட வுடம்பினுட்சில் பேதம்
வினவியறி யாதும் விடய—முனமே
சிலவறிந்து மென்செய்தாய் தேர்ந்தும்தே ராதும்
பலவுளதென் றெண்ணியுழப் பல். 18

(ப—ரை) (2) உனதென = உன்னுடையதென்று, (1) நீ,

(3)கொண்ட=எண்ணிக்கொண்ட, உடம்பினுள்=சரீரத்தினுள், சில் பேதம்=சில விஷயங்களை, வினவி=விசாரித்து, அறியாதும்= அறியாமலும், (5) விடயம்=விஷயங்களை, (4) முனம்=எதிர்ப் பட்டதில் ஏ, சில, (6) அறிந்தும், என்=என்ன, செய்தாய், தேர்ந்தும்=கண்டதும், தேராதும் = காணாததும், பல உளதென்று=பல இருக்கின்றன என்று, எண்ணி, உழப்பல் = சஞ்சலப்படாதே. ஏ—அசை.

(பொ—ரை) நீ உன்னுடையதென்று எண்ணிக்கொண்ட சரீரத்தினுள் சில விஷயங்களை விசாரித்து, அறியாமலும், எதிர்ப் பட்டதிற் சில விஷயங்களை அறிந்தும் என்னசெய்தாய். கண்டதும் காணாததும் பல இருக்கின்றன என்று எண்ணி சஞ்சலப் படாதே.

## வஞ்சி விருத்தம்

திரமற்றதி ரத்துவ மாயைச்
சிரமாலிணை தீபசு வாலை
பிரவாகச லம்பிர மத்தே
யரவப்பிர மைக்கக நாரே. 19

(ப—ரை) (4) திரமற்ற=நிலையாத, திரத்துவ=நிலைமை யுடைய, மாயை=மாயையினது, சிரமால்=நெடுங்கால மயக்கத் தோற்றத்திற்கு, இணை=உவமானமாவது, தீப சுவாலை=விளக் கில் இடைவிடாமல் மேலெழும்பிக் கொண்டிருக்கின்ற சுவாலை யின் தொடர்ச்சியும், பிரவாக சலம்=பிரவாகத்தின் மேடு பள்ளங் களில் தோற்றுகின்ற நீரின் தொடர்ச்சியும் ஆகும்,(3)பிரமத்தே= பிரமத்தினிடத்திலேயே. (2)அரவப் பிரமைக்கு = (மாலைக்காலத் தில் தோன்றுகின்ற) பாம்பென்னும் மயக்கத்திற்கு, அகம்= இடமானது போல், (1) நாரே=கயிறே.

(பொ—ரை) கயிறே மாலைக்காலத்தில் தோன்றுகின்ற பாம்பென்னும் மயக்கத்திற்கிடமானது போல பிரமத்தினிடத்தி லேயே நிலையாத நிலைமையுடைய மாயையினது நெடுங்கால மயக்கத்தோற்றத்திற்கு உவமானமாவது விளக்கில் இடைவிடாது

மேலெழும்பிக்கொண்டிருக்கும் சுவாஸையின் தொடர்ச்சியும் பிரவாகத்தின் மேடு பள்ளங்களில் தோற்றுகின்ற நீரின் தொடர்ச்சியுமாகும்.

### கலித்துறை

திரிச ரேணுமு ேனாபர மாணுகொல் சேர்சடத்து
முருகு மண்டம தோபகி ரண்டமதோ சொலீறு
முரிபி பீலிகை யாதிகொ றம்பமுதற் கொல்சித்தும்
பிரம னேவொர்ச தாசிவ னீறுகொல் பேசிலீசன். 20

(ப—ரை) (2) திரிசரேணு, முனோ=முதலாகவோ, பரமாணு கொல்=அல்லது பரமாணு முதலாகவோ, (4) சேர்= ஆகிய, சடத்தும்=சடமும், (3) உருகும்=அழியும், அண்டம் அது ஓ = அண்டமோ, பகிர் அண்டம் அது ஓ=அல்லது பகிரண்டமோ, சொல் = என்று சொல்லப்படுகின்ற, ஈறும் = முடிவும், (5) முரி = கெடுகின்ற, பிபீலிகை = சிற்றெறும்பு, ஆதிகொல் = முதலாகவோ, தம்பம்=அல்லது ஸ்தம்பப் பூச்சி, முதல்கொல்=முதலாகவோ, (7) சித்தும்=விளங்குகின்ற சித்தும், (6) பிரமனே=பிரம தேவன் முடிவாகவோ, ஓர் =அல்லது ஒப்பற்ற, சதாசிவன், ஈறு கொல்=முடிவாகவோ, (1) பேசில்= பேசுமிடத்து, (8) ஈசன்=ஈசுவரனும்.

(பொ—ரை) பேசுமிடத்து திரிசரேணு முதலாகவோ அல்லது பரமாணு முதலாகவோ அழியும் அண்டமோ அல்லது பகிரண்டமோ என்று சொல்லப்படுகின்ற முடிவுமாகிய சடமும் கெடுகின்ற சிற்றெறும்பு முதலாகவோ அல்லது ஸ்தம்பப் பூச்சி முதலாகவோ பிரம தேவன் முடிவாகவோ அல்லது ஒப்பற்ற சதாசிவன் முடிவாகவோ விளங்குகின்ற சித்தும் ஈசுவரனும்.

### எண் சீர் விருத்தம்

புகழாமை தனைத்தனது தருமம்வெளி விளங்க
புரியாமை பொறையிடர் செய்யாமைகப டின்மை
யகமின்மை சுசித்துவமனோ நிக்கிரகம் விடயத்
தாசையறல் குருசேவை சலனமது வின்மை
மகவுமனை யில்விழைவில் லாமைசரை பவநோய்
மரணவிடர்த் தோடங்காண் பதுதனித்தோர் வுலகர்
தொகையினசை யறல்பக்க வாதமின்மை மகிழ்ச்சி
துக்கத்திற் சமசித்த முடையாரறி வறிவார். 21

(ப—ரை) புகழாமை தனை = தன்னைப் புகழாமையும், தனது தருமம் = தான் நடத்தும் தர்மத்தை, வெளி விளங்க = வெளிப்படையாய்த் தெரியும்படி, புரியாமை = செய்யாமையும், பொறை = பொறுமையும், இடர் செய்யாமை = துன்பமியற்ருமையும், கபடின்மை = கபடமில்லாமையும், அகமின்மை = அகங்காரமில்லாமையும், சுசித்வம் = சுத்தமுடைமையும், மனோநிக்கிரகம் = மனதையடக்குதலும், விடயத்து ஆசை அறல் = விஷயங்களில் இச்சையில்லாமையும், குரு சேவை = குரு வணக்கமும், சலனம் அது இன்மை = சஞ்சலமில்லாமையும், மகவு = புத்திரர்களிடத்தும், மனை = மனைவியிடத்தும், இல் = வீட்டினிடத்தும், விழைவு இல்லாமை = பற்றில்லாமையும், சரை = வயோதிகப் பருவத்திலும், பவம் = பிறப்பிலும், நோய் = வியாதியிலும், மரண இடர்த் தோடம் = இறப்பிலும் உள்ள துன்பங்களையும் தோஷங்களையும், காண்பது = விசாரித்துப் பார்த்தலும், தனித்து ஓர்வு = தனிமையாய் இருந்து ஆராய்தலும், உலகர் தொகையில் = உலகத்தவர்களின் கூட்டத்தில், நசை அறல் = இச்சை விடுதலும், பக்கவாதமின்மை = பக்ஷபாதமில்லாமையும், மகிழ்ச்சி துக்கத்தில் = மகிழ்ச்சியிலும் துக்கத்திலும், சம சித்தம் = சித்தம் சமமாயிருத்தலும் என்னும் இக்குணங்களை, உடையார் = உடைய மனிதரே, அறிவு அறிவார் = ஆத்மாவை அனுபவமாய் அறிவார்கள்.

(பொ—ரை) தன்னைப் புகழாமையும், தான் நடத்தும்

தர்மத்தை வெளிப்படையாய்த் தெரியும்படி செய்யாமையும், பொறுமையும், துன்பமியற்ருமையும், கபடமில்லாமையும், அகங்காரம் இல்லாமையும், சுத்தமுடைமையும், மனதை அடக்குதலும், விஷயங்களில் இச்சையில்லாமையும், குரு வணக்கமும், சஞ்சலமில்லாமையும், புத்திரர்களிடத்தும், மனைவியிடத்தும், வீட்டினிடத்தும் பற்றில்லாமையும், வயோதிகப் பருவத்திலும், பிறப்பிலும், வியாதியிலும், இறப்பிலும், உள்ள துன்பங்களையும், தோஷங்களையும் விசாரித்துப் பார்த்தலும், தனிமையாயிருந்து ஆராய்தலும் உலகத்தவர்களின் கூட்டத்தில் இச்சை விடுதலும், பக்ஷபாதமில்லாமையும், மகிழ்ச்சியிலும், துக்கத்திலும், சித்தம் சமமாயிருத்தலும் என்னும் இக்குணங்களை உடைய மனிதரே ஆத்மாவை அனுபவமாயறிவார்கள்.

வெண்பா

விசித்திரமாய்த் தோன்றும் வினவு மதற்கேற்ப
வசத்தினிற்ருன் யோசித்தால் வாய்க்கு-மிசைத்தகுரு
வோர்மொழியி னம்பிக்கை யோடு தயிரியநீங்
கார்மனனத் தாலனுபோ கம். 22

(ப—ரை) (4) விசித்திரமாய்=ஆச்சரியமாய், தோன்றும்= விளங்கும், வினவும்=கேள்வியும், அதற்கு ஏற்ப=அதற்கு ஏற்ற சமாதானமும், (6) வசத்தினில்=வசமாக, (5) தான் யோசித்தால், (7) வாய்க்கும் = தோன்றும், (2) இசைத்த = உபதேசித்த, (1) குரு, (3) ஓர் மொழியில்=ஓர் வாக்கியத்தில், நம்பிக்கையோடு, தயிரியம்=உற்சாகம், நீங்கார்=விடாதவர்கள், மனனத்தால்= மனனம் செய்தால், அனுபோகம்=ஆத்மானுபவம்.

(பொ—ரை) குரு உபதேசித்த ஒரு வாக்கியத்தில் நம்பிக்கையோடு உற்சாகம் விடாதவர்கள், மனனம் செய்தால் ஆத்மானுபவம் ஆச்சரியமாய் விளங்கும். கேள்வியும் அதற்கேற்ற சமாதானமும் தான் யோசித்தால் வசமாகத் தோன்றும்.

தாலி விலைக்கேற்றுத் தான்பூணும் பேதையென
நூலின் முடிபறிந்து நுண்ணுணர்வான்—மேலைக்
கதிகாண்பே மென்பீர் கணக்காய்ந்து கூலி
நிதிசார்ந்தோ ருண்டோ நிலத்து. 23

(ப—ரை) (2) தாலி = மாங்கல்யத்தை, விலைக்கு, ஏற்று = வாங்கி, தான் பூணும் = தானே தரித்துக் கொள்ளும், பேதை என = பெண்ணைப் போல, நூலின் முடிபு = சாஸ்திரங்களின் முடிவை, அறிந்து, நுண் உணர்வால் = சூட்சுமமான புத்தியினால், மேலைக் கதி = மேலான மோக்ஷத்தை, காண்பேம் என்பீர் = அடைவோம், என்று நினைப்பவர்களே, கணக்கு ஆய்ந்து = கணக்குப் புத்தகத்தை மாத்திரம் பார்த்து, கூலி நிதி = சம்பளத்தை, சார்ந்தோர் = பெற்றவர்கள், உண்டோ, (1) நிலத்து = உலகத்தில்.

(பொ—ரை) உலகத்தில் மாங்கல்யத்தை விலைக்கு வாங்கி தானே தரித்துக்கொள்ளும் பெண்ணைப் போல சாஸ்திரங்களின் முடிவை அறிந்து சூட்சுமமான புத்தியினால் மேலான மோக்ஷத்தை அடைவோமென்று நினைப்பவர்களே கணக்குப் புத்தகத்தை மாத்திரம் பார்த்து சம்பளத்தைப் பெற்றவர்களுண்டோ. குருவையன்றி உண்மை விளங்காதென்பது கருத்து.

தன்னடிக்கீழ்ச் சேமநிதி தங்கிடினு மஞ்சனத்தான்
முன்னிடினல் லால்வறுமை முற்றுறுமோ—தன்னை
யிகலில் குருவையலா தெவ்விடத்து மென்றுந்
திகழினுந் தோன் றாதே சிவம். 24

(ப—ரை) (1) தன்னடிக் கீழ் = தன் காலின் அடியிலேயே, சேமநிதி = புதையற் பொருளானது, தங்கிடினும் = மறைபட்டிருந்தாலும், அஞ்சனத்தால் = அஞ்சன மையினால், முன்னிடின் அல்லால் = நேரே கண்டு எடுத்தாலல்லாமல், வறுமை = தரித்திரமானது, முற்றுறுமோ = நீங்குமோ, நீங்காது. அதுபோல,

(4) தன்னை = தனக்கு, இகல் இல் = எதிரில்லாத, குருவை = குருவருளினால், அலீது = அல்லாமல், (3) எவ்விடத்தும், என்றும் = எக்காலத்தும், திகழினும் = விளங்கிக் கொண்டிருந்தாலும், (5) தோன்றாது(ஏ) = விளங்காது, (2) சிவம் = சிவமானது. ஏ—அசை.

(பொ—ரை) தன் காலின் அடியிலேயே புதையற் பொருளானது மறைபட்டிருந்தாலும், அஞ்ஞன மையினால் நேரே கண்டு எடுத்தாலல்லாமல் தரித்திரமானது நீங்குமோ? நீங்காது. அதுபோலச் சிவமானது எவ்விடத்தும் எக்காலத்தும் விளங்கிக் கொண்டிருந்தாலும், தனக்கு எதிரில்லாத குருவருளினாலல்லாமல் விளங்காது.

பிரபஞ்ச முற்றும் பிராந்தியாய்ப் பொய்யா
யொருகிஞ் சினுமிலதா யுற்றுங்—குருவின் சொன்
மார்க்க நடவாத்துன் மார்க்கர்க்கு நார்ப்பணிபோற்
றீர்க்கமுடி யாத்துயராந் தேர். 25

(ப—ரை) பிரபஞ்சம், முற்றும் = எல்லாம், பிராந்தியாய் = விபரீதமாய், பொய்யாய், ஒருகிஞ்சினும் = மிக அற்பமும், இலதாய் = இல்லாததாக, உற்றும் = இருந்தும், குருவின் = குருவினது, சொல்மார்க்கம் = வாக்கியப்படி, நடவா = நடவாத, துன்மார்க்கர்க்கு = துன்பமார்க்கம் உடையவர்களுக்கு, நார்ப் பணிபோல் = கயிறு பாம்பாய்த் தோன்றுதலால் துன்பம் ஏற்படுவது போல, தீர்க்க முடியா, துயராம் = துன்பமே உண்டாகும், தேர் = என்பதை உணர்க.

(பொ—ரை) பிரபஞ்சமெல்லாம் விபரீதமாய்ப் பொய்யாய் மிக அற்பமும் இல்லாததாக இருந்தும், குருவினது வாக்கியப்படி நடவாத துன்மார்க்கம் உடையவர்களுக்கு, கயிறு பாம்பாய்த் தோன்றுதலால் துன்பம் ஏற்படுவது போலத், தீர்க்கமுடியாத் துன்பமே உண்டாகும் என்பதை உணர்க.

## கலித்துறை

இவ்வுலக மேதெவணி ருக்கின்ற
தெவணமா மிதுசெய்ததா
ரெவ்வுருவ வர்க்கெதுகொ டெவ்வாறு
செய்வரேன் யானுரென
வெவ்வியலொ ழித்தருட் குருவையனு
பவமாவி சாரித்துருக்
கவ்வைமொழி மட்டாய புத்தகப்
பேய்பூர கரவீனமே. 26

(ப—ரை) இவ்வுலகம் = இந்தப் பிரபஞ்சமானது, ஏது= எப்படி உண்டானது, எவண் = எவ்விடத்தில், இருக்கின்றது, எவணம் ஆம்=இனி எப்படியாகும், இது செய்தது யார் =இதைப் படைத்தவர் எவர், எவ்வுரு அவர்க்கு=அவருக்கு என்ன வடிவம், எது கொடு = எதைக்கொண்டு, எவ்வாறு செய்வர் =எவ்விதம் செய்தார், ஏன்=ஏன் செய்தார், யான் ஆர் = நான் யார், என= என்று, வெவ்வியல்=தீக்குணங்களை, ஒழித்து, அருள் =அருளை உடைய, குருவை, அனுபவமா =அனுபவமாக, விசாரித்து, உரு= அடையாத, கவ்வை = கபடமான, மொழிமட்டாய = வாக்கு மாத்திரமாகிய. புத்தகப் பேய் = புத்தகப் பேயானவன், பூர = கற்பூரஞ் சுமந்த, கர = கர்த்தபத்தைப் பார்க்கினும், ஈனமே= இழிவானவனே. (கரம்=கர்த்தபம்).

(பொ—ரை) இந்தப் பிரபஞ்சமானது எப்படி உண்டானது, எவ்விடத்திலிருக்கின்றது, இனி எப்படியாகும், இதைப் படைத்தவர் எவர், அவருக்கு என்ன வடிவம், எதைக்கொண்டு எவ்விதம் செய்தார், நான் யார் என்னுந் தீக்குணங்களை ஒழித்து அருளையுடைய குருவை அனுபவமாக விசாரித்து அடையாத கபடமான, வாக்கு மாத்திரமாகிய புத்தகப் பேயானவன் கற்பூரம் சுமந்த கர்த்தபத்தைப் பார்க்கினும் இழிவானவனே.

பொங்கொளிகொள் பேரணி புனைந்திடினு
நோயறுபு மானொருவனால்
மங்கலம ணிந்தவன்வ ழிப்படின
லாதுசுக மன்னிமகவை
நங்கைபெறு மோவொருவ னூல்வலவ
னாயினுநலங்கொள் குருவின்
செங்கைமொழி கொண்டவன ருட்பெறின
லாதிலைசி வானுபவமே 27

(ப—ரை) (2) பொங்கு ஒளி கொள்=மிகுந்த பிரகாசம் உடைய, பேர் அணி = உயர்ந்த பல ஆபரணங்களை, புனைந்திடினும் = தரித்திருந்தாலும், நோய் அறு = நோயற்ற, புமான் ஒருவனால்=ஒருபுருஷனால்,மங்கலம் அணிந்து=மாங்கல்ய தாரணம் செய்யப்பட்டு, அவன்=அக்கணவனது, வழிப்படின் அலாது = வசமாயிருந்தாலல்லாமல், சுகம்மன்னி = இன்பத்தை அடைந்து, மகவை=புத்திரனை, (1)நங்கை=ஓர் பெண்ணானவள், (3)பெறுமோ=பெறுவாளோ, பெறமாட்டாள். அதுபோல, ஒருவன், நூல்வலவன்=பல சாஸ்திரங்கள் தேர்ந்தவன், ஆயினும் நலம் கொள் = அனுபவமுடைய, குருவின், செங்கை = சின்முத்திரையென்னும் கைக் குறிப்பை உணர்த்துகின்ற, மொழி கொண்டு = வாக்கியத்தைக் கேட்டு, அவன், அருள் பெறின் அலால் = அருளைப் பெற்றாலன்றி, இலை சிவானுபவம் (ஏ)= சிவானுபவமடையான். (ஏ—அசை)

(பொ—ரை) ஓர் பெண்ணானவள், மிகுந்த பிரகாசமுடைய உயர்ந்த பல ஆபரணங்களைத் தரித்திருந்தாலும், நோயற்ற ஒரு புருஷனால் மாங்கல்யதாரணம் செய்யப்பட்டு அக் கணவனது வசமாயிருந்தாலல்லாமல், இன்பத்தை அடைந்து புத்திரனைப் பெறுவாளோ? பெறமாட்டாள். அதுபோல ஒருவன் பல சாஸ்திரங்கள் தேர்ந்தவனாயினும் அனுபவமுடைய குருவின் சின்முத்திரை என்னும் கைக்குறிப்பை உணர்த்துகின்ற வாக்கியத்தைக் கேட்டு அவனருளைப் பெற்றாலன்றிச் சிவானுபவம் அடையான்.

## வெண்பா

அமுதுண்டார் போல வபிநயஞ்செய் வார்க
டமைவஞ்சித் தேகொன்ருர் தாமே—கமையொன்று
மூரார் புகழப்பா லுண்பார்சேற் றைப்புனைவார்
நீரா டச்சென்ற நிலத்து. 28

(ப—ரை) (1) அமுதுண்டார் போல = அன்னம் புசித்தவர் போல், அபிநயம், செய்வார்கள் = செய்பவர், (3) தமை = தம்மை, வஞ்சித்து (ஏ), கொன்ருர் = கொன்றவராவார், (2) தாமே, (4) கமை ஒன்றும் = பொறுமையுற்ற, ஊரார், புகழ = மெச்சும்படி, பாலுண்பார் = பாலுண்பவர், (6) சேற்றை, புனைவார் = பூசிக்கொள்பவர் போல் ஆவார் (5) நீராடச் சென்ற, நிலத்து = இடத்தில். (ஏ—அசை)

(பொ—ரை) அன்னம் புசித்தவர் போல் அபிநயம் செய்பவர், தாமே தம்மை வஞ்சித்துக் கொன்றவர்; பொறுமையுற்ற ஊரார் மெச்சும்படி, பாலுண்பவர்; நீராடச் சென்ற இடத்தில் சேற்றைப் பூசிக்கொள்பவர் போலாவார்.

பெரியோர் போல அபிநயம் செய்பவர்கள் இகழ்ச்சியையும் துன்பத்தையும் அடைவார்கள் என்பதும், இடம்பத்திற்காகக் காரியம் செய்பவர்கள் காரியங்கெட்டுக் குற்றமுமடைவார்கள் என்பதும் இதன் கருத்து.

## கலி விருத்தம்

புரையோடிய புண்பரி காரியின் முன்
றெரிவாவெளி செய்தத னுண் மருவு
மரில்கீறிய கற்றிடி ஞறு மலால்
வரைமூடிவ னைந்துறின் மிக்கிழிவே. 29

(ப—ரை) புரையோடிய, புண் = புண்ணை, பரிகாரியின் முன் = வைத்தியன் முன்னே, தெரிவா = அறியும்படி,

வெளிசெய்து=வெளிப்படையாகக் காட்டி, அதன் உள் மருவும்= அப்புண்ணின் உள்ளே இருக்கின்ற, அரில் குற்றங்களை, கீறி அகற்றிடின்=கிழித்து நீக்கினால், ஆறும், அலால்=அல்லாமல், வரைமூடி=அதனியல்பை மறைத்து, வனைந்து உறின் = அலங்கரித்துக் கொண்டிருந்தால், மிக்கு இழிவே=மிகுந்த இழிவுகளே உண்டாகும்.

(பொ—ரை) புரையோடிய புண்ணை, வைத்தியன் முன்னே அறியும்படி வெளிப்படையாகக் காட்டி, அப்புண்ணின் உள்ளே இருக்கின்ற குற்றங்களைக் கிழித்து, நீக்கினால் ஆறுமல்லாமல் அதனியல்பை மறைத்து அலங்கரித்துக் கொண்டிருந்தால் மிகுந்த இழிவுகளே உண்டாகும்.

சீடனானவர் குருவினிடத்துத் தன் குறைகளை அறிவித்துக் கொண்டாலன்றி, தீமை நீங்கி நன்மையடையமாட்டார் என்பது கருத்து.

### கலித்துறை

எட்டுணையு மறையாமல் வஞ்சனையி
லாதுகுறை யாவுமிதமாய்ச்
சிட்டர்புகழ் சற்குருவின் முன்னுரைத்
துய்வகைதெ ரித்தருளெனக்
கிட்டுமடி யர்க்குநல மாகமுடி
வாநிலைகிளத்து பவெளிப்
பட்டருளும் வஞ்சர்க்கு வஞ்சனுணர்
நோயரொடு பண்டிதனையே. 30

(ப—ரை) எள் துணையும்=அற்பமும், மறையாமல், வஞ்சனை, இலாது=இன்றி, குறை யாவும் = தனது குறைகளை எல்லாம், இதமாய்=பணிவாக (1) சிட்டர் புகழ் = சாதுக்கள் புகழ்கின்ற, சற்குருவின், முன்=சந்நிதியில் (3) உரைத்து= தெரிவித்துக்கொண்டு, உய் வகை = யான் பிழைக்கும் மார்க் கத்தை, தெரிந்து அருள் என = உபதேசித்தருள்வாய் என்று,

கிட்டும் = சரணமடைகின்ற, அடியார்க்கு = சீடர்களுக்கு, நலமாக = நன்ருக, முடிவாம் நிலே=முடிவான பொருளே, கிளத்து=உணர்த்தி, வெளிப்பட்டு அருளும்=வெளிப்படையாக அனுக்கிரகம் செய்வார், வஞ்சர்க்கு=கபடமாகத் தன்னே அடுத்தவர்களுக்கு, வஞ்சன் = கபட்முடையவர் போலவே, தோன்றுவார், (5) உணர்=அறிந்து கொள்க, (4) நோயரோடு= இவ்விஷயத்தில் வியாதியஸ்தர்களோடு, பண்டிதனே யே = வைத்தியனையுமே உவமானமாக.

(பொ—ரை) சாதுக்கள் புகழ்கின்ற,சற்குருவின் சந்நிதியில் அற்பமும் மறையாமல், வஞ்சனையின்றித் தனது குறைகளே எல்லாம் பணிவாகத் தெரிவித்துக்கொண்டு, யான் பிழைக்கும் மார்க்கத்தை உபதேசித்து அருள்வாயென்று சரணமடைகின்ற சீடர்களுக்கு, நன்ருக முடிவான பொருளே உணர்த்தி வெளிப்படையாக அனுக்கிரகம் செய்வார்; கபடமாகத் தன்னே அடுத்தவர்களுக்கு, கபடமுடையவர் போலவே தோன்றுவார். இவ்விஷயத்தில் வியாதியஸ்தர்களோடு வைத்தியனையுமே உவமானமாக அறிந்து கொள்க.

வெண்பா

சீட னறிவு முயற்சிக்குந் தேசிகர்சொ
லீடில் பலனுக்கு மேதுவா—நாடறிஞர்
சிந்தா மணியென்று செப்பியநன் னம்பிக்கை
வந்தால் வராததிலே மற்று. 31

(ப—ரை) சீடன் அறிவு = சீடனது அறிவானது, முயற்சிக்கும்=முயற்சி செய்வதற்கும். தேசிகர் சொல்=குருவின் வாக்கியமானது, ஈடுஇல்=சமானமற்ற, பலனுக்கும், ஏதுவாம்= காரணமாம், நாடு = விரும்பப்படுகின்ற, அறிஞர் = அறிவு உடையோர், சிந்தாமணியென்று=சிந்தாமணிக்கு நிகராகிய தென்று, செப்பிய சொல்லுகின்ற, நல் நம்பிக்கை=நல்ல நம்பிக்கையானது, வந்தால் = ஒருவனுக்கு உண்டாகுமானுல், வராததிலே=கிடைக்காத நன்மை ஒன்றுமில்லே.

(மற்று—அசை)

(பொ—ரை) சீடனது அறிவானது, முயற்சி செய்வதற்கும் குருவினையுடைய வாக்கியமானது சமானமற்ற பலனுக்கும் காரணமாம். விரும்பப்படுகின்ற அறிவுடையோர் சிந்தாமணிக்கு நிகராகியதென்று சொல்லுகின்ற, நல்ல நம்பிக்கையானது ஒருவனுக்கு உண்டாகுமானால் கிடைக்காத நன்மை ஒன்றுமில்லை.

சிந்தாமணி என்பது—சிந்தித்தவை எல்லாம் கொடுக்கும் ஓர் இரத்தினம்.

### கலி விருத்தம்

பிரம தேஜசுபி றங்கிறைமு கப்பெரு கொளி
யிருக ணுடல்கன லின்னடுவி யற்று தவமப்
பருவ மக்குருப ரன்றனுவி ழிக்கடை படுந்
திருமு கத்தொரும கன்பெருமை செப்பரியதே. 32

(ப—ரை) பிரமதேஜசு, பிறங்கு=விளங்குகின்ற, இறை= குருவினது, முகப்பெருகு ஒளி=முகத்திற்பெருகிய பிரகாசத்தை, இரு கண்=சீடன் தனது இரு கண்களாலும், நாடல்=விரும்பி நோக்குதலானது, கனலின் நடு=அக்கினியின் மத்தியிலிருந்து, இயற்றுதவம்=செய்கின்ற தவத்திற்கு, நிகராகும், அப்பருவம்= அச்சமயத்தில், அக்குருபரன்=அக்குருநாதனது, தனி=ஒப்பற்ற, விழிக்கடை=கடைக்கண் பார்வையானது, படும்=பொருந்தப் பெற்ற, திருமுகத்து=சிறந்த முகத்தையுடைய, ஒருமகன்=ஓர் சீடனது, பெருமை=மேன்மையானது, செப்பரியது(ஏ) = சொல்லுதற்கரியதாம்.

(ஏ—அசை.)

(பொ—ரை) பிரமதேஜசு விளங்குகின்ற, குருவினது முகத்திற் பெருகிய பிரகாசத்தைச், சீடன் தனது இரண்டு கண்களாலும் விரும்பி நோக்குதலானது, அக்கினியின் மத்தியிலிருந்து செய்கின்ற தவத்திற்கு நிகராகும். அச்சமயத்தில் அந்தக்குருநாதனது ஒப்பற்ற கடைக்கண் பார்வையானது பொருந்தப்பெற்ற, சிறந்த முகத்தையுடைய ஓர்சீடனது மேன்மையானது சொல்லுதற்கரியதாம்.

### வெண்பா

தீநெறியை விட்ட திறத்தார் குருவருளாற்
றூநெறியைக் காண்பர் துயர்போகத்—தா நடப்பி
னின்பத்தி லின்புறுவா ரின்றியுரை மட்டாளுற்
றுன்பத்திற் றுன்புறுமந் தோ. 33

(ப—ரை) (1) தீ நெறியை=துன்ப மார்க்கத்தை, விட்ட= ஒழித்த, திறத்தார்=நல்ல குணசாலிகள், குருஅருளால்= குருவினது கிருபையால், தூநெறியை=பரிசுத்தமான ஞான நெறியை, காண்பர்=அறிவார்கள், துயர்போக=கவலைகளை விட்டு, தாம் நடப்பின்=தாங்கள் அந்நெறியிற் சென்றால், இன்பத்தில் இன்பு உறுவார்=இன்பத்தில் மேல் இன்பத்தை பெறுவார், இன்றி=அவ்வாறின்றி, உரைமட்டாளுல் = சொன் மாத்திரமாய் நடித்தால், (3) துன்பத்தில் துன்பு உறும்= துன்பத்தின் மேல் துன்பத்தை யடைவார், (2) அந்தோ.

(பொ—ரை) துன்மார்க்கத்தை ஒழித்த நல்ல குணசாலிகள், குருவினது கிருபையினால் பரிசுத்தமான ஞான நெறியை அறிவார்கள். கவலைகளை விட்டு தாங்கள் அந்நெறியிற் சென்றால், இன்பத்தில் மேல் இன்பத்தைப் பெறுவார். அவ்வாறின்றிச் சொன் மாத்திரமாய் நடித்தால் அந்தோ துன்பத்தின் மேல் துன்பத்தை யடைவார்.

சின்மாத் திரமாஞ் சிவானந்த மேவாத
சொன்மாத் திரமாந் துரிசகலாத்—துன்மார்க்கர்
தாறுமா ருய்நடப்பர் தாம்வீழ் துயர்க்கடல்விட்
டேறுமா றுண்டோ வினி. 34

(ப—ரை) (1) சின் மாத்திரமாம் = ஞானமாத்திரமாகிய, சிவானந்தம் மேவாத=சிவானந்தத்தை அடையாத, சொல்

மாத்திரம், ஆம்=ஆன, துரிசு அகலா=குற்றம் நீங்கா, துன்மார்க்கர் = துன்மார்க்கத்தையுடையோர், தாறுமாருய், நடப்பர்=நடப்பார், தாம் வீழ்=அவர் தாங்கள் வீழ்கின்ற, துயர் கடல்=துக்க சமுத்திரத்தை, விட்டு, (இ)ஏறும் ஆறு=கரை ஏறும் வகையும், உண்டோ=உண்டோ. இல்லை. (இ) இனி=பின்பு.

(பொ—ரை) ஞானமாத்திரமாகிய சிவானந்தத்தை யடையாத, சொல் மாத்திரமான குற்றம் நீங்காத் துன்மார்க்கத்தை உடையோர், தாறுமாருய் நடப்பார். அவர் தாங்கள் வீழ்கின்ற, துக்க சமுத்திரத்தை விட்டுப் பின்பு கரையேறும் வகையும் உண்டோ? இல்லை.

கிராதன் மகனன்று கேள்வியான் மெய்யா
லிராச குமாரனு னென்றே—நிராகுலமாய்த்
தன்னெறிச்செல் விக்குந் தயிரியமு நிச்சயமும்
புன்னெறிச்செல் வாற்கேன் புகல் 35

(ப—ரை) கிராதன்=நான் வேடனது, மகனன்று = புத்திரனல்ல, கேள்வியால்=கேள்வியினுலும், மெய்யால்= உண்மையான இருப்பினுலும், ராச, குமரன் நான்=புத்திரனே நான், என்று (ஏ), நிராகுலமாய்=கவலையற, தன்நெறி=தனது மார்க்கத்தை, செல்விக்கும்=அடையச்செய்யும், தயிரியமும், நிச்சயமும், புன் நெறி செல்வாற்கு=இழிந்த வேடனது போக்கில் சென்றவனுக்கு, ஏன்=எப்படி உண்டாகும், புகல்=நீ சொல்.

(ஏ—அசை)

(பொ—ரை) நான் வேடனது புத்திரனல்ல, கேள்வியினுலும் உண்மையான இருப்பினுலும், இராச புத்திரனே நானென்று கவலையற தனது மார்க்கத்தையடையச் செய்யும் தைரியமும் நிச்சயமும், இழிந்த வேடனது போக்கில் சென்றவவனுக்கு எப்படி உண்டாகும். நீ சொல்.

சுருதி குரு சுபானுபவத்தால் தான் சச்சிதானந்த சிவமேயென உண்டாகும் தைரியமும், நிச்சயமும் ஐம்புலன் வழிகளிற் செல்பவர்க்கு உண்டாகாது என்பது கருத்து.

குக்குடமன் னம்போற் குறிக்கொள் பவர்க்கலது
தக்ககிளி பல்லி தனையொப்பார்க்—கிக்ககனந்
தீயிலங்கல் போலத் திகழுஞ் சிவபோக
மேயிடுங்கொல் பாரின் மிசை 36

(ப—ரை) குக்குடம் அன்னம் போல்=கோழி போலவும் அன்னப்பட்சி போலவும், குறிக்கொள்பவர்க்கலது = ஆராய்ந்து சாரத்தைக் கிரகிப்பவர்க்கல்லாமல், தக்க கிளி பல்லிதனை ஒப்பார்க்கு=நல்ல கிளியைப் போலவும், பல்லியைப் போலவும் கற்றதைச் சொல்வதும் தான் அறியாமல் பிறர்க்கு அறிவித்தலும் ஆகிய இயற்கையுடையவர்களுக்கு இக்ககனம் தீ இலங்கல் போல=வியாபகமாய்ச் சர்வத்திற்கும் ஆதாரமாகி ஒன்றிலும் சம்பந்தப்படாததாயிருக்கின்ற இவ் ஆகாயத்தைப் போலவும், தன்னை அடுத்த வஸ்துக்கள்போல் ஆகியும் ஆகாமலும் இருக்கின்ற அக்கினியைப் போலவும், திகழும்=விளங்குகின்ற, சிவபோகம்= சிவானுபவம், மேயிடுங்கொல்=உண்டாகுமா, உண்டாகாது, (1) பாரின் மிசை=இவ்வுலகத்தில்.

(பொ—ரை) இவ்வுலகத்தில், கோழி போலவும், அன்னப் பட்சி போலவும், ஆராய்ந்துசாரத்தைக் கிரகிப்பவர்க்கல்லாமல், நல்ல கிளியைப் போலவும், பல்லியைப் போலவும் கற்றதைச் சொல்வதும், தான் அறியாமல் பிறர்க்கு அறிவித்தலுமாகிய இயற்கையுடையவர்க்கு,வியாபகமாய்ச்சர்வத்திற்கும் ஆதாரமாகி ஒன்றிலும் சம்பந்தப்படாததாயிருக்கின்ற இவ் ஆகாயத்தைப் போலவும், தன்னை அடுத்த வஸ்துக்கள் போலாகியும், ஆகாமலும் இருக்கின்ற அக்கினியைப் போலவும் விளங்குகின்ற சிவானுபவம் உண்டாகுமோ. உண்டாகாது.

## அறுசீர் விருத்தம்

விலட்சண வுணர்வால் யாவும்
வேறுகண் டமைந்து சான்றாய்ச்
சலட்சண நிறைவால் வேறுஞ்
சருவமுந் தானாய் நோக்கல்
சுலட்சண வனுப வத்தின்
றுரியமா மன்றி நூலி
னிலட்சண மதியாற் கூறு
மியலவ லட்ச ணற்கே. 37

(ப—ரை) விலட்சண உணர்வால் = தனது விசேஷ இயற்கை அனுபவத்தால், யாவும் வேறு கண்டு = சர்வத்தையும் வேருகப் பார்த்து, அமைந்து, சான்ருய் = தான் மாத்திரமாய்ச் சாட்சியாகியும், சலட்சண நிறைவால் = எவ் இயற்கையினுங் கூடி நிறைந்திருத்தலால், வேறும் சருவமும் = வேருகிய சர்வத்தையும், தானாய் நோக்கல் = தானுகப் பார்த்தலானது, சுலட்சண அனுபவத்தின் = தன் சுபாவ அனுபவமாகிய, துரியம் ஆம் = துரிய நிலையாம், அன்றி = இவ்வாறல்லாமல், நூலின் = சாஸ்திரங்களின், இலட்சண மதியால் = இலட்சணத்தை அறிவதால் மட்டும், கூறும் இயல் = பேசும் தன்மையானது, அவலட்சணற்கே = ஒழுக்கமில்லாதவனுக்கே பொருந்தும்.

(பொ—ரை) தனது விசேக்ஷ இயற்கை அனுபவத்தால் சர்வத்தையும் வேருகப் பார்த்துத், தான் மாத்திரமாய்ச் சாட்சியாகியும் எவ் இயற்கையினுங் கூடி நிறைந்திருத்தலால் வேருகிய சர்வத்தையும் தானுகப் பார்த்தலானது, தன் சுபாவ அனுபவமாகிய துரிய நிலையாம். இவ்வாறல்லாமல் சாஸ்திரங்களின் இலக்ஷணத்தை அறிவதால் மட்டும் பேசுந் தன்மையானது, ஒழுக்கமில்லாதவனுக்கே பொருந்தும்.

### வெண்பா

தானன்ருய்த் தன்னைவிட வேறன்ருய்ச் சர்வமுமே
யானன்ருய்த் தேறி னனுபவத்தான்—மோனன்ரு
ஞவனே நூலறிவா லாங்கா யிடிற்சிவனே
சீவனே யந்தோ சிரிப்பு. 38

(ப—ரை) (2) தான் அன்ருய்=தான் அல்லாததாயும், தன்னை விட=தன்னைத் தவிர, வேறு அன்ருய்=வேறல்லாததாகியும், (1)சர்வமும்(ஏ)=சகலமும், யான்=நான், (5)நன்ருய்த் தேறின் = நன்ருக அறிந்து தேர்ந்து கொண்டால். (4) அனுபவத்தால், (6) மோனன் (தான்)=மௌன நிலையை அடைந்தவன், ஆவன்(ஏ)=ஆவேன், நூல் அறிவால்=சாஸ்திர ஆராய்ச்சியினுல் மட்டும், ஆங்கு ஆயிடில்=முன்னே சொன்னபடியானுல், சிவனே=சிவ சொரூபமாவேனே, ஆகேன், சீவனே=சீவனேயாவேன், அந்தோ, சிரிப்பு=இது சிரிப்புக்கு இடமேயாம்.

(பொ—ரை) சகலமும் தான் அல்லாததாயும், தன்னைத் தவிர வேறல்லாததாகியும், நான் அனுபவத்தால் நன்ருக அறிந்து தேர்ந்து கொண்டால், மௌன நிலையை அடைந்தவனுவேன். சாஸ்திர ஆராய்ச்சியினுல் மட்டும் முன் சொன்னபடியானுல் சிவசொரூபமாவேனே? ஆகேன். சீவனேயாவேன். அந்தோ இது சிரிப்புக்கிடமேயாம்.

### எண் சீர் விருத்தம்

நிரதிசயா னந்தசா தனம தாக
நிகழ்சவண மன்னுதி யுடையோர்க் கெங்குந்
துரியசுக வடிவாயச் சாத னத்தைச்
சோம்பலினுல் விட்டகொடுந் தொழிலோர்க் கோத
லரியதுயர்க் கடலாயும் விளங்கு மான்மா
வதனுலோர் சிறிதுமிலை பட்ச பாத
மொருதறியே தறியென்ரோர்க் கபய மாயீ
துணராதோர்க் குறுபயமா யுதித்த வாறே. 39

(ப—ரை) (3) நிரதிசய ஆனந்த=நிரதிசய சுகமென்னும் முத்திக்கு, சாதனம் அது ஆக=சாதனமாக, நிகழ்=இருக்கின்ற, சவணம்=சிரவணம், மனன ஆதி=மனனம் நிதித்யாசனம் சமாதி சாட்சாத்காரம், உடையோர்க்கு, எங்கும்=எவ்விடத்தும், துரிய சுக வடிவாய் = துரியானந்த சொரூபமாகவும், அச் சாதனத்தை=அந்த சாதனங்களை, சோம்பலினுல், விட்ட= செய்யாதுவிட்ட, கொடுந்தொழிலோர்க்கு =தீய கர்மிகளுக்கு, ஓதலரிய = சொல்லுதற்கு முடியாத, துயர்க்கடலாயும்= துக்க சமுத்திரமாயும்,விளங்கும், (2)ஆன்மா=பரமாத்மாவானது, (4) அதனுல், (6) ஓர் சிறிதுமில்லை = அற்பமும் இல்லை, (5) பட்சபாத=பட்சபாதம் என்பது, (1) ஒரு தறியே=இரவில் ஒரு கட்டையே, தறியென்றோர்க்கு = கட்டை யென்றறிந்தவர்களுக்கு அபயமாய்=பயத்தைக் கொடாததாயும், ஈது உணராதோர்க்கு=இது கட்டையென்று அறியாதவர்க்கு, உறு பயமாய்=மிகுந்த பயத்திற்குக் காரணமாயும், உதித்தவாறு (ஏ)=தோன்றுவது போல, (ஏ—அசை).

நிரதிசயம்=அதிசயம் அற்றது; அல்லது சுபாவம்.

(பொ—ரை) இரவில் ஒரு கட்டையே கட்டை என்று அறிந்தவர்களுக்குப் பயத்தைக் கொடாததாயும், இது கட்டை என்று அறியாதவர்க்கு மிகுந்த பயத்திற்குக் காரணமாயும் தோன்றுவது போல, பரமாத்மாவானது நிரதிசய சுகமென்னும் முத்திக்குச் சாதனமாகச் சிரவணம், மனனம், நிதித்யாசனம், சமாதி சாட்சாத்கார முடையோர்க்கு எவ்விடத்தும் துரியானந்த சொரூபமாகவும், அந்தச் சாதனங்களைச் சோம்பலினுற் செய்யாது விட்ட தீய கர்மிகளுக்குச் சொல்லுதற்கு முடியாத துக்க சமுத்திரமாயும் விளங்கும் அதனுல் பக்ஷபாதம் என்பது அற்பமும் இல்லை.

வித்யாதி காரமுடை மானுட தேக
மேவினவர் வத்துவையே விசாரித் தந்த
நித்யான்மா வைத்தானே மனனஞ் செய்து
நிதித்யாசிக் கக்கடவ ரிரண்டாம் வத்து
மித்யாகா ரமதாயும் வேறென் றில்லை
விரிந்திருக்கப் பார்க்கிலிடர்க் கடலில் வீழ்வ
ரித்யாதி சிவாக்கினையைக் கடந்தாற் சிட்சை
யெய்திடுவர் நடப்பினிரட் சையையுற் றுரே. 40

(ப—ரை) வித்யாதிகாரம் உடை = ஞானத்திற்கு அதிகாரமுடைய, மானுட தேகம் மேவினவர் = மனித சரீரத்தைப் பெற்றவர்கள், வத்துவையே = ஆத்ம வஸ்துவையே, விசாரித்து, அந்த, நித்யான்மாவைத் தானே = தானாகிய நித்யான்மாவையே, மனனஞ் செய்து, நிதித்யாசிக்கக்கடவர், இரண்டாம் வத்து = ஆத்மாவைத் தவிர இரண்டாவது வஸ்துவென்பது, மித்யாகாரம் அது ஆயும் = பொய் வடிவமாகியும், வேறு ஒன்று இல்லை = வேறாக இருப்பதில்லை, விரிந்து இருக்கப் பார்க்கில் = வேறாக இருக்கிறதென்று பார்ப்பாராகில், இடர்க் கடலில் = துக்க சமுத்திரத்தில், வீழ்வர் = விழுவார்கள், இத்யாதி = இப்படிப்பட்ட, சிவாக்கினையைக் கடந்தால், சிட்சை எய்திடுவர் = சிக்ஷிக்கப் படுவார்கள், நடப்பின் = அவ்வாக்கினைப்படி நடந்தால், இரட்சையை உற்றார் (ஏ) = இரட்சிக்கப்படுவார்கள்.

(ஏ—அசை.)

(பொ—ரை) ஞானத்திற்கு அதிகாரமுடைய, மனித சரீரத்தைப் பெற்றவர்கள், ஆத்ம வஸ்துவையே விசாரித்து அந்தத் தானாகிய நித்யான்மாவையே மனனஞ் செய்து நிதித்து ஆசிக்கக்கடவர். ஆத்மாவைத் தவிர இரண்டாவது வஸ்து என்பது பொய் வடிவமாகியும் வேறாக இருப்பதில்லை. வேறாக இருக்கின்றதென்று பார்ப்பாராகில் துக்க சமுத்திரத்தில் விழுவார்கள். இப்படிப்பட்ட சிவாக்கினையைக் கடந்தால் சிக்ஷிக்கப்படுவார்கள். அவ்வாக்கினைப்படி நடந்தால் இரட்சிக்கப்படுவார்கள்.

## வெண்பா

கற்புடைமின் கொண்கன் கருணையாற் சேயுயிர்த்த
பிற்பொழுது மன்னோன் பிரியத்தே—வற்பிழையா
ளாரியனாற் சீட னனுபவமுற் றுஞ்சலியா
னேருமவற் குப்பணிபின் னும். 41

(ப—ரை) கற்புடைமின் = கற்புடைப் பெண் ஆனவள், கொண்கன் = தன்கணவனது, கருணையால் = அன்பினால், சேய்

உயிர்த்த=புத்திரனைப் பெற்ற, பிற்பொழுதும்=பின் காலத்திலும் அன்னோன்=அந்தக் கணவனுடைய, பிரியத்து ஏவல்=நேசமான பணிவிடைகளை, பிழையாள்=விடமாட்டாள், அது போல, ஆரியனால்=குருவினால், சீடன்=சீடனானவன், அனுபவமுற்றும்=ஆத்மானுபவத்தை அடைந்தும், (3) சலியான்=சலிப்படைய மாட்டான், (2)ஒரும்அவர்க்கு=எல்லாமறிந்த அக்குருநாதனுக்கு, பணி=பணிவிடை செய்வதில், பின்னும்=பின் காலத்திலும்.

(பொ—ரை) கற்புடைய பெண்ணானவள் தன் கணவனது அன்பினால் புத்திரனைப் பெற்ற பின்காலத்திலும், அந்தக் கணவனுடைய நேசமான பணிவிடைகளை விடமாட்டாள். அது போலக் குருவினாற் சீடனானவன் ஆத்மானுபவத்தை அடைந்தும், எல்லாம் அறிந்த அக்குருநாதனுக்குப் பணிவிடை செய்வதில் பின்காலத்தும் சலிப்படைய மாட்டான்.

## கலித்துறை

அன்றிலை யனலைப் பெடையொடு
கூடும கன்றாலு
மன்றிலே வண்ணத் திருவிளை
யாடல்வ ழக்கல்லா
லொன்றிலை யணுவுமொ ருங்குஞ்
சிவமென் றுணர்விஞ்சை
யென்றிலை யன்றிலை நன்றிலை
யொன்றிலை யெனையென்றான். 42

(ப—ரை) அன்றிலை=ஆண் அன்றிலையும், அனலை=அக்கினியையும், பெடையொடு=முறையே பெண் அன்றிலும், கூடும், அகன்றாலும்=நீங்கினாலும், மன்றில்=ஞான சபையில் நடிக்கின்ற, ஐவண்ண=சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் ஐந்து விதமான, திருவிளையாடல்=திருவிளையாடலின், வழக்கு அல்லால் = கிரமத்தை விட்டு, ஒன்றிலை அணுவும்=அற்பமும் ஒன்றுமிராது, ஒருங்கும்=அதாவது

எல்லாம், சிவம்=சிவமே, என்று, உணர்விஞ்சை=அறிகின்ற ஞானம், என்று இலை=உனக்கு எக்காலத்தில் இல்லையோ, அன்று=அக்காலத்தில், (3) இலை=இல்லை, (2) நன்று இல் ஐ= நல்ல வீடாகிய அழகானது, ஒன்றிலையெனை=ஏனெனில் ஞான திருஷ்டியைக் கொடுக்கின்ற என்னை நீ சரணமாயடைந்தாயில்லை, என்றான்=என்று குரு சொன்னர். வீடு=மோக்ஷம்.

(பொ—ரை) ஆண் அன்றிலையும் அக்கினியையும் முறையே பெண் அன்றிலும் சூடும் நீங்கினலும் ஞான சபையில் நடக்கின்ற சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் ஐந்து விதமான திருவிளையாடலின் கிரமத்தை விட்டு அற்பமும் ஒன்றுமிராது. அதாவது எல்லாம் சிவமே என்று அறிகின்ற ஞானம் உனக்கு எக்காலத்தில் இல்லையோ அக்காலத்தில் நல்ல வீடாகிய அழகானது இல்லை, ஏனெனில் ஞான திருஷ்டியைக் கொடுக்கின்ற என்னை நீ சரணமாய் அடைந்தாய் இல்லை என்று குரு சொன்னர்.

அகிலமு மைம்பூ தம்முரு நாமம் மவைதானும்
பகிர்வது நினைவா மதுவும வித்தைப் பரிணும
முகுமது வும்பொய் சடமிவ் வாறுண ரொருதான்மெய்ச்
சுகமயம் வேறிலை யிந்திர சாலத் தொடர்புண்டோ. 43

(ப—ரை) (1) அகிலமும்=பிரபஞ்சமெல்லாம், ஐம்பூதம்= பஞ்ச பூதமயமே, (3) உருநாமம் = நாமரூபமே, (2) அவை தானும்=அப்பஞ்ச பூதங்களும், (4)பகிர்வு அது=பிரிக்கப்படுகின்ற அந்தநாமரூபம், நினைவாம் = நினைவு மாத்திரமாகும், அதுவும்=அந்நினைவும், அவித்தைப் பரிணமம்=அஞ்ஞானத்தின் காரியமாம், உகும் அதுவும்=கெடுக்கின்ற அவ்வஞ்ஞானமும், பொய் சடம்=பொய்யும் ஜடமுமாம், இவ்வாறு உணர்=இவ்வாறு அறிகின்ற, ஒருதான்=ஒப்பற்ற ஆத்மாவாகிய தானே, மெய்ச் சுகமயம்=உண்மையான சுகவடிவம், (6) வேறு இலை=அன்னிய மெல்லாம் ஒன்றுமிலை, (5) இந்திரசால, தொடர்புண்டோ= தோற்றம் மெய்யாயிருக்கின்றதா. இல்லை. அதுபோல்.

(பொ—ரை) பிரபஞ்சமெல்லாம் பஞ்சபூதமயமே. அப்பஞ்சபூதங்களும் நாமரூபமே. பிரிக்கப்படுகின்ற அந்நாமரூபமும் நினைவு மாத்திரமாகும். அந்நினைவும் அஞ்ஞானத்தின் காரியமாம். கெடுகின்ற அவ்வஞ்ஞானமும் பொய்யும் ஜடமுமாம். இவ்வாறு அறிகின்ற ஒப்பற்ற ஆத்மாவாகிய தானே உண்மையான சுகவடிவம். இந்திரஜாலத் தோற்றம் மெய்யாய் இருக்கின்றதா? இல்லை. அதுபோல அன்னியமெல்லாம் ஒன்றுமில்லை.

அன்பொடு வன்புந லந்தீ துறவிக லங்கிங்கு
மின்பிடர் திருநல் குரவுப யந்தை ரியமெய்பொய்
பின்பல சில்கீழ் மேலுள விலவிப் பிரிவெல்லாந்
தன்படர் நினைவா யொழியும றப்பிற் றானன்றே. 44

(ப—ரை) அன்பொடுவன்பு = அன்பும் கொடுமையும், நலம் தீது = நன்மையும் தீமையும், உறவு இகல் = சிநேகமும் பகையும், அங்கும் இங்கும் = அவ்விடமும் இவ்விடமும், இன்பு இடர் = இன்பமும் துன்பமும், திரு நல்குரவு = செல்வமும் தரித்திரமும், பயம் தைரியம் = பயமும் தைரியமும், மெய் பொய் = மெய்யும் பொய்யும், பின் = பின்பு, பலசில = பலவும் சிலவும், கீழ் மேல் = கீழும் மேலும், உள இல = உள்ளதும் இல்லாததும் என்று சொல்லப்படும், இப்பிரிவு எல்லாம் = இந்த வித்தியாசங்கள் எல்லாம், தன்படர் நினைவாய் = தனது விரிந்த நினைவாகி, ஒழியும் மறப்பில் = தன் மறதியில் இல்லாததாய் விடும்; தான் அன்று (ஏ) அந்நினைவும், மறதியும் அல்லாததாக இருக்கிறது தனது சொரூபம், (ஏ—அசை).

(பொ—ரை) அன்பும் கொடுமையும், நன்மையும் தீமையும், சிநேகமும் பகையும், அவ்விடமும் இவ்விடமும் இன்பமும் துன்பமும், செல்வமும் தரித்திரமும், பயமும் தைரியமும், மெய்யும் பொய்யும், பின்பு பலவும் சிலவும், கீழும் மேலும் உள்ளதும் இல்லாததும் என்று சொல்லப்படும் இந்த வித்தியாசங்களெல்லாம் தனது விரிந்த நினைவாகித் தன் மறதியில் இல்லாததாய் விடும். அந்நினைவும், மறதியும் அல்லாததாக இருக்கிறது தனது சொரூபம்.

## அறுசீர் விருத்தம்

கன்ம பலமே யாகக் கண்ட நாம ரூப
நன்மை தீமை மகிழ்ச்சி நடுக்க மிட்ட மனிட்டத்
தன்மை யாவு நினைவு தான்மட் டாகு மதுந்தன்
முன்வி ளங்கு மதனுன் மூல சிவமே யனைத்தும். 45

(ப—ரை) (1) கன்ம பலமே ஆக = கர்மங்களுக்குப் பலனுகவே, கண்ட=தோற்றுகின்ற, நாமரூபம், நன்மை தீமை, மகிழ்ச்சி நடுக்கம், இட்டம் அனிட்டத்தன்மை=விருப்பு வெறுப்பு என்னும் தன்மைகள், யாவும், நினைவு மட்டு ஆகும் = நினைவு மாத்திரமே ஆகும், அதும்=அந்நினைவும், தன்முன் விளங்கும் = தனதிடத்தில் தோன்றுகின்றது; அதனுல், (3) மூலசிவமே= காரணமாகிய சிவ சொரூபமானதேயாம்; (2) அனைத்தும் = அவ்வெல்லாம். (தான்—அசை)

(பொ—ரை) கர்மங்களுக்குப் பலனுகவே தோற்றுகின்ற நாமரூபம், நன்மை தீமை, மகிழ்ச்சி நடுக்கம், விருப்பு வெறுப்பு என்னும் தன்மைகள் யாவும் நினைவு மாத்திரமே ஆகும். அந்நினைவும் தன்னிடத்தில் தோன்றுகின்றது. அதனுல் அவ்வெல்லாம் காரணமாகிய சிவசொரூபமானதேயாம்.

## எழுசீர் விருத்தம்

எத்த லத்து மேன்மை யேயி சைத்தல்
சென்ற செய்கையை
வர்த்த மான மும்வி ழாவின்
வைத்தல் பூத பௌதிகத்
தொத்த யாவு மீச னுவு
கத்த றேச காலம்வத்
தத்த ஞர்சொ ரூப மாய
மைந்த வாறு ணர்த்துமே. 46

(ப—ரை) எத்தலத்தும்=எந்த தெய்வ ஸ்தலங்களையும் மேன்மையேஇசைத்தல்=மேன்மையாகவே சொல்லுதலும்,சென்ற செய்கையை=முன்காலத்தில் நடந்த தெய்வீக சரித்திரங்களை, வர்த்தமானமும் = நிகழ்காலத்திலும், விழாவின் வைத்தல் = திருவிழாக்களாக நடத்துதலும், பூதபௌதிகத்து=பஞ்சபூதங்களிலும் பஞ்சபூத காரியங்களிலும், ஒத்தயாவும்=பொருந்திய பல வஸ்துக்களையும், ஈசனாக உகத்தல்=ஈசுவரனேஎன்று பூசித்தலும் முறையே, தேச காலம் வத்து=தேசகாலமும் வஸ்துக்களும், அத்தனார் சொரூபமாய்=பரமசிவசொரூபமாக, அமைந்தவாறு= விளங்குகின்ற தன்மையை, உணர்த்தும்(ஏ)=தெரிவிக்கும்.

(ஏ—அசை)

(பொ—ரை) எந்தத் தெய்வ ஸ்தலங்களையும், மேன்மையாகவே சொல்லுதலும், முன்காலங்களில் நடந்த தெய்வீக சரித்திரங்களை நிகழ்காலத்திலும் திருவிழாக்களாக நடத்துதலும், பஞ்சபூதங்களிலும் பஞ்சபூத காரியங்களிலும் பொருந்திய வஸ்துக்களையும் ஈசுவரனே என்று பூசித்தலும் முறையே தேசமும் காலமும் வஸ்துக்களும் பரமசிவ சொரூபமாக விளங்குகின்ற தன்மையைத் தெரிவிக்கும்.

## வெண்பா

காரணத்துட் காரியமுக் காலுமபே தம்பொன்போற்
சோரும் விசிட்டாத் துவிதமிலை—காரணமுங்
காரியமு முண்டோ கடவுளுரு வாயனைத்துந்
தீருவதா லத்துவிதந் தேர். 47

(ப—ரை) காரணத்துள் காரியம் = காரணத்தினிடத்தில் காரியமானது, முக்காலும்=காரியமாவதற்கு முன்னும், காரியம் ஆகிய போதும், காரியம் ஒடுங்கிய பின்னும்; அபேதம்= காரணத்தைத் தவிர இல்லாததால் அபேதமேயாகும், (1) பொன் போல்=பொன்னிடத்தில் ஆபரணங்களைப் போல; சோரும்= அதனால் பலமில்லாத, விசிட்டாத்துவிதம் இலை=விசிட்டாத்வைதம் என்கிற மதமானது நலமாகாது, காரணமும் காரியமும்

உண்டோ=காரணகாரியங்கள் என்னும் வேறுபாடு கிடையாது, கடவுள் உருவாய்=சிவசொரூபமாகவே, அனைத்தும் தீருவதால்= எல்லாம் நிச்சயமாய் விளங்குவதால், அத்துவிதம் தேர்= அத்வைதமே உண்மையென்றறி.

(பொ—ரை) பொன்னிடத்தில் ஆபரணங்களைப் போலக், காரணத்தினிடத்தில் காரியமானது காரியமாதற்கு முன்னும், காரியம் ஆகிய போதும், காரியம் ஒடுங்கிய பின்னும் காரணத்தைத் தவிர இல்லாததால் அபேதமேயாம்; அதனால் பலமில்லாத விசிட்டாத்வைதமென்கிற மதமானது நலமாகாது. காரண காரியங்களென்னும் வேறுபாடு கிடையாது சிவ சொரூபமாகவே எல்லாம்நிச்சயமாய் விளங்குவதால்அத்வைதமே உண்மை என்று அறி.

எவ்வெவ்வா றெவ்வெவ் விடத்தெழுமோ வவ்வவண
மவ்வொளிர்வாற் காரியமா காதுசக—மிவ்வகைதான்
காரணமா காவேது காரியமற் றுற்றுவிதப்
பேரணுவு முண்டோ பினை. 48

(ப—ரை) (1) எவ்வெவ்வாறு=எந்த எந்த விதமாக, எவ்வெவ்விடத்தில், எழுமோ=தோன்றுமோ, அவ்வவணம்= அந்த அந்த விதமாக, அவ்வொளிர்வால்= அப்பிரமப் பிரகாசமே விளங்குவதால், (3) காரியமாகாது, (2) சகம்=பிரபஞ்சமானது, (4)இவ்வகை=இவ்விதமாக, தான் காரணமாகா=தான் காரணம் அல்ல, ஏது காரியம் அற்றால்=காரண காரியங்கள் இல்லாததால், (6) துவிதப்பேர்=துவிதமென்னும் பேரானது, அணுவும் உண்டோ=அற்பமும் இருக்கிறதா, இல்லை. (5) பினை=பின்பு.

(பொ—ரை) எந்தெந்த விதமாக எவ்வெவ்விடத்தில் தோன்றுமோ அந்தந்த விதமாக அப்பிரமப் பிரகாசமே விளங்குவதால் பிரபஞ்சமானது காரியமாகாது. இவ் விதமாகத்தான் காரணமல்ல; காரணகாரியங்களில்லாததால், பின்பு துவிதமென்னும் பேரானது அற்பமும் இருக்கிறதா? இல்லை.

அசத்துச் சடந்துக்க மச்ச மழுகை
நிசித்த மயக்கநோய் நிந்தை—யசுத்தமிகு
பௌவ நிரயம் பவமாய்வு மெவ்விடத்து
மெவ்வா றுளதா மியம்பு. 49

(ப—ரை) அசத்து சடம் துக்கம், அச்சம்=பயம், அழுகை, நிசித்த=இருள் போன்ற, மயக்கம், நோய், நிந்தை=இகழ்ச்சி, அசுத்தம், மிகுபௌவம்=மிகுந்த சமுத்திரத்தை ஒத்த, நிரயம்= நரகம், பவம்=பிறப்பு, மாய்வும்=இறப்பு என்னும் இவை போன்ற பலவும், எவ்விடத்து=எந்தவிடத்தில், எவ்வாறு= எந்த விதம், உளதாம்=தோன்றும், இயம்பு=நீ சொல்.

(பொ—ரை) அசத்து, சடம், துக்கம், பயம், அழுகை, இருள் போன்ற மயக்கம், நோய், இகழ்ச்சி, அசுத்தம் மிகுந்த சமுத்திரத்தை ஒத்த நரகம், பிறப்பு இறப்பு என்னும் இவை போன்ற பலவும் எந்தவிடத்தில் எவ்விதம் தோன்றும், நீ சொல்.

அருள்வாரி யெம்மா னமர்பரமா னந்த
வுருவாய்மா சத்தனு யுற்று—மொருவர்
பிறப்புமயக் கச்சம் பிணியவித்தை மாயை
யிறப்புறுவா ரோபொய் யிவை. 50

(ப—ரை) அருள்வாரி=கிருபைக் கடலாகிய, எம்மான்= நமது சிவபெருமான், அமர்=யாவருக்கும் மிகு பிரீதிக்கிடமான, பரமானந்த, உருவாய்=சொருபமாய், மாசத்தனுய் = மேலான சக்தியையுடையவனுய், உற்றும்=விளங்கிக் கொண்டிருந்தும், ஒருவர், பிறப்பு, மயக்கு=மயக்கம், அச்சம், பிணி=வியாதி, அவித்தை=அஞ்ஞானம், மாயை, இறப்பு=இறப்பு என்னும் இவைகளை, உறுவாரோ=அடைவரோ, அடையார், (3) பொய்= பொய்யே, (2) இவை=இத்தோற்றங்கள்.

(பொ—ரை) கிருபைக் கடலாகிய நமது சிவபெருமான் யாவருக்கும் மிகுபிரீதிக்கிடமான பரமானந்த சொருபமாய் மேலான சக்தியை உடையவனுய் விளங்கிக் கொண்டிருந்தும்,

ஒருவர் பிறப்பு, மயக்கம், அச்சம், வியாதி, அஞ்ஞானம், மாயை, இறப்பு என்னுமிவைகளை அடைவரோ. அடையார். இத்தோற்றங்கள் பொய்யே.

எல்லாரு மின்பிணையே யிச்சித்த லாற்சொந்தத்
தல்லாற் பிரியமுறா தாதலா—லெல்லார்க்கு
நித்திரையிற் றானாய் நிரதிசய மாய்ச்சமமா
யொத்திடலா லின்பே யுரு. 51

(ப—ரை) எல்லாரும்=எல்லாச் சீவரும், இன்பிணையே= சுகத்தையே, இச்சித்தலால்=விரும்புதலாலும், சொந்தத்து அல்லால்=தன்னிடத்து அல்லாமல் மற்ற வஸ்துக்களில், பிரியம் உறாது ஆதலால்=பிரியம் ஏற்படாததாலும், எல்லார்க்கும், நித்திரையில், தானாய்=தான்மாத்திரமாகி, நிரதிசயமாய்=ஏற்றத் தாழ்வில்லாமல், சமமாய் = ஒரே விதமாக, ஒத்திடலால் = அனுபவமாய் விளங்குதலாலும், இன்பே = சுகமே, உரு=தனது வடிவமாம்.

(பொ—ரை) எல்லாச் சீவரும் சுகத்தையே விரும்புதலாலும், தன்னிடத்தல்லாமல் மற்ற வஸ்துக்களில் பிரியம் ஏற்படாததாலும், எல்லார்க்கும் நித்திரையில் தான் மாத்திரமாகி ஏற்றத்தாழ்வில்லாமல் ஒரே விதமாக அனுபவமாய் விளங்குதலாலும், சுகமே தனது வடிவமாம்.

அறிவா முனைப்பார்க்கி லஞ்ஞான நெஞ்சம்
பொறிவாயுத் தேகம் புவனம்—பிறிவாகச்
சான்றாய்த் திகழ்வாய்பின் சர்வமுநின் றன்மயமா
மேன்றாழ்ந் திரங்கு கின்றா யீங்கு. 52

(ப—ரை) (3) அறிவு ஆம் = ஞானவடிவமாகிய, உனைப் பார்க்கில்=உன்னை நீ அறிந்து கொண்டால், அஞ்ஞானம்=அஞ்ஞானமும், நெஞ்சம்=மனதும், பொறி=இந்திரியங்களும், வாயு = வாயுக்களும், தேகம்=சரீரமும், புவனம்=பிரபஞ்சமும், பிறிவாக= வேறாக, சான்றாய்=நீ அவைக்கெல்லாம் சாக்ஷி மாத்திரமாய்,

திகழ்வாய் = விளங்குவாய், பின் = பின்பு, சர்வமும் = இவ்வனைத்தும், நின் தன் மயமாம் = உனது சொரூபமாகவும் தோன்றும், (2) ஏன் = எதற்காக, தாழ்ந்து = நீ சலித்து, இரங்குகின்றாய் = வருந்துகின்றாய், (1) ஈங்கு = இவ்விடத்தில்.

(பொ—ரை) ஞான வடிவமாகிய உன்னை நீ அறிந்து கொண்டால் அஞ்ஞானமும், மனதும், இந்திரியங்களும், வாயுக்களும், சரீரமும், பிரபஞ்சமும் வேறாக நீ அவைக்கெல்லாம் சாக்ஷி மாத்திரமாய் விளங்குவாய். பின்பு இவ்வனைத்தும் உனது சொரூபமாகவும் தோன்றும்.

இனிமை யனைத்தினுக்கொத் தில்லாமற் பேதந்
தனியாய்ச் சமவறிவு தானும்—பினையுளதோ
வஞ்ஞானம் பொய்யெனப்பா ரக்கணம்போங் கானனீ
ரெஞ்ஞான்றும் பொய்யெனவின் றே. 53

(ப—ரை) (1) இனிமை அனைத்தினுக்கு = எல்லா இன்பத்திற்கும், ஒத்து, இல்லாமல் பேதம் = பேதமில்லாமல், தனியாய் = தான்மாத்திரமாய், சம அறிவு = சமமான அறிவே, தானும் = தனது வடிவமாம், பினை உளதோ = அன்னியம் ஒன்றுண்டோ, இல்லை. (6) அஞ்ஞானம், (5) பொய்யெனப்பார் = பொய் என்று நிச்சயம் செய்வாய், (7) அக்கணம் போம் = அப்போதே இல்லாததாய் விடும், (3) கானல் நீர் = கானற் சலமானது, எஞ்ஞான்றும் = எப்போதும், (2) பொய்யென = பொய் என்று தேர்ந்து கொண்டால், (4) இன்று ஏ = இல்லை அதுபோல. (ஏ—அசை.)

(பொ—ரை) எல்லா இன்பத்திற்கும் ஒத்துப் பேதம் இல்லாமல் தான் மாத்திரமாய்ச் சமமான அறிவே தனது வடிவமாம். அன்னியம் ஒன்றுண்டோ, இல்லை. பொய் என்று தேர்ந்து கொண்டால் கானற் சலமானது எப்போதுமில்லை. அதுபோலப் பொய் என்று நிச்சயம் செய்வாய். அஞ்ஞானம் அப்போதே இல்லாததாய் விடும்.

இனிதென் றனவெல்லா மின்னுவாய்த் தோன்றின்
மனதென்ற துண்டோ மறப்பாய்—நினைவாய்க்
கிளைத்தவைகள் போகுமொரு கிஞ்சினும்வே றில்லை
யுளத்தை விழுங்குமுனை யோர். 54

(ப—ரை) இனிதென்றன = இது இனிமையானது இது இனிமையானது, எல்லாம் = என்று தோற்றுகின்ற சகலமும், இன்னு ஆய் = துக்க வடிவமே என்று, தோன்றின் = தோன்றினுல், மனது என்றது உண்டோ = மனது என்பது இருக்குமா, இராது; மறப்பாய் = மறப்பெனவும், நினைவாய் = நினைப்பெனவும், கிளைத்தவைகள் = காணப்படுகின்ற பேதங்களெல்லாம், போகும் = போய் விடும், ஒருகிஞ்சினும் = அற்பமும், வேறு இல்லை = வேறு என்பது கிடையாது, உளத்தை = மனத்தை, விழுங்கும் = இல்லாததாக விழுங்கி விடுகின்றன, உனை ஓர் = உனது சொருபத்தை அறிந்து கொள்வாய்.

(பொ—ரை) இது இனிமையானது இது இனிமையானது என்று தோற்றுகின்ற சகலமும் துக்க வடிவமே என்று தோன்றினுல், மனதென்பது இருக்குமா, இராது. மறப்பெனவும் நினைப்பெனவும் காணப்படுகிற பேதங்களெல்லாம் போய் விடும். அற்பமும் வேறு என்பது கிடையாது. மனதை இல்லாததாக விழுங்கி விடுகின்ற உனது சொருபத்தை அறிந்து கொள்வாய்.

தானென்னுஞ் சொற்கருத்தஞ் சர்வசான் றும்பிரமம்
யானென்னுஞ் சொற்கருத்த மேகசான்—றுனதனிக்
கூடத்த ரேயிருபேர் கூற லுபாதியினுற்
சேடித்தல் சின்மாத் திரம். 55

(ப—ரை) தான் என்னும், சொற்கு = சொல்லுக்கு, அருத்தம், சர்வ சான்று ஆம் = சர்வ சாக்ஷியாகிய, பிரமம், யான் என்னும், சொற்கு = சொல்லுக்கு, அருத்தம், ஏக சான்று ஆன = ஒரு சரீரத்திற்கு சாக்ஷியாகிய, தனி = ஒப்பற்ற, கூடத்தர் (ஏ) = கூடஸ்தர், இருபேர் கூறல் = இவ்விதம் பிரமம், கூடஸ்தர் என்று

இரண்டு பேர் சொல்லல், உபாதியினுல்=மாயை, அவித்தை என்னும் உபாதியினுலாம், சேடித்தல்=அவ்விரண்டுபாதியையும் விட்டால் மிஞ்சுவது, சின்மாத்திரம்=சுத்த ஞானமாத்திர சொரூபமே.

(பொ—ரை) தான் என்னும் சொல்லுக்கு அருத்தம் சர்வ சாக்ஷியாகிய பிரமம்; யான் என்னும் சொல்லுக்கு அருத்தம் ஒரு சரீரத்திற்கு சாக்ஷியாகிய ஒப்பற்ற கூடஸ்தர். இவ்விதம் பிரமம், கூடஸ்தரென்று இரண்டு பேர் சொல்லல் மாயை, அவித்தை என்னும் உபாதியினுலாம். அவ்விரண்டுபாதியையும் விட்டால் மிஞ்சுவது சுத்த ஞான மாத்திர சொரூபமே.

நாஞனே யென்று நவிற்றிடல்சித் தாநானே
யூஞகே னென்றே யுணர்நிதித்தி—தாஞனே
யென்றிடலெங் குந்திகழ்சித் தென்னும் பிரமமிவ
ணின்றசித்தா நானெனுமெண் ணே. 56

(ப—ரை) நான் நானே, என்று, நவிற்றிடல்=சொல்லுதல், சித்தாம் நானே = ஞான வடிவமாகிய நானே நான், ஊன் ஆகேன்=சரீரமாக மாட்டேன்,என்றே=என்பதாகவே, உணர்= உணர்கின்ற, நிதித்தி=நிதித்யாசனமாம்; தான் நானே, என்றிடல்=என்று சொல்லுவது, எங்கும் திகழ்=எவ்விடத்தும் விளங்குகின்ற, சித்து என்னும் பிரமம்=ஞான சொரூபமாகிய பிரமமே, இவண் நின்ற=இச்சரீரத்தில் விளங்குகின்ற, சித்து ஆம்=ஞானமயமாகிய, நான், எனும்=என்னும், எண்ணே= தியானமேயாம்.

(பொ—ரை) நான் நானே என்று சொல்லுதல் ஞான வடிவமாகிய நானே நான், சரீரமாக மாட்டேனென்பதாகவே உணர்கின்ற நிதித்தியாசனமாம். தான் நானே என்று சொல்லுவது எவ்விடத்தும் விளங்குகின்ற ஞான சொரூபமாகிய பிரமமே; இச்சரீரத்தில் விளங்குகின்ற ஞானமயமாகிய நானென்னும் தியானமேயாம்.

நானீ யவனென்ற ுறுத னருள்மொழியா
மாறுத மாயை யடர்நானு—மூனே
ரவித்தையுடை நீயு மருகிவ் வுபாதி
நிவிர்த்திப் பிரமமெனு நின்று. 57

(ப—ரை) (1)நான் நீ அவன், என்றல்=என்னும் தன்மை, முன்னிலை, படர்க்கையாகிய சொற்களின் அருத்தம், நாதன்= குருநாதனது, அருள் மொழி ஆம்=உபதேச வாக்கியமாம், அதாவது, (3) ஆறுத=நீங்காத, மாயை அடர்=மாயா உபாதியுடைய, நானும்=ஈசுவர சொரூபமாகிய நானும், ஊன் நேர்= சரீர சம்பந்தமான, அவித்தை உடை=அவித்தை உபாதியுடைய, நீயும்=சீவனாகிய நீயும், அருகு=குறைவு செய்கின்ற, இவ்வுபாதி=இம் மாயை, அவித்தை என்னும் உபாதிகள், நிவர்த்தி=நீங்கிய, பிரமம் எனும் = சுத்த பிரமமே என்று சொன்னதாம், (2) நின்று=திடமான அனுபவத்தை அடைந்து.

(பொ—ரை) நான், நீ, அவன் என்னும் தன்மை, முன்னிலை, படர்க்கையாகிய சொற்களின் அருத்தம் குருநாதனது உபதேச வாக்கியமாம். அதாவது திடமான அனுபவத்தை அடைந்து நீங்காத மாயா உபாதியுடைய ஈசுவர சொரூபமாகிய நானும், சரீர சம்பந்தமான அவித்தை உபாதியுடைய சீவனாகிய நீயும், குறைவு செய்கின்ற இம்மாயை அவித்தைகள் நீங்கிய சுத்தப் பிரமமே என்று சொன்னதாம்.

### கலி விருத்தம்

உன்னைத்தெரு டன்னைத்தெரு ளுறுதிப்படு நெஞ்சே
யந்நற்சொலி னுன்மாபர பான்மாவுணர் வைக்கந்
துன்னற்செயல் விர்த்திக்கென றூய்தாமுரை பந்தத்
தின்னற்படு சிந்தைக்கல தெழின்முத்தியெ வர்க்கே. 58

(ப—ரை) உன்னைத் தெருள்=ஆத்மாவாகிய உன்னை அறிந்து தெளி, தன்னைத் தெருள்=பிரம்மமாகிய தன்னை அறிந்து தெளி, உறுதிப்படு=இவ்விரண்டும் ஒன்றேஎன உறுதியாய்

நில், நெஞ்சே=மனமே, அ நல் சொலின்=என்னும் அந்த நல்ல பழமொழியில், ஆன்மா, பரமான்மா, உணர்வு ஐக்கம்= உணர்ச்சியின் ஏகத் தன்மையை, துன்னல் செயல்=அடையும் செய்கையானது, விர்த்திக்கு எனல்=மனதிற்கே என்பது, தூய்து ஆம் உரை=பரிசுத்தமான அர்த்தமாம், பந்தத்து=பந்த தசையில், இன்னல் படு = துன்பப்படுகின்ற, சிந்தைக்கு= மனதிற்கே, (3) அலது=அல்லாமல், (2) எழில் முத்தி=மேலான முத்தி, (4) எவர்க்கே=வேறு ஒருவருக்கும் இல்லை என்பதாம்.

(பொ—ரை) ஆத்மாவாகிய உன்னை அறிந்து தெளி, பிரமமாகிய தன்னை அறிந்து தெளி, இவ்விரண்டும் ஒன்றே என உறுதியாய் நில் மனமே என்னும் அந்த நல்ல பழமொழியில் ஆன்மா, பரமான்மா உணர்ச்சியின் ஏகத் தன்மையை அடையும் செய்கையானது மனதிற்கே என்பது பரிசுத்தமான அர்த்தமாம். பந்த தசையில் துன்பப்படுகின்ற மனதிற்கே மேலான முத்தி அல்லாமல் வேறு ஒருவருக்கும் இல்லை என்பதாம்.

### கலித்தாழிசை

சருவான் மகமாந் தனிப்பிரம மல்லா
தொருவாற்ரு னும்வேறொன் றுண்டோ பயமுறவே 59

(ப—ரை) சருவ ஆன்மகம் = சர்வமும் தானாகிய, தனி= ஒப்பற்ற, பிரமம் அல்லாது=பிரமத்தைத் தவிர, ஒரு ஆற்ருனும்= எந்த விதத்தாலும், (3) வேறு ஒன்று, உண்டோ=இருக்கிறதா, இல்லை, (2) பயம் உற (ஏ)=பயமடையும்படி.

(ஏ—அசை.)

(பொ—ரை) சர்வமும் தானாகிய ஒப்பற்ற பிரமத்தைத் தவிர எந்த விதத்தாலும் பயமடையும்படி வேறு ஒன்று இருக்கிறதா, இல்லை.

சருவானந் தத்திற்குஞ் சாற்றுமதிட் டானப்
பிரமானந் தச்சொரூபப் பேரொளிக்கு மாசையுண்டோ. 60

(ப—ரை) சருவ ஆனந்தத்திற்கும் = சர்வ விஷய சுகங்களுக்கும், சாற்றும் = சொல்லப்படுகின்ற, அதிட்டான= ஆதாரமாகிய, பிரமானந்த, சொரூப=சொரூபமான, பேர் ஒளிக்கும்=மகா பிரகாசத்திற்கும். ஆசை, உண்டோ= இருக்குமோ, இராது.

(பொ—ரை) சர்வ விஷய சுகங்களுக்கும் சொல்லப் படுகின்ற ஆதாரமாகிய பிரமானந்த சொரூபமான மகாப் பிரகாசத்திற்கும், ஆசை இருக்குமா, இராது.

## குறள் வெண்பா.

நினைவொழிந்து சும்மாவே நிற்கு மறிவின்பந்
தனைமவுன மென்னல் தகும். 61

(ப—ரை) நினைவு ஒழிந்து=சங்கற்பமற்று, சும்மாவே, நிற்கும்=இருக்கின்ற, அறிவு இன்பம் தனை = ஞான சுகமாகிய தன்னையே, மவுனம்=மௌன நிலை, என்னல் தகும்=என்று சொல்லல் தகுதியாம்.

(பொ—ரை) சங்கற்பமற்று, சும்மாவே இருக்கின்ற ஞான சுகமாகிய தன்னையே மௌன நிலை என்று சொல்லல் தகுதியாம்.

## வெண்பா

தன்வயத் தோரறிவாய்ச் சங்கற்பஞ் செய்ததிற்போய்
வனமனத்தாய்ப் பல்சத்தி வாய்ந்துளதாம்—பன்மையுற
நீரிற் றிரைமுதல்போ னீள்பேத வல்லபங்கள்
சாரு மதனிடத்திற் றூன். 62

(ப—ரை) தன் வயத்து = தன்வயமாகிய அனுபவ சொரூபமாகி, ஓர் அறிவு ஆய்=ஒப்பற்ற அறிவாகிநின்றும்,

சங்கற்பம் செய்து, அதில் போய் =அச் சங்கற்பத்தைச் சேர்ந்து, வன் மனத்தாய்=வல்லமையுடைய பெரிய மனமாகி, பல்சத்தி= அனந்த சக்திகளை, வாய்ந்து உளதாம்=பொருந்தியிருக்கும், (4) பன்மையுற=பலவிதமாக, நீரில்=ஜலத்தில், திரை முதல் போல்=அலை குமிழி, திவலை முதலியவைகளைப்போல, நீள் பேத வல்லபங்கள்=அனேக விதமான பேத சக்திகள், சாரும்= உண்டாகும், (3) அதனிடத்தில்=அந்த மனதினிடத்தில் (1) தான்=தானே.

(பொ—ரை) தானே தன்வயமாகிய அனுபவசொருபமாகி, ஒப்பற்ற அறிவாகி நின்றும், சங்கற்பம் செய்து அச்சங்கற்பத்தைச் சேர்ந்து வல்லமையுடைய பெரிய மனமாகி அனந்த சக்திகளைப் பொருந்தியிருக்கும். அந்த மனதினிடத்தில் பலவிதமாக ஜலத்தில் அலை குமிழி, திவலை முதலியவைகளைப் போல அநேக விதமான பேத சக்திகள் உண்டாகும்.

## குறள் வெண்பா

தானேதா னல்லாச் சகத்துப்போ லாய்விளங்கு
வானேசிற் சோதிவடி வன். 63

(ப—ரை) (2) தானே, தான் அல்லா=தானல்லாத, சகத்துப் போலாய்=பிரபஞ்ச பேதங்கள் போலாகி, விளங்குவான்(ஏ)=விளங்குகின்றான் (1) சித் சோதி வடிவன்= ஞானப் பிரகாசமே வடிவமாகிய ஆன்மா.

ஏ—அசை.

(பொ—ரை) ஞானப் பிரகாசமே வடிவமாகிய ஆன்மா, தானே தானல்லாத பிரபஞ்ச பேதங்கள்போலாகி விளங்குகின்றான்.

## வெண்பா

மாளிகைமேல் வேந்தன் மகளிர்கைப் பொற்பந்து
நீளிடைகிஞ் சித்து நிலைதவறின்—மீளி
லலைப்பினாற் பங்கமிக வங்கணத்தில் வீழ்ந்து
புலைச்சிறார் புன்கைப் புகும். 64

(ப—ரை) மாளிகை மேல் = உப்பரிகையின் மேல், வேந்தன் மகளிர் = விளையாடுகின்ற ராஜ ஸ்திரீகள், கைப் பொற் பந்து = கையில் உள்ள பொன் முதலியவைகளால் அலங்கரிக்கப் பட்ட பந்தானது, நீள் இடை = விஸ்தாரமான மேடையில், கிஞ்சித்து = சிறிது, நிலைதவறின் = எல்லை தவறினால், மீளில் = மீளாத, அலைப்பினால் = அலைச்சல்களினால், பங்கமிக = இழிவுமிக, அங்கணத்தில் = சலதாரையில், வீழ்ந்து, புலைச்சிறார் = புலையரின் குழந்தைகளது, புன் கை = ஈனமான கையை, புகும் = அடையும்.

(பொ—ரை) உப்பரிகையின் மேல் விளையாடுகின்ற ராஜ ஸ்திரீகளின் கையில் உள்ள பொன் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட பந்தானது விஸ்தாரமான மேடையில் சிறிது எல்லை தவறினால் மீளாதஅலைச்சல்களால் இழிவுமிக சலதாரையில் வீழ்ந்து புலையரின் குழந்தைகளது ஈனமான் கையை அடையும்.

(மேலான ஞான பூமியில் இருக்கின்ற குருவின் அனுக்கிரகம் பெற்றவனது அப்பியாச மனதானது, விவகாரங்களில் சென்று பேத வாசனை தோன்ற, நாம ரூபமாகிச் சஞ்சலத்தை அடையும். திட ஞானிகளல்லாமல் அப்பியாசிகள் விவகாரங்களில் சென்றால், பேத வாசனைகள் ஏற்பட்டுத் தாழ்ந்த ஸ்திதியை அடைவார்கள் என்பது கருத்து.)

அடர்கின்ற மாயை யசத்தியமா மென்பாஞ்
சடமென்பாந் துன்பென்பாஞ் சாற்றுத்-தொடர்பென்பாஞ்
சங்கற்ப மென்பாஞ் சகமென்பாந் தோற்றமென்பாம்
பங்குற்ற பாவனையென் பாம். 65

(ப—ரை) அடர்கின்ற = எதிர்க்கின்ற, மாயை = மாயையை, அசத்தியமாம் = பொய், என்பாம்=என்று சொல்வோம், சடம் என்பாம்=மூடம் என்று சொல்வோம், துன்பு என்பாம்=துன்பு என்று சொல்வோம், சாற்ரு=இன்னவிதமென்று சொல்ல முடியாத, தொடர்பு என்பாம் = சம்பந்தமென்று சொல்வோம், சங்கற்பம் என்பாம் = என்று சொல்வோம், சகம் என்பாம் = பிரபஞ்சமென்று சொல்வோம், தோற்றம் என்பாம் = தோற்றம் மாத்திரமென்று சொல்வோம், பங்குற்ற பாவனை=பேத பாவனை, என்பாம் = என்று சொல்வோம்.

(பொ—ரை) எதிர்க்கின்ற மாயையை பொய்யென்று சொல்வோம். மூடம் என்று சொல்வோம். துன்பம் என்று சொல்வோம். இன்னவிதமென்று சொல்லமுடியாத சம்பந்தமென்று சொல்வோம். சங்கற்பமென்று சொல்வோம். பிரபஞ்சமென்று சொல்வோம். பேதபாவனை என்று சொல்வோம்.

எல்லாஞ் சுயலீலை யாகுமல தீசனுரு
வல்லான் மறந்துநினைந் தவ்வுயிராய்—நில்லாத
விவ்வுடல்யா னென்றுசக மீதென் றியல்வினையாற்
கவ்வுமல பந்தமுறுங் காண். 66

(ப—ரை) எல்லாம், சுய லீலை=தனது லீலை, 'ஆகும், அலது=அல்லது, ஈசன் உரு=ஈசுவர சொரூபமாம், அல்லால்= இப்படியல்லாமல், மறந்து = மனிதன் மறதியை அடைந்து, நினைந்து = பலவித சங்கற்பங்களைச் செய்து, அவ்வுயிராய்= அத்தன்மையுடைய சீவனாகி, நில்லாத=நிலையற்ற, இவ்வுடல் யான்=இந்தச் சரீரமே நான், என்று=என்றும், சகம் ஈதென்றும்= எதிர்ப்படுகின்ற இது சகமென்றும், இயல் வினையால்=எண்ணிப் பொருந்துகின்ற கர்மங்களினால், கவ்வும் = விடாது பற்றிய, மலபந்தம் உறும்=அஞ்ஞான பந்தத்தையடைவான்.

(காண்—முன்னிலையசை)

(பொ—ரை) எல்லாம் தனது லீலையாகும்; அல்லது ஈசுவர சொரூபமாம். இப்படியல்லாமல் மனிதன் மறதியை அடைந்து பலவித சங்கற்பங்களைச் செய்து அத்தன்மையுடைய சீவனாகி, நிலையற்ற இந்தச் சரீரமே நான் என்றும், எதிர்ப்படுகின்ற இது சகம் என்றும் எண்ணிப் பொருந்துகின்ற கர்மங்களினால் விடாது பற்றிய அஞ்ஞானத்தை அடைவான்.

பித்தர்போற் பேய்தான் பிடித்தாற்போ லவ்வுலக
மித்தரைநா னீயின் பிடரவ்வ—வத்தவைகள்
சீவிப்போன் மாய்வோன் றெரிவிலன்யான் றேகமெனப்
பாவிப்போன் சீவப் பசு. 67

(ப—ரை) (2) பித்தர் போல்=பித்தரைப் போலவும், பேய் பிடித்தவர் போல் = பேய் பிடித்தவரைப் போலவும், (1) அவ்வுலகம்=அந்த உலகம், இத்தரை = இந்த உலகம், நான்நீ, இன்பு=இன்பம், இடர்=துன்பம், அவ்வவ்வஸ்து=அந்த அந்த வஸ்து, அவைகள் = அந்த அந்தத் தன்மையுடையன, சீவிப்போன் = ஜீவித்திருக்கிறவன் நான், மாய்வோன்=இறந்து போகிறவன் நான், தெரிவிலன் = அறியாதவன் நான், யான் தேகம் என=இந்தச் சரீரமே நான் என்று, (3) பாவிப்போன்= இவ்விதமாகப் பாவிக்கிறவனே, சீவப் பசு=சீவனாகிய பசு ஆவான். (தான்—அசை)

(பொ—ரை) அந்த உலகம், இந்த உலகம், நான், நீ, இன்பம், துன்பம், அந்த அந்த வஸ்து அந்த அந்த தன்மையுடையன். சீவித்திருக்கிறவன் நான், இறந்து போகிறவன் நான், அறியாதவன் நான், இந்தச் சரீரமே நான் என்று பித்தரைப் போலவும், பேய் பிடித்தவரைப் போலவும், இவ்விதமாகப் பாவிக்கிறவனே சீவனாகிய பசு ஆவான்.

தேகாதி யானென்று சிந்தித் துறைத்ததனுன்
மோகாதி யம்மனதை மூடினதாற்—போகா
வவிவேகத் தைப்பழகுற் ருன்மிகவிவ் வாறு
பவமாய்வுற் றல்லற் படும். 68

(ப—ரை) தேகாதி=மனமானது சரீரம், இந்திரியம், பிராணன் முதலியவற்றை; யான் என்று = நானென்று, சிந்தித்து = நிச்சயித்து, உறைத்ததனுல் = திடப்பட்டதனுல், மோகாதி = மோகம், கோபம், பொருமை முதலியவை; அம்மனதை = அந்த மனத்தை, மூடினது (ஆல்) = சூழ்ந்து கொண்டன, போகா=தீராத, அவிவேகத்தை, (3) பழகுற்ருல் மிக=மிகப் பழகுவதால், (2) இவ்வாறு=இவ்விதம், (4) பவம் மாய்வு உற்று = இறப்பு பிறப்பை அடைந்து, அல்லல்படும் = துன்பப்படும். (ஆல்—அசை)

(பொ—ரை) மனமானது சரீரம், இந்திரியம், பிராணன் முதலியவற்றை நானென்று நிச்சயித்துத்திடப்பட்டதனுல்மோகம், கோபம், பொருமை முதலியவை அந்த மனத்தை சூழ்ந்து கொண்டன. தீராத அவிவேகத்தை இவ்விதம் மிகப்பழகுவதால் இறப்பு பிறப்பை அடைந்து துன்பப்படும்.

யான்பிறந்தே னென்மெய் யிதுபிறருற் ருர்பெண்பொன்
வான்புவிநோய் வாழ்வதுநாள் மாய்வென்று-தான்புலம்பும்
பேதையிவர் தாருவிலோர் பேயென்னப் பேய்கொண்ட
காதையைப்போற் சீவனுய்க் கண்டு. 69

(ப—ரை) (4) யான் பிறந்தேன்=நான் பிறந்திருக்கிறேன், என் மெய் இது=இது எனது சரீரம், பிறர்=அன்னியர், உற்ருர்= உறவினர், பெண் பொன் வான்=சொர்க்கம், புவி=பூமி, நோய் வாழ்வு (அது), நாள்=காலம், மாய்வு=மரணம், என்று, (தான்) புலம்பும் = புலம்புவார்கள், (1) பேதை இவர் = அறிவில்லாத இம்மனிதர், (3) தாருவில்=அம்மரத்தில், ஓர் பேய் என்ன= ஓர் பேய் இருக்கிறதென்று சொல்ல, பேய் கொண்ட=உடனே பேய் பிடித்த, காதையைப் போல் = கதையைப் போல,

(2) சீவனாய்க் கண்டு = தம்மைச் சீவனாய் நிச்சயித்துக் கொண்டு. (அது—பகுதிப்பொருள் விகுதி. தான்—அசை)

(பொ—ரை) அறிவில்லாத இம்மனிதர், தம்மைச் சீவனாய் நிச்சயித்துக்கொண்டு, அம்மரத்தில் ஓர் பேய் இருக்கிறதென்று சொல்ல, உடனே பேய் பிடித்த கதையைப்போல, நான் பிறந்திருக்கிறேன், இது எனது சரீரம், அன்னியர் உறவினர், பெண் பொன், சொர்க்கம், பூமி, நோய், வாழ்வு, காலம், மரணம் என்று புலம்புவார்கள்.

தன்னின்ப மோரான் றரணி கனகமகள்
மின்னின்பை நாடியுயிர் வீழ்ந்தழியும்—கொன்னே
கயின்மீ தயங்கிடப்பக் காணா நிழல்கண்
டயலாச் சுனைவீழு மாறு. 70

(ப—ரை) (8) தன் இன்பம் ஓரான் = தானே சுக சொரூபம் என்பதை அறியாதவனாகி, தரணி = மண், கனகம் = பொன், மகள் = பெண் முதலியவற்றில், மின் இன்பை = மின்னல் போல் தோற்றி மறைகின்ற அற்ப சுகத்தை, நாடி = இச்சித்து, (1) உயிர் = சீவனானவன், வீழ்ந்து = அவற்றைத் தொடர்ந்து, அழியும் = வருந்திக் கெடுகின்றான், (2) கொன்னே = நன்றாக, (1) கயில் மீது = ஒருவன் தனது பிடரியின் மேல், அயம் = ஆடானது, (3) கிடப்ப = கிடக்க, காணான் = அதை அறியாதவனாகித் தேடி, (5) நிழல் = அதன் நிழலை, கண்டு அயலா = வேறாகக் கண்டு, (4) சுனை = ஒரு கிணற்றில், (6) வீழும் ஆறு = அதில் விழுந்து கிடைத்ததாக எண்ணிக்கொண்டு வருந்தி எழுந்த விதத்தைப் போல.

(பொ—ரை) ஒருவன் தனது பிடரியின் மேல் ஆடானது நன்றாகக் கிடக்க, அதை அறியாதவனாகித் தேடி, ஒரு கிணற்றில் அதன் நிழலை வேறாகக் கண்டு அதில் விழுந்து, கிடைத்ததாக எண்ணிக்கொண்டு, வருந்தி எழுந்த விதத்தைப் போலச், சீவனானவன், தானே சுக சொரூபமென்பதை அறியாதவனாகி மண், பொன், பெண் முதலியவற்றில் மின்னல் போல் தோன்றி

மறைகின்ற அற்ப சுகத்தை இச்சித்து அவற்றைத் தொடர்ந்து வருந்திக் கெடுகின்ருன்.

எங்குஞ் சிவமா யிருந்து மிலையென்று
மங்க முதலா வனேகவிதந்—தங்குசக
முண்டென்ற பாதகத்தா ரோதற் கருந்துயரங்
கொண்டென்று மீளார் குறைந்து. 71

(ப—ரை) (1) எங்கும் = எவ்விடத்தும், சிவமாய் = சிவமயமாக, இருந்தும், இலை என்றும் = சிவமென்பது இல்லையென்றும், அங்கம் முதலா = சரீரம் முதலாக, அனேகவிதம் = அனந்தவிதவஸ்துக்கள், தங்கு = இருக்கின்ற, சகம் = உலகமானது, உண்டு என்ற = உள்ளது என்றும் எண்ணி இருக்கின்ற, பாதகத்தார் = பாபிகள், ஓதற்கு = சொல்லுதற்கு, அரும் துயரம் = முடியாத துன்பத்தை, கொண்டு = அடைந்து, (3) என்றும் = எப்போதும், மீளார் = அதினின்றும் மீளமாட்டார்கள், (2) குறைந்து = இழிவுற்று.

(பொ—ரை) எவ்விடத்தும் சிவமயமாக இருந்தும், சிவமென்பது இல்லையென்றும், சரீரம் முதலாக அனந்தவித வஸ்துக்கள் இருக்கின்ற உலகமானது உள்ளது என்றும், எண்ணி இருக்கின்ற பாபிகள், சொல்லுதற்கு முடியாத துன்பத்தை அடைந்து இழிவுற்று எப்போதும் அதினின்றும் மீளமாட்டார்கள்.

தன்மயமாய்ப் பூரணமாய்ச் சச்சிதா னந்தமட்டாய்
மன்விளங்க நானீ மனமொழிமெய்—பன்மைசில
வாண்பெண் பகைநேச மாமலதிங் க்ங்கென்று
காண்பவரென் ருன்மயங்கார் கள். 72

(ப—ரை) தன் மயமாய் = தனது வடிவமாகவும், பூரணமாய் = பூரணமாகவும், சச்சிதானந்தம், மட்டாய் = மாத்திரமாகவும், மன் = நன்ருக, விளங்க = விளங்க, அதை அறியாமல், நான் நீ, மனம், மொழிமெய் = வாக்குக் காயம்,

பன்மை=பல, சில, ஆண் பெண், பகை, நேசம்=உறவு, ஆம்= ஆகும், அலது=ஆகாது, இங்கு அங்கு=இகம் பரம், என்று= என்பன முதலானவைகள் இருக்கின்றன என்று, காண்பவர்= நினைப்பவர்கள், என் தான் = எப்படித்தான், மயங்கார்கள்= மயங்கமாட்டார்கள், எப்படியும் மயங்குவார்கள்.

(பொ—ரை) தனது வடிவமாகவும் பூரணமாகவும் சச்சிதானந்த மாத்திரமாகவும் நன்ருக விளங்க, அதையறியாமல் நான் நீ, மனம், வாக்குக் காயம், பல சில, ஆண் பெண், பகை உறவு, ஆகும் ஆகாது, இகம் பரம் என்பன முதலானவைகள் இருக்கின்றன என்று நினைப்பவர்கள், எப்படித் தான் மயங்க மாட்டார்கள்? எப்படியும் மயங்குவார்கள்.

### கலிநிலைத்துறை

ஆக்கை யானிது சகமிவ
ருறவிவ ரயலார்
நோக்கி னேனடந் தேன்செய்தே
னிருந்தன னுகர்ந்தேன்
றூக்கி னேன்பிறந் திறப்பனென்
றுலண்டுபோற் சுயத்தில்
வீக்கு பாவனை யுற்றுயி
ராய்மிக மெலிவார் 73

(ப—ரை) (2)ஆக்கையான்=சரீரம் நான்,இது சகம்=இது உலகம்,இவர், உறவு=உறவினர்,இவர் அயலார், நோக்கினேன்= பார்த்தேன், நடந்தேன், செய்தேன், இருந்தேன், நுகர்ந்தேன்= புசித்தேன், தூக்கினேன்=தூங்கினேன், பிறந்து இறப்பன் = பிறப்பேன், இறப்பேன்; என்று, (1) உலண்டு போல்=கோற் புழுவைப் போல அநேகர், சுயத்தில்=தானே, (3) வீக்கு= கட்டுகின்ற, பாவனையுற்று=பாவனையைச் செய்து, உயிராய்= ஜீவனாகி, மிக மெலிவார்=மிகவும் வருந்துகின்ருர்கள்.

(பொ—ரை) கோற் புழுவைப் போல அநேகர் தானே "சரீரம் நான் இது உலகம் இவர் உறவினர் இவர் அயலார் பார்த்தேன் நடந்தேன் செய்தேன் இருந்தேன் புசித்தேன் தூங்கினேன் பிறப்பேன் இறப்பேன்" என்று கட்டுகின்ற பாவனையைச் செய்து ஜீவனாகி மிகவும் வருந்துகிறார்கள்.

## வெண்பா

முற்றுணர்வா மீசன் முறையாய்ச் செயுமனைத்துஞ்
சிற்றுணர்வாஞ் சீவன் செயுங்கிரம—மற்றவையே
யொன்றுஞ் செயாமெய் யுணர்வேதா னாச்சமமா
வென்றும் பிரமமுள தே. 74

(ப—ரை) (1) முற்று உணர்வு ஆம் = பேரறிவாகிய, ஈசன் = ஈசுவரன், (3) முறையாய்ச் செயும் = கிரமமாய்ச் செய்வான், (2) அனைத்தும் = எல்லாவற்றையும், (4) சிற்றுணர்வு ஆம் = சிற்றுணர்வாகிய, சீவன், (6) செயும் = செய்வான், (5) கிரம மற்றவையே = கிரமமில்லாதவற்றையே, (8) ஒன்றும் செயா = ஒன்றையும் செய்யாத, மெய்யுணர்வே = சுத்த அறிவே, தான் ஆ = தானாகவும், சமம் ஆ = சமமாகவும், என்றும் = நித்தியமாகவும், (7) பிரமம் = பிரமமானது, (9) உளது(ஏ) = இருக்கிறது. (ஏ—அசை.)

(பொ—ரை) பேரறிவாகிய ஈசுவரன் எல்லாவற்றையும் கிரமமாகச் செய்வான். சிற்றறிவாகிய சீவன் கிரமமில்லாதவற்றையே செய்வான். பிரமமானது ஒன்றையும் செய்யாத சுத்த அறிவே தானாகவும் சமமாகவும் நித்தியமாகவும் இருக்கிறது.

### அறுசீர் விருத்தம்

சருவந் தாஞ நோக்கிடுஞ்சற்
சங்கற் பஞ்சே ரறிவீசன்
சருவந் தனிற்கிஞ் சிற்பகுத்தே
தான்வே றுணர்துற் சங்கற்ப
மருவு மறிவா முயிரிந்த
வகையி னிருசங் கற்பமவை
மருவு ருதெங் கும்பொதுவாய்
மகத்தா மறிவு பிரமமரோ. 75

(ப—ரை) சருவம்=எல்லாவற்றையும், தான் ஆ=தாஞக, நோக்கிடும் = அறிகின்ற, சத்சங்கற்பம்=நல்ல சங்கற்பத்தை, சேர்=பொருந்திய, அறிவு, ஈசன்=ஈசுவரஞவன், சருவந்தனில்= சகலத்தினுள்ளும், கிஞ்சில்=சிறிது மாத்திரத்தை, பகுத்து (ஏ) = பிரித்துத் தனதாக நிச்சயித்துக் கொண்டு மற்றவற்றை, (தான்) வேறு = வேருக, உணர் = அறிகின்ற, துற்சங்கற்பம் = தீய சங்கற்பத்தை, மருவும் = பொருந்திய, அறிவு, ஆம் உயிர் = ஜீவஞவன், இந்த வகையின் = இவ்விதமான, இருசங்கற்பம் (அவை)=இரண்டு சங்கற்பங்களையும், மருவுருது=பொருந்தாமல், எங்கும் பொதுவாய் = எவ்விடத்தும் சமமாகி, மகத்து ஆம்= பூரணமாகிய, அறிவு பிரமம் (அரோ)=அறிவே பிரமம்.

(ஏ, அரோ—அசைகள். தான்—சாரியை.)
(அவை—பகுதிப்பொருள் விகுதி)

(பொ—ரை) எல்லாவற்றையும் தாஞக அறிகின்ற நல்ல சங்கற்பத்தைப் பொருந்திய அறிவு ஈசுவரஞவன். சகலத்தினுள்ளும் சிறிது மாத்திரத்தைப் பிரித்துத் தனதாக நிச்சயித்துக் கொண்டு மற்றவற்றை வேருக அறிகின்ற தீய சங்கற்பத்தைப் பொருந்திய அறிவு ஜீவஞவன். இவ்விதமான இரண்டு சங்கற்பங்களையும் பொருந்தாமல் எவ்விடத்தும் சமமாகி பூரணமாகிய அறிவே பிரமமாம்.

### வெண்பா

அவித்தையைச்சார்ந் தாற்போ லறையறிவே சீவன்
சவிப்பரவு மாயையைச்சார்ந் தாற்போ—னவிற்றறிவே
யீசனு மிந்த விரண்டினுஞ்சா ராதுளவத்
தேசறிவு தான்பிரமந் தேர். 76

(ப—ரை) அவித்தையை = அஞ்ஞானத்தை, சார்ந்தாற்போல் = சேர்ந்தது போல, அறை = சொல்லப்படுகின்ற, அறிவே, சீவன் = ஜீவனும்; சவி = பிரகாசம், பரவு = மிகுந்த, மாயையை, சார்ந்தாற்போல் = சேர்ந்ததுபோல, நவிற்று = சொல்லப்படுகின்ற, அறிவே, ஈசனும் = ஈசுவரனும்; இந்தஇரண்டினும் சாராது, உள = இருக்கின்ற, அத் தேசு அறிவு (தான்) = அந்தப் பிரகாசமான அறிவே, பிரமம் = பிரமமாம்; தேர் = என்று தேர்ந்து கொள்.

(தான்—சாரியை.)

(பொ—ரை) அஞ்ஞானத்தைச் சேர்ந்ததுபோலச் சொல்லப்படுகின்ற அறிவே ஜீவனும். பிரகாசம் மிகுந்த மாயையைச் சேர்ந்தது போலச் சொல்லப்படுகின்ற அறிவே ஈசுவரனும். இந்த இரண்டினும் சாராது இருக்கின்ற அந்தப் பிரகாசமான அறிவே பிரமமாம் என்று தேர்ந்து கொள்.

### அறுசீர் விருத்தம்

வருசிதா பாச னோடு
வாதனை மருவிப் புந்தி
யுருவமாய் முளைக்கும் போதவ்
வுயிரினை வெளியாக் காண்பா
மருளுமீ சுரனை யந்தர்
யாமிசர் வஞ்ஞன் சர்வே
சுரனென வுணர்வாம் வேதம்
சொல்லுமக் கேள்வி யாலே. 77

(ப—ரை) (1) வரு = வருகின்ற, சிதாபாசனோடு, வாதனை = வாசனை, மருவி = பொருந்தி, புந்தி உருவமாய் = புத்தியின்

வடிவமாகி, முளைக்கும் போது=தோற்றும் போது, அவ்வுயிரினை= அந்தச் சீவனை, வெளியா = வெளிப்படையாக, காண்பாம்= காணலாம்; அருளும்=கருணை செய்கின்ற, ஈசுரனை=ஈசுவரனை, அந்தர்யாமி=உள்ளிருந்து நடத்துகிறவன், சர்வஞ்ஞன்=எல்லாம் அறிந்தவன், சர்வ ஈசுரன் = எல்லாம் நடத்துகிறவன், என= என்று, (3) உணர்வாம்=அறியலாம்; (2) வேதம் சொல்லும்= வேதங்களிற் சொல்லப்படுகின்ற, அக் கேள்வியாலே = அந்தக் கேள்வி வாக்கியங்களாலே.

(சிதாபாசன் = சித் ஆபாசன் — அறிவு போன்றவன் — மனத்தில் தோற்றும் சித்தின் பிரதிபிம்பம். கேள்வி =கேட்கப் படுகின்றது.)

(பொ—ரை) வருகின்ற சிதாபாசனோடு வாசனை பொருந்தி புத்தியின் வடிவமாகித் தோற்றும் போது அந்தச் சீவனை வெளிப்படையாகக் காணலாம். கருணை செய்கின்ற ஈசுவரனை "உள்ளிருந்து நடத்துகிறவன், எல்லாம் அறிந்தவன், எல்லாம் நடத்துகிறவன்" என்று வேதங்களிற் சொல்லப்படுகின்ற அந்தக் கேள்வி வாக்கியங்களாலே அறியலாம்.

## கலித்துறை

ஓருடலு யிர்த்தல்பொறி கரணமிவை
தானுயுறும் விடயமுண்
டாருயிர்கண் மின்னலின்ம கிழ்ச்சிபெறும்
வாதனைய ளக்கர்நிகரா
நேரில்பர னண்டபகி ரண்டமுழு
துந்தனது நிமலவுருவா
தேருமா கண்டபரமானந்த மாவனித்
திறமோர் மினே. 78

(ப—ரை) (2) ஓர் உடல்=ஒரு சரீரம், உயிர்த்தல் = பிராணாதி வாயுக்கள், பொறி= இந்திரியங்கள், கரணம்=அந்தக் கரணங்கள் ஆகிய, இவை = இவைகளே, தானுய்=தானெனப் பாவித்துக் கொண்டு, உறும்=எதிர்ப்பட்ட, விடயம் = சப்தாதி

விடயங்களை, உண்டு = அனுபவித்து, (1) ஆர் உயிர்கள் = அருமையான ஜீவர்கள், (3) மின்னலின் = க்ஷணத்தில் தோன்றி மறையும் மின்னலைப் போல, மகிழ்ச்சி = சிறிய, இன்பங்களை, பெறும் = அடைவார்கள்; வாதனை = அதனால் வரும் துன்பம், அளக்கர் = சமுத்திரத்திற்கு, நிகராம் = சமானமாகும்; நேர் இல் = ஒப்பற்ற, பரன் = ஈசுவரன், அண்ட பகிரண்டம் = இவ் அண்டம், வெளி அண்டங்கள்; முழுதும் = எல்லாவற்றையும், தனது, நிமல = பரிசுத்தமான, உருவா = உருவமாகக் கண்டு, தேர் அரும் = உணர்தற்கரிய, அகண்ட = கண்டமற்ற, பரம = மேலான, ஆனந்தம் ஆவன் = ஆனந்தமாக விளங்குவன்; இத்திறம் = இத்தன்மையை, ஓர்மின்(ஏ) = அறிந்து கொள்ளுங்கள்.

(ஏ—அசை. அருமை + உயிர்கள் = ஆருயிர்கள்)

(பொ—ரை) அருமையான ஜீவர்கள், ஒரு சரீரம் பிராணாதி வாயுக்கள், இந்திரியங்கள், அந்தக்கரணங்கள் ஆகிய இவைகளே தானெனப் பாவித்துக் கொண்டு, எதிர்ப்பட்ட சப்தாதிவிஷயங்களை அனுபவித்து, க்ஷணத்தில் தோன்றி மறையும் மின்னலைப் போல சிறிய இன்பங்களை அடைவார்கள். அதனால் வருந் துன்பம் சமுத்திரத்திற்குச் சமானமாகும். ஒப்பற்ற ஈசுவரன் இவ்வண்டம், வெளி அண்டங்கள் எல்லாவற்றையும் தனது பரிசுத்தமான உருவமாகக் கண்டு, உணர்தற்கரிய கண்டமற்ற மேலான ஆனந்தமாக விளங்குவன். இத்தன்மையை அறிந்து கொள்ளுங்கள்.

## வெண்பா

பாவிப்போன் சீவன் பயில்வா தனைமனமாஞ்
சீவிப் பவன்மனனஞ் செய்வதுவே—தேவை
யறிந்திலன்யா னென்பா னதுவிதுவா மென்று
மறந்துசங் கற்பம் வர. 79

(ப—ரை) (1) பாவிப்போன் = பாவனை செய்பவன், சீவன் = ஜீவனும், பயில் = பழகிய, வாதனை = வாசனையானது, மனமாம், சீவிப்பவன் = மேலும் அச்சீவன் ஜீவிப்பவனெனவும் சொல்லப்படும்,

மனனம் செய்வது (ஏ) = இன்னும் மனமானது மனனம் செய்வது என்றும் சொல்லப்படும், தேவை = தெய்வத்தை, அறிந்திலன் யான் = நான் அறியேன், என்பான் = என்று சொல்வான், (3) அது இது ஆம் என்று = அப்படிப்பட்டது இப்படிப்பட்டது எனப் பலவிதமாக (2) மறந்து = பின்னும் அச்சீவன் தன்னை மறந்து, (4) சங்கற்பம், வர = உண்டாக. (ஏ—அசை.)

(பொ—ரை) பாவனை செய்பவன் ஜீவனும். பழகிய வாசனையானது மனமாம். மேலும் அச்சீவன் ஜீவிப்பவனெனவும் சொல்லப்படும். இன்னும் மனமானது மனனம் செய்வது என்றும் சொல்லப்படும். பின்னும் அச் சீவன் தன்னை மறந்து அப்படிப் பட்டது இப்படிப்பட்டது எனப் பலவிதமாகச் சங்கற்பம் உண்டாகத் தெய்வத்தை நான் அறியேன் என்று சொல்வான்.

அகந்தை மனம்புத்தி யைம்புலனுஞ் சீவ
னுகந்தபுரி யட்டகமா வுற்று—மிகுந்த
கனவிற் கனவாகக் காண்பதுபோற் காணும்
வினவிற் சகம்பல் விதம். 80

(ப—ரை) (3) அகந்தை = அகங்காரம், மனம், புத்தி = புத்தியையும், ஐம்புலனும் = ஐம்புலனையும், (2) ஜீவன் = ஜீவனானவன், (4) உகந்த = பிரியமான, புரியட்ட காயம் ஆ = புரியஷ்டகம் என்கிற சூக்ஷ்ம சரீரமாக, உற்று = கொண்டு, மிகுந்த, கனவில் கனவு ஆக = கனவிலே வேறு ஒரு கனவு காண்பது போல் (7) காணும் = காண்பான், (1) வினவில் = விசாரிக்குமிடத்து, (6) சகம் = உலக விவகாரங்கள், பல்விதம் = பலவிதமாக.

(பொ—ரை) விசாரிக்குமிடத்து ஜீவனானவன் அகங்காரம், மனம், புத்தியையும், ஐம்புலனையும், பிரியமான புரியஷ்டகாயம் என்கிற சூக்ஷ்ம சரீரமாகக் கொண்டு, மிகுந்த கனவிலே வேறொரு கனவு காண்பது போல, பலவிதமாக உலக விவகாரங்களைக் காண்பான்.

## கலி விருத்தம்

உள்ளந் தேயுசு வோடு விருத்தியாக்
கொள்ளு மந்தக் கரணங் குறிப்பினுற்
றள்ள காரண மாய்ச்சம் சயத்தன்மை
யுள்ள சங்கற்ப ஞான முறுமனம். 81

(ப—ரை) (2) உள்ளம்=உள்ளம் எனவும், தேயுசு ஓடு= தேஜசு எனவும், விருத்தி ஆ=விருத்தி எனவும், கொள்ளும்= வைத்து சொல்லப்படும், (1) அந்தக் கரணம் = அந்தக் கரணமானது, (3) குறிப்பினுல், தள் = தள்ளத்தக்க, அகாரணமாய் = காரணமற்றதாய், சம்சயத் தன்மை=சந்தேக சுபாவம், உள்ள, சங்கற்ப ஞானம் = சங்கற்ப உணர்ச்சியே, உறுமனம்=பொருந்திய மனமாம், தேயிசு = தேஜசு, ஞானம்= அறிவே.

(பொ—ரை) அந்தக் கரணமானது உள்ளம் எனவும், தேஜசு எனவும், விருத்தி எனவும் வைத்துச் சொல்லப்படும். குறிப்பினுல் தள்ளத்தக்க காரணமற்றதாய் சந்தேக சுபாவம் உள்ள சங்கற்ப உணர்ச்சியே பொருந்திய மனமாம்.

உறுதித் தன்மை யுடனிச் சயவுருப்
பெறுசங் கற்பஞா னம்பிறழ் புத்தியா
நெறிமுக் கால நிகழ்நடை பற்றியுட்
செறிய யோசிக்குஞ் சங்கற்பஞ் சித்தமே. 82

(ப—ரை) உறுதித் தன்மையுடன், நிச்சய உரு = நிச்சயமான வடிவத்தை, பெறு=பெறுகின்ற, சங்கற்ப.ஞானம்= சங்கற்ப உணர்வு, பிறழ் = விளங்குகிற, புத்தியாம், நெறி = கிரமமாக,முக்காலம்=மூன்று காலமும்,நிகழ்=விளங்க வேண்டிய, நடை பற்றி=ஒழுங்கைப் பொருந்தி, உள்=உள்ளத்தில், செறிய= அழுந்த, யோசிக்கும், சங்கற்பம், சித்தமாகும்.

(ஏ—அசை.)

(பொ—ரை) உறுதித் தன்மையுடன் நிச்சயமான வடிவத்தைப் பெறுகின்ற சங்கற்ப உணர்வே விளங்குகிறபுத்தியாம். கிரமமாக மூன்று காலமும் விளங்க வேண்டிய ஒழுங்கைப் பொருந்தி, உள்ளத்தில் அழுந்த யோசிக்கும் சங்கற்பம் சித்தம் ஆகும்.

சித்தி யாமெனச் செய்தொழில் யாவையு
மொத்து நின்றபி மானித் தொழிவற
நித்த நானிதா னிக்கவல் லேனெனு
நத்து சங்கற்ப ஞான மகந்தையே. 83

(ப—ரை) சித்தி ஆம் என = சித்திக்குமென்று, செய் தொழில்யாவையும், (3) ஒத்து நின்று = எண்ணிக் கொண்டு. (6) அபிமானித்து, (5) ஒழிவு அற = ஒழியாமல், (4) நித்தம் = எப்போதும், (7) நான், நிதானிக்க, வல்லேன் எனும் = கூடிய சமர்த்தன் என்கிற, நத்து = விரும்பப்படுகின்ற, சங்கற்ப ஞானம் = சங்கற்ப உணர்ச்சியே, அகந்தை (ஏ) = அகங்காரமாம்.

(பொ—ரை) செய் தொழில் யாவையும் சித்திக்கும் என்று எண்ணிக் கொண்டு எப்போதும் ஒழியாமல் அபிமானித்து, நான் நிதானிக்கக் கூடிய சமர்த்தன் என்கிற விரும்பப்படுகின்ற சங்கற்ப உணர்ச்சியே அகங்காரமாம்.

எழுசீர் விருத்தம்

சகல கேள்விக்கு மிடமிது கொடுத்துத்
தரித்திடுந் தேயுசு மனந்தான்
மிகவலைந் துழலும் புத்தியே விளக்கு
வித்திடுஞ் சித்தமே விடயத்
தகமுறப் பற்றி யிழுக்குமாற் கடின
மாவகங் காரநா னென்றே
யிகலினு லபிமா னிக்குமிவ் வைந்து
மியலந்தக் கரணமா மன்றே. 84

(ப—ரை) (2) சகல கேள்விக்கும் இடம் (அது) கொடுத்து தரித்திடும், (1) தேயுசு = உள்ளமானது, (3) மனம் (தான்) = மனம் என்பது, மிக அலைந்து உழலும், புத்தி (ஏ) விளக்கு வித்திடும் = விளக்கிக் காட்டும், சித்தம் (ஏ), விடயத்து அகம்= விஷயத்தின் இடத்து, உறப்பற்றி=நன்றாக அழுந்தி, இழுக்கும் (ஆல்)=அதை இழுக்கும், (5) கடினம் (ஆ) = கடினமாக, (4)அகங்காரம், (6) நான் என்று (ஏ), இகலினால்=வலிமையால், அபிமானிக்கும், இவ்வைந்தும், இயல் = பொருந்திய, அந்தக் கரணம் ஆம் (அன்று ஏ)=அந்தக்கரணங்கள் ஆகும்.

எது—பகுதிப்பொருள் விகுதி,

அன்று, ஏ, ஏ, ஏ, ஏ, ஆல், தான்—அசைகள்.

(பொ—ரை) உள்ளமானது சகல கேள்விக்கும் இடம் கொடுத்துத் தரித்திடும். மனமென்பது மிக அலைந்து உழலும். புத்தி விளக்கிக் காட்டும். சித்தம் விஷயத்தினிடத்து நன்றாக அழுந்தி அதையிழுக்கும். அகங்காரம் கடினமாக நான் என்று வலிமையால் அபிமானிக்கும். இவ்வைந்தும் பொருந்திய அந்தக்கரணங்கள் ஆகும்.

### ஆசிரிய விருத்தம்

எறியகங் காரமுத லியவனைத் தையும்விருத்
   தியினேக தேசத்தினு
   லிவணடங் கித்தோற்று விக்கின்ற
   உள்ளத்தி னிற்பிரதி பிம்பத்தொளி
ரறிவிதய மாங்கற்ப னுவிருத் தியினு
   லலர்ந்துவரு நாமரூப
   மானகற் பிதவிர்த்தி யிற்பிரதி விம்பிக்கு
   மலகில்சை தன்யமனமாஞ்
செறியுமெவ் விர்த்திசம் பந்தத்தி னுலிவன்
   சேதன னெனப்படுவனே
   திகழுமவ் விர்த்தியிற் பிரதிவிம் பித்திடச்
   சீர்கொள்சஞ் ஞானமாகும்

பிறிதிலவு கிகசூக்க வத்துவிட யமதான
பினமுறு விருத்தியதனிற்
பிரதிவிம் பிக்கவிஞ் ஞானமது
வாமெனப் பேசுநான் மறைகள்மாதோ. 85

(ப—ரை) (1) எறி=வீசுகின்ற, அகங்காரம் முதலிய அனைத்தையும், விருத்தியின் = நினைப்பின், ஏக தேசத்தினால், இவண் = இவ்விடத்தில், அடக்கித் தோற்றுவிக்கின்ற உள்ளத்தினில் பிரதி பிம்பத்து, ஒளிர்=பிரகாசிக்கின்ற, அறிவு = அறிவே, இதயம் ஆம், கற்பனா விருத்தியினால், அலர்ந்துவரு = விளங்கித் தோற்றுகிற, நாமரூபமான, கற்பித விருத்தியில் பிரதி பிம்பிக்கும்,அலகில்=குற்றமற்ற,சைதன்யம்=அறிவே,மனம்ஆம், செறியும் = பொருந்திய, எவ்விர்த்தி = எந்த விர்த்தியின் சம்பந்தத்தினால், இவன்=இச்சீவன், சேதனன்=ஞான சொரூபி, எனப்படுவனே = என்று சொல்லப்படுவானே, திகழும் = விளக்கமான,அவ்விர்த்தியில்=அந்தநினைவில், பிரதிபிம்பத்திட = அறிவானதுபிரதிபிம்பிக்க அது, சீர்கொள்=சிறப்புற்ற, சஞ்ஞானம் ஆகும் = சம் ஞானம் என்று சொல்லப்படும், பிறிது=வேறான, இலவுகிக = லோக சம்பந்தமாகிய, சூக்கவத்து விடயம் (அது, ஆன)=சூக்ஷ்ம வஸ்து விஷயமான, பினமுறு விருத்தியதனில் = பேதமாகிய நினைப்பில்,பிரதிவிம்பிக்க=அறிவானது பிரதிபிம்பிக்க, விஞ்ஞானம் அது ஆம்=அது விஞ்ஞானம் ஆம் (3) என=என்று, பேசும் = சொல்லும், (2) நால் மறைகள் (மாதோ) = நான்கு வேதங்களும்.

(மாதோ—அசை. அது—பகுதிப் பொருள் விகுதி.)

(பொ—ரை) வீசுகின்ற அகங்காரம்முதலிய அனைத்தையும் நினைப்பின், ஏகதேசத்தினால் இவ்விடத்தில் அடக்கித் தோற்றுவிக்கின்ற உள்ளத்தினில் பிரதிபிம்பித்துப் பிரகாசிக்கின்ற அறிவே இதயமாம். கற்பனாவிர்த்தியினால் விளங்கித் தோற்றுகிற நாமரூபமான கற்பித விருத்தியில் பிரதிபிம்பிக்கும் குற்றமற்ற அறிவே மனமாம். பொருந்திய எந்த விருத்தியின் சம்பந்தத்தினால் இச் சீவன் ஞான சொரூபி என்று சொல்லப்படுவானே விளக்கமான அந்த நினைவில் அறிவானது பிரதிபிம்பிக்க அது

சிறப்புற்ற சம்ஞானம் என்று சொல்லப்படும், வேறான லோக சம்பந்தமாகிய சூக்ஷம வஸ்து விஷயமான பேதமாகிய நினைப்பில் அறிவானது பிரதிபிம்பிக்க அது விஞ்ஞானமாம் என்று நான்கு வேதங்களும் சொல்லும்.

பிரிவின்முக் காலமுணர் விர்த்தியிற் பிரதிவிம்
பித்திடச் சைதன்னியம்
பிரஞான மாஞ்ஞான விருத்தியிற்
பிரதிவிம் பித்துலவ வாஞ்ஞானமாந்
தெருள்கலைத் தாரணா சாமர்த்ய முடையவிர்த்
தியிற்பிரதி விம்பித்திடத்
திகழ்மேதை யென்பர்கண் வழியாக்
கடம்படா தியவடிவ மாய்ப்பரிணமித்
திருமையாம் விர்த்தியிற் பிரதிவிம் பித்திட
வியைந்தகண் ணென்பர்தேகேந்
திரியாதி தாரணா சாமர்த்ய
மாம்விர்த்தி யிற்பிரதி விம்பித்திடத்
திருதியா மிப்பொருளின் வண்ணமே யென்றவத்
தியவஸா யவிருத்தியிற்
றிகழ்வுறப் பிரதிவிம் பித்திடக்
கிருதென்று செப்புமப் பெயர்மேவுமே. 86

(ப—ரை) (2) பிரிவில் = பேதமாக, முக்காலமுணர் = மூன்று காலத்தையும் அறிகின்ற, விர்த்தியில், பிரதிவிம்பித்திட = பிரதிபிம்பிக்க அது, (1) சைதன்னியம்=அறிவானது, (3) பிரஞானம்=பிரஞானம் எனப்படும், ஆஞ்ஞான விருத்தியில், பிரதிபிம்பித்து = அறிவானது பிரதிபிம்பித்து, உலவ=விளங்க, ஆஞ்ஞானமாம் = அது ஆஞ்ஞானம் எனப்படும், தெருள் = தெளிந்த, கலை=சாஸ்திரங்களின், தாரணா சாமர்த்தியம், உடை= உடைய, விர்த்தியில், பிரதிபிம்பித்திட = அறிவானது பிரதிபிம்பிக்க அதை, திகழ்=விளங்குகின்ற, மேதை, என்பர்= என்று சொல்வார்கள், கண்வழியாக=கண்ணின் வழியாக,

கடம்படாதிய = கடம் படம் முதலிய, வடிவமாய் பரிணமித்து= வடிவமாகத் தோன்றி, இருமையாம்=பேதமான, விர்த்தியில், பிரதிபிம்பித்திட=பிரதிபிம்பிக்க, அதை, இயைந்த=பொருந்திய, கண் என்பர்=கண் என்று சொல்லுவார்கள், தேகேந்திரியாதி தாரண சாமர்த்தியமாம் விர்த்தியில், பிரதிவிம்பித்திட= அறிவானது பிரதிபிம்பிக்க, திருதியாம் = அது திருதி என்று சொல்லப்படும்,இப்பொருள்=இந்த வஸ்து, இவ்வண்ணமே= இந்த விதமேயாம் என்ற அத்தியாவசிய விருத்தியில், திகழ்வுற= நன்ருக, பிரதிவிம்பித்திட = அறிவானது பிரதிபிம்பிக்க அது, கிருது என்று, செப்பும்=சொல்லப்படும், அப்பெயர் மேவும்(ஏ)= அப்பெயரே அடையும்.

(ஏ—அசை.)

தாரண சாமர்த்தியம்=சித்தத்தில் தரிக்கும் ஞாபக சக்தி.

(பொ—ரை) அறிவானது பேதமாக மூன்று காலத்தையும் அறிகின்ற விர்த்தியில் பிரதிபிம்பிக்க அது பிரஞானம் எனப்படும். ஆஞ்ஞான விர்த்தியில் அறிவானது பிரதிவிம்பித்து விளங்க அது ஆஞ்ஞானம் எனப்படும். தெளிந்த சாஸ்திரங்களின் தாரண சாமர்த்தியமுடைய விர்த்தியில் அறிவானது பிரதிபிம்பிக்க அதை விளங்குகின்ற மேதை என்று சொல்வார்கள். கண்ணின் வழியாகக் கடம் படம் முதலிய வடிவமாகத் தோற்றி பேதமான விர்த்தியில் பிரதிபிம்பிக்க அதைப் பொருந்திய கண் என்று சொல்வார்கள். தேகேந்திரியாதி தாரண சாமர்த்தியமாம் விர்த்தியில் அறிவானது பிரதிபிம்பிக்க அது திருதி என்று சொல்லப்படும். இந்த வஸ்து இந்த விதமேயாம் என்ற அத்தியாவசிய விருத்தியில் நன்ருக அறிவானது பிரதிபிம்பிக்க அது கிருது என்று சொல்லப்படும் அப்பெயரேயடையும்.

ஒருபொருளி னனுபவ விருத்தியை மறந்துறினு
முற்றதை வெளிப்படுத்தற்
குறுதிறம தாம்விர்த்தி யிற்பிரதி
விம்பிக்க உயர்மிருதி யென்னலாகும்

பிரிவுற்ற பொருள்களுடை யனுபவந் தனையிட்ட
பெயருருக் கற்பித்திடப்
பிறழ்வலிய தாய்நின்ற கற்பனு
விர்த்தியிற் பிரதிவிம் பித்திடுங்கால்
விரவுசங் கற்பமா மென்பரரு குற்றமலர்
விரைமாலை சந்தமுதலாம்
விடயவிச் சாவிர்த்தி யிற்பிரதி
விம்பிக்க மேவுறும் வசமென்பரா
லிருமையுறு தூரத் திருக்கின்ற தாம்விடய
விச்சா விருத்தியதனி
லினிதுபதி விம்பித் திடக்காம
மதுவென்ப ரிங்குசை தன்யமதையே. 87

(ப—ரை) ஒரு பொருளின் = ஒரு வஸ்துவின், அனுபவ, விருத்தியை = நினைவை, மறந்து உறினும் = மறந்திருந்தாலும், உற்று அதை = பொருந்தி அவ்வனுபவ நினைவை, வெளிப்படுத்தற்கு, உறு = தகுந்த, திறம் (அது) ஆம் = தன்மையுடையதாகிய, விர்த்தியில், பிரதிவிம்பிக்க = அறிவானது பிரதிவிம்பிக்க, அது, உயர்மிருதி என்னல் ஆகும் = உயர்ந்த ஸ்மிருதி என்று சொல்லப்படும், பிரிவுற்ற = பேதமான, பொருள்களுடை = வஸ்துக்களுடைய, அனுபவம் தனையிட்ட = அனுபவத்திற்கு ஏற்பட்ட, பெயர் உறு = நாம ரூபத்தை, கற்பித்திட, பிறழ் = விளங்கும், வலியதாய் நின்ற = வல்லமையுடையதான, கற்பனு விர்த்தியில், பிரதிவிம்பித்திட = அறிவானது பிரதிபிம்பிக்க, அதை, விரவு = கலக்கின்ற, சங்கற்பம் ஆம் என்பர், அருகு உற்ற மலர் = சமீபமான புஷ்பத்தின், விரை = வாசனை பொருந்திய, மாலை, சந்தம் = சந்தனம், முதலாம் = முதலாகிய, விடய = விஷய, இச்சா விர்த்தியில் பிரதிவிம்பிக்க = அறிவானது பிரதிபிம்பிக்க அதனை, மேவுறும் = விளங்குகின்ற, வசம் என்பர் (ஆல்) = வசம் என்று சொல்வார்கள், (3) இருமையுறு = பெரிதான, தூரத்து = தூரத்தில், இருக்கின்றதாம் = இருக்கின்றதாகிய, விடய = விஷய, இச்சா விருத்தியதனில் = இச்சாவிருத்தியில், இனிது = நன்றாக,

பதிவிம்பித்திட = பிரதிபிம்பிக்க, (5) காமம் அது என்பர், (2) இங்கு = இவ்வுலகில், (4) சைதன்யம் அதை (ஏ) = அந்த அறிவை.

(ஆல், ஏ—அசைகள். அது—பகுதிப்பொருள் விகுதி)

(பொ—ரை) ஒரு வஸ்துவின் அனுபவ நினைவை மறந்திருந்தாலும் பொருந்திய அவ்வனுபவ நினைவை வெளிப் படுத்தற்குத் தகுந்த தன்மையுடையதாகிய விர்த்தியில் அறிவானது பிரதிபிம்பிக்க, அது உயர்ந்த ஸ்மிருதி என்று சொல்லப்படும். பேதமான வஸ்துக்களுடைய அனுபவத்திற்கு ஏற்பட்ட நாமரூபத்தைக் கற்பித்திட விளங்கும் வல்லமை யுடையதான கற்பனு விர்த்தியில் அறிவானது பிரதிபிம்பிக்க அதைக் கலக்கின்ற சங்கற்பம் ஆம் என்பர். சமீபமான புஷ்பத்தின் வாசனை பொருந்திய மாலை, சந்தனம் முதலாகிய விஷய இச்சாவிர்த்தியில் அறிவானது பிரதிபிம்பிக்க அதனை விளங்குகின்ற வசம் என்று சொல்வார்கள். இவ்வுலகில் பெரிதான தூரத்தில் இருக்கிறதாகிய விஷய இச்சாவிருத்தியில் நன்ருகப் பிரதிபிம்பிக்க அந்த அறிவைக் காமம் என்பர்.

## எழுசீர் விருத்தம்

பம்புநோய் முதலாற் றுக்கிநா னென்ற
பாவனு விருத்தியிற் பிரதி
விம்பமா மறிவு சூதியா மென்று
மேல்வரு மவைகளேத் தானே
வம்பென விடயீ கரித்திடும் விருத்தி
மதியதா மனவழிச் செல்லாத்
தம்பமாம் விர்த்தி மனீடையா மெனவுந்
தனிமறை நூன்மொழி தருமே. 88

(ப—ரை) பம்பு = நெருங்கிய, நோய் முதலால் = வியாதி முதலியவைகளால், துக்கி நான் என்ற = நான் துக்கத்தை உடையவன் என்ற, பாவனுவிருத்தியில், பிரதிவிம்பம் ஆம் அறிவு,

சூதி ஆம் என்றும், மேல் வரும் அவைகளைத்(தானே)=இனிமேல் வரும் காரியங்களை, வம்பு என=புதிது என்று, விடயீகரித்திடும்= அனுபவிக்கும், விருத்தி = விருத்தியானது, மதி (அது) ஆம்= மதியாம் எனவும், மனவழி=மனத்தின் போக்கிலே, செல்லா= செல்லா, தம்பம் ஆம் = தூண்போல் ஸ்திரமான, விருத்தி= விருத்தியானது, மனீடை ஆம் எனவும், தனி=ஒப்பற்ற, மறை நூல்=வேத சாஸ்திரங்கள், மொழிதரும் (ஏ) = சொல்லும் தான்.

(ஏ, ஏ—அசைகள். அது—பகுதிப்பொருள் விகுதி)

(பொ—ரை) நெருங்கிய வியாதி முதலியவைகளால் நான் துக்கத்தையுடையவன் என்ற பாவனுவிருத்தியில் பிரதிவிம்பம் ஆம் அறிவு சூதி ஆம் என்றும், இனிமேல் வரும் காரியங்களைப் புதிது என்று அனுபவிக்கும் விருத்தியானது மதியாம் எனவும், மனத்தின் போக்கிலே செல்லாத தூண் போல் ஸ்திரமான விருத்தியானது மனீடையாம் எனவும் ஒப்பற்ற வேத சாஸ்திரங்கள் சொல்லும்.

## பன்னிரு சீர் ஆசிரிய விருத்தம்

பரதார வேட்பிரா கந்தனக் கிடர்பிறர்
பணிற்பதி லெனுந் துவேஷம்
பாரிபொன் ஞுதிமிக வேண்டல்காமந்தன்
பயன்தடுத் தோரைவெகுள
லுரைகுரோ தந்தனது பொருள்பிறர்க் குதவா
துலோபமதை நோக்கியுஞ்சார்
வுற்றனு பவித்துமகிழ் வதுமோகமைஸ்வரிய
மோங்கத் தகாத தகுவ
தெரியாது மதமொருவர் சுகமுறல் சகிக்காத
செயன்மச் சரந்தனதிடர்
சேரப் பிறர்க்கெண்ண லீரிகைஷதனின்பந்
திகழ்ந்தபிறர் பாற்பொ ருமை

வருகுவ தகூயைதன் றருமமன் னியர்புகழ
மகிழ்விடம் பந்தனக்கே
மாசெல்வ மெனறர்ப்ப மென்சக்தி
பார்யான் மகானெனை லகங்காரமே 69

(ப—ரை) பரதார வேட்பு = அன்னியர் மனைவியின் இச்சை, இராகம்=இராகமாம்; தனக்கு, இடர் = துன்பத்தை, பிறர்=அன்னியர், பணில் = செய்தால், பதில்= அதற்குப்பதில் துன்பத்தைச் செய்யவேண்டுமென்று,எணும் = நினைக்கும் நினைவு, துவேஷம் = துவேஷமாம்; பாரி = மனைவியர், பொன் ஆதி= திரவிய முதலியவற்றை, மிக வேண்டல் = மிகுதியாக வேண்டுதல், காமம் = காமமாம்; தன் பயன் = தனது பிரயோசனத்தை, தடுத்தோரை, வெகுளல் = கோபித்தல், உரை = சொல்லப்படுகிற, குரோதம் = குரோதமாம்; தனது, பொருள்= பொருளை, பிறர்க்கு, உதவாது = உதவாத குணம், லோபம்= உலோபமாம்; அதை = அப்பொருளை, நோக்கியும்=பார்த்தும், சார்வுற்று = அடைந்தும், அனுபவித்து மகிழ்வது, மோகம்= மோகமாம்; ஐஸ்வரியம் = செல்வம், ஓங்க = பெருக, தகாத= தகாதவைகளையும், தகுவ = தகுந்தவைகளையும், தெரியாது = நிதானிக்காத குணம், மதம்=மதமாம்; ஒருவர் = வேறொருவர், சுகம் உறல்=சுகம் அடைதலை, சகிக்காத, செயல் = குணம், மச்சரம்=மச்சரமாம்; தனது, இடர்=துன்பம், சேர பிறர்க்கு= பிறர்க்கு உண்டாக, எண்ணல் = நினைத்தல், ஈரிஷை = ஈரிஷையாம்; தன் இன்பம் = தன்னைப்போல சுகம், திகழ்ந்த = அடைந்த, பிறர்பால் = பிறரிடத்து, பெருமை, வருகுவது = கொள்வது, அசூயை = அசூயையாம்; தன் தருமம் = தான் செய்யும் தருமத்தை, அன்னியர் புகழ, மகிழ்வு=தான் மகிழ்வது,இடம்பம்=இடம்ப குணமாம்; தனக்கே, மாசெல்வம்=பெருஞ்செல்வம், உண்டு எனல்=என்று நினைத்தல், தர்ப்பம் = தர்ப்பமாம்; என் சக்தி=எனது சக்தியை, பார், யான்=நானே, மகான் எனல்=பெரியவன் என்று சொல்லுதல், அகங்காரம்(ஏ)=அகங்காரமாம்.

(பணில்—பண்ணில் என்பதன் இடைக்குறை. ஏ—அசை)

(பொ—ரை) அன்னியர் மனைவியின் இச்சை இராகமாம். தனக்குத் துன்பத்தை அன்னியர் செய்தால் அதற்குப் பதில் துன்பத்தைச் செய்ய வேண்டுமென்று நினைக்கும் நினைவு துவேஷமாம். மனைவியர், திரவியம் முதலியவற்றை மிகுதியாக வேண்டுதல் காமமாம். தனது பிரயோசனத்தைத் தடுத்தோரைக் கோபித்தல் சொல்லப்படுகின்ற குரோதமாம். தனது பொருளைப் பிறர்க்கு உதவாத குணம் உலோபமாம். அப்பொருளைப் பார்த்தும் அடைந்தும், அனுபவித்து மகிழ்வது மோகமாம். செல்வம் பெருக தகாதவைகளையும், நிதானிக்காத குணம் மதமாம். வேறொருவர் சுகம் அடைதலைச் சகிக்காத குணம் மச்சரமாம். தனது துன்பம் பிறர்க்கு உண்டாக நினைத்தல் ஈரிஷையாம். தன்னைப் போல சுகம் அடைந்த பிறரிடத்துப் பொருமை கொள்வது அசூயையாம். தான் செய்யும் தருமத்தை அன்னியர் புகழத்தான் மகிழ்வது இடம்ப குணமாம். தனக்கே பெரும் செல்வம் உண்டு என்று நினைத்தல் தர்ப்பமாம். எனது சக்தியைப் பார் நானே பெரியவன் என்று சொல்லுதல் அகங்காரமாம்.

(இவை பதிமூன்றும் தள்ளத்தக்க தீய குணங்கள்).

### அறுசீர் விருத்தம்

பக்தியே சிரத்தை சாந்தம்
பகர்ந்திடும் விவேக மாதி
சத்துவ குணத்தின் செய்கை
தகவிலாக் குரோதங் காம
மெய்த்திடு முலோப மென்ப
விர்சத குணமே சோம்ப
னித்திரை மயக்க மாதி
நேர்ந்ததா மதகு ணந்தான். 90

(ப—ரை) பத்தி (ஏ), சிரத்தை = விசுவாசம், சாந்தம், பகர்ந்திடும் = சொல்லப்படுகின்ற, விவேகம், ஆதி = முதலியவை, சத்துவ குணத்தின், செய்கை = செயலாம், தகவிலா = பெருமையற்ற, குரோதம் = கோபம், காமம் = ஆசை, எய்த்திடும் = மனம் இளைத்துப் போகிறதற்குக் காரணமாகிய, உலோபம்,

என்ப=என்பன முதலியவைகள், இராசத குணமாம், சோம்பல், நித்திரை, மயக்கம், ஆதி = முதலியன, நேர்ந்த=பொருந்திய, தாமத குணம் (தான்) = தாமத குணமாம்.

(ஏ, ஏ—அசைகள். தான்—சாரியை)

(பொ—ரை) பக்தி, விசுவாசம், சாந்தம், சொல்லப்படுகின்ற விவேகம் முதலியவை சத்துவ குணத்தின் செயலாம். பெருமையற்ற கோபம், ஆசை, மனம் இளைத்துப் போகிறதற்குக் காரணமாகிய உலோபம் என்பன முதலியவைகள் இராசத குணமாம். சோம்பல், நித்திரை, மயக்கம் முதலியன பொருந்திய தாமத குணமாம்.

### கலி விருத்தம்

பளிக்கி ஞடிப் பதிவிம்ப வெய்யிலும்
வெளிச்சு பாவ வெயிலு மொருசுவர்
விளக்கி னுலென மெய்யுணர் வோடுயிர்
தளிர்த்தொன் ருயோர் தனுவை யறியுமால். 91

(ப—ரை) பளிக்கின்=பளிங்காகிய, ஆடி=கண்ணுடியில், பிரதிவிம்பம் = பிரதிவிம்பமான, வெய்யிலும், வெளி= வெளியிலுள்ள, சுபாவ வெயிலும், ஒரு சுவர் = ஒரு சுவரையே, விளக்கினுலென=விளக்குதல் போல, மெய்யுணர்வோடு=மெய் ஞானவடிவமான கூடஸ்தரும், உயிர் = ஜீவனும், தளிர்த்து, செவ்வையாக, ஒன்ருய்=ஒன்ருகி, ஓர் தனுவை=ஓர் சரீரத்தை, அறியும் (ஆல்). (ஆல்—அசை)

(பளிக்கின்—பளிங்கின் என்பதன் வலித்தல் விகாரம்).

(பொ—ரை) பளிங்காகிய கண்ணுடியில் பிரதிபிம்பமான வெய்யிலும் வெளியிலுள்ள சுபாவ வெய்யிலும் ஒரு சுவரையே விளக்குதல் போல மெய்ஞ்ஞான வடிவமாகிய கூடஸ்தரும் ஜீவனும் செவ்வையாக ஒன்ருகி ஒரு சரீரத்தை அறியும்.

## எழுசீர் விருத்தம்

கடமென வறிந்த வுடன்சிதா பாசன்
கழியுமால் விருத்தியிற் றன்னை
விடவுணர் வொன்றவ் வவசர மிலதாய்
விருத்திமுன் னறிபடா ததையோர்ந்
திடுமுணர் வதுவே விருத்தியின் பின்னோர்ந்
திடப்பட்ட தென்பதும் விளக்கு
மடைவினு லிருகா லத்தினுங் கடத்தை
யறிந்தவர் கூடத்தர் தாமே. 92

(ப—ரை) கடம் என = இது கலசம் என்று, அறிந்தவுடன் = அறிந்தபோதே, சிதாபாசன் = சித்தைப் போல் இருக்கும் ஜீவன், கழியும் (ஆல்) = ஒழியும், விருத்தியில், தன்னைவிட, உணர்வு ஒன்று = ஒரு அறிவு, அவ் அவசரம் = அந்தச் சமயத்தில், இலதாய் = இல்லாததாகி, விருத்திமுன் = விருத்தி உண்டாவதற்கு முன்னர், அறிபடாததை = அறியப்படாததை, ஓர்ந்திடும் = அறியும், உணர்வு அது (ஏ) = அறிவே, விருத்தியின் பின், ஓர்ந்திடப்பட்டதென்பதும் = அறியப்பட்டதென்பதையும், விளக்கும் = விளக்குகின்ற, அடைவினுல் = கிரமத்தினுல், இரு காலத்திலும் = இரண்டு காலந்திலும், கடத்தை அறிந்தவர், கூடத்தர் தாம் (ஏ) = கூடஸ்தரே.

(ஆல்—அசை. தாம்—சாரியை. ஏ, ஏ—தேற்ற ஏகாரம்)

(பொ—ரை) இது கலசம் என்று அறிந்தபோதே சித்தைப் போலிருக்கும் ஜீவன் ஒழியும். விருத்தியில் தன்னைவிட ஒரு அறிவு அந்தச் சமயத்தில் இல்லாததாகி விருத்தி உண்டாவதற்கு முன் அறியப்படாததை அறியும் அறிவே விருத்தியின் பின் அறியப்பட்டதென்பதையும் விளக்குகின்ற கிரமத்தினுல் இரண்டு காலத்திலும் கடத்தை அறிந்தவர் கூடஸ்தரே.

### அறுசீர் விருத்தம்

கடங்கண்மாத் திரமே காண்போன்
கவல்சிதா பாச னன்னோ
னுடன்கடம் விருத்தி மூன்று
முணர்பவன் கூடத் தன்கா
ணொடுங்கிய கனாந னாவி
னுள்வெளிப் பிரபஞ் சங்கண்
மிடைந்துகற் பித்த தாங்கு
விரவிய புத்தி தானே. 93

(ப—ரை) கடங்கள் மாத்திரம் (ஏ) காண்போன் = கடங்களை மாத்திரம் காண்பவன், கவல் = வருந்துகின்ற, சிதாபாசன்=ஜீவன், அன்னோன் உடன் = அந்த ஜீவனுடன், கடம், விருத்தி = நினைவு ஆகிய, மூன்றும் = மூன்றையும், உணர்பவன் = அறிகிறவன், கூடத்தன் காண் = கூடஸ்தனும், ஒடுங்கிய = வசமற்ற, கனா= சொற்பனத்திலும், நனா= சாக்கிரத்திலும், உள்வெளிப் பிரபஞ்சங்கள் = உட் பிரபஞ்சத்தையும்; வெளிப் பிரபஞ்சத்தையும், மிடைந்து = சேர்ந்து, கற்பித்தது (ஆங்கு), விரவிய = கலந்த, புத்தி தான் (ஏ)= புத்தியே, (காண்—முன்னிலை அசை, ஆங்கு—அசை.)
(தான்—சாரியை, ஏ—அசை.)

(பொ—ரை) கடங்களை மாத்திரம் காண்பவன் வருந்துகின்ற ஜீவன். அந்த ஜீவனோடு கடம், நினைவு, ஆகிய மூன்றையும் அறிகிறவன் கூடஸ்தனும். வசமற்ற சொப்பனத்திலும் சாக்கிரத்திலும் உட் பிரபஞ்சத்தையும் வெளிப் பிரபஞ்சத்தையும் சேர்ந்து கற்பித்தது கலந்த புத்தியே.

### கலி விருத்தம்

நயவுயிர்க் குறுங்கட ஞானங் கூடத்தற்
குயர்கடோ விருத்தியி னுடைய ஞானமா
மயர்கட மெனவறிந் தாங்க ணைந்தவன்
குயிலுயிர் கண்டவன் கூடத் தன்னரோ. 94

(ப—ரை) நய உயிர்க்கு=நல்ல ஜீவனுக்கு, (3) உறும்= உண்டாகும், (2) கடஞானம், (4) கூடத்தற்கு=கூடஸ்தனுக்கு, உயர்=உயர்ந்த, கடோ விருத்தியின் உடைய=கடவிருத்தியின், ஞானம், ஆம்=உண்டாகும், அயர்=தேய்கின்ற, கடம் என, அறிந்தாங்கு = அறிந்த அவ்விடத்தில், அணைந்தவன் = சேர்ந்தவன், குயில் = சொல்லப்படுகிற, உயிர் = ஜீவனும், கண்டவன் = அறிந்தவன், கூடத்தன் (அரோ)=கூடஸ்தனும்.

(அரோ—அசை)

(பொ—ரை) நல்ல ஜீவனுக்குக் கடஞானம் உண்டாகும். கூடஸ்தனுக்கு உயர்ந்த கடவிருத்தியின் ஞானம் உண்டாகும். தேய்கின்ற கடம் என அறிந்த அவ்விடத்தில் சேர்ந்தவன் சொல்லப்படுகிற ஜீவனும்; அறிந்தவன் கூடஸ்தனும்.

தீது நன்கு செயின்மன மெய்மொழி
யீதெ னுதென் றிசைபொய் யறிவுயிர்
ஓது மின்ன துணர்ந்தமெய்ச் சாட்சியாம்
போத வான்மாப் புரிகில தொன்றுமே. 95

(ப—ரை) (2) தீது நன்கு=தீமை அல்லது நன்மையை, செயின் = செய்தால், (1) மனம், சரீரம், வாக்கு என்பன, (3) ஈது=இது, எனுது = எனது, என்று, இசை = சேர்கின்ற, பொய் அறிவு, உயிர் = ஜீவனும், ஓதும் = சொல்லப்படுகின்ற, இன்னது = இத்தன்மையை, உணர்ந்த = அறிந்த, மெய் சாட்சியாம்= உண்மையான சாட்சியாகிய, போத=ஞான வடிவ, ஆன்மா = ஆத்மா, (5) புரிகிலது = செய்கிறதில்லை, (4) ஒன்றும் (ஏ) =ஒன்றையும். (ஏ—அசை)

(பொ—ரை) மனம், உடம்பு, வாக்கு என்பன தீமை அல்லது நன்மையைச் செய்தால் இது எனது என்று சேர்கின்ற பொய் அறிவு ஜீவனும். சொல்லப்படுகின்ற இத்தன்மையை அறிந்த உன்மையான சாட்சியாகிய ஞான வடிவ ஆத்மா ஒன்றையும் செய்கிறதில்லை.

கலிநிலைத் துறை

ஏவு வோனதை யியற்றுவோன்
கருவிக ளிவைகட்
காவ தோரிருப் புடனுறு
மிடங்களீ தாகுஞ்
சீவ னுர்மன திருவகை
யிந்தியந் தேக
மூவ வத்தையென் றுணர்ந்துநின்
றேனவை முதலாய். 96

(ப—ரை) ஏவுவோன் = ஏவுகிறவன், அதை= ஏவப்பட்டதை, இயற்றுவோன் = செய்பவன், கருவிகள் = சாதனங்கள் அல்லது ஆயுதங்கள், இவைகட்கு = இவைகள் எல்லாவற்றிற்கும், ஆவது = தகுதியா, ஓர் இருப்பு (உடன்), உறும்=செல்லும், இடங்கள், ஈது=முறையே, பின் சொல்லப்படும் இவைகள், ஆகும், சீவனுர் = சீவன், மனது=மனம், இருவகை இந்தியம் = ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, தேகம்=உடம்பு, மூவவத்தை=விழிப்பு, கனவு, தூக்கம், என்று உணர்ந்து=என்பன ஆகும் என்று அறிந்து, (3)நின்றேன் =ஞான சொரூபமாகிய நான் இருக்கின்றேன், (2) அவை முதலாய் = அவைகளுக்கு ஆதாரமாகிய சாக்ஷியாய்.

(உடன்—மூன்ரும் வேற்றுமை உருபு)

(பொ—ரை) ஏவுகிறவன், ஏவப்பட்டதைச் செய்கிறவன், சாதனங்கள் அல்லது ஆயுதங்கள் இவைகள் எல்லாவற்றிற்கும் தகுதியா ஒரு இடம் செல்லும் இடங்கள் முறையே பின் சொல்லப்படும் இவைகள் ஆகும். சீவன், மனம், ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, உடம்பு, விழிப்பு, கனவு, தூக்கம் என்பன ஆகும் என்று அறிந்து அவைகளுக்கு ஆதாரமாகிய சாக்ஷியாய் ஞான சொரூபமாகிய நான் இருக்கிறேன். (ஏவுகிறவன் ஜீவன், ஏவப்பட்டதைச் செய்கிறவன் மனம். கருவிகள், இருவகை இந்திரியம் ஆவதோர் இருப்பு தேகம், உறும் இடங்கள் மூவவத்தை.)

## வெண்பா

உடல்பொறிகள் வாயு வுலகனைத்தும் வேறு
படமனத்துள் வ்யாப்பியமாப் பார்ப்பார்—திடமாய்த்
ததையும் புனன்மனத்துட் சான்றாய விம்பப்
பதிவிம் பனையுயிரென் பார். 97

(ப—ரை) உடல், பொறிகள் = இந்திரியங்கள், வாயு= பிராண வாயு முதலியன, உலகனைத்தும்=எல்லா உலகையும், வேறுபட்ட = வேறாக, மனத்துள் = மனதில், வ்யாப்பியமாய்= அடங்கியவைகளாக, பார்ப்பார் = பார்ப்பார்கள், திடமாய்= திடமாக, ததையும் = நெருங்கிய, புனல் மனத்துள் = ஜலம் போன்ற மனதில், சான்றாய்=சாக்ஷியாகிய, விம்ப=பிம்பத்தின், பதிவிம்பனை=பிரதிவிம்பமானவனை, உயிர் என்பர் = ஜீவன் என்று சொல்வார்கள்..

(பொ—ரை) உடல், இந்திரியங்கள், பிராணவாயு முதலியன எல்லா உலகையும் வேறாக மனதில் அடங்கியவைகளாகப் பார்ப்பார்கள். திடமாக நெருங்கிய ஜலம் போன்ற மனதில் சாக்ஷியாகிய பிம்பத்தின் பிரதிவிம்பமானவனை ஜீவன் என்று சொல்லுவார்கள்.

## கலி விருத்தம்

உலகந் தேக முயிர்ப்பிந் தியமனம்
அலருந் தீதுநன் றாய பிரமைகள்
பலவுந் தாங்கு பவையிவை யாவையும்
இலதுங் காணு மெனதுரு ஞானமே. 98

(ப—ரை) உலகம் தேகம்,உயிர்ப்பு=பிராணாதி வாயுக்கள், இந்தியம்=ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள், மனம், அலரும்= விரிந்த, தீது நன்று, ஆய = முதலியவாகிய, பிரமைகள் = மயக்கங்கள் பலவும், தாங்குபவை = இவைகளைத் தாங்குவன,

இவையாவையும்=ஆகிய இவையெல்லாவற்றையும், இலதும்= இவைகளில் இல்லாமையையும்; காணும்=சாக்ஷியாய் அறிகின்ற, எனது உரு=எனது வடிவம், ஞானமே.

(பொ—ரை) உலகம், தேகம், பிராணாதி வாயுக்கள், ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் மனம் விரிந்த தீது நன்று முதலியவாகிய மயக்கங்கள் பலவும் இவைகளைத் தாங்குவன ஆகிய இவையெல்லாவற்றையும், இவைகள் இல்லாமையையும் சாக்ஷியாய் அறிகின்ற எனது வடிவம் ஞானமே.

### வெண்பா

அதிட்டான தேவ ரகங்கரமை வாயுப்
பதிற்றுய விந்தியமெய் பஞ்ச—விதத்தானு
மாற்றப் படுங்கன்ம மான்மா விவையுமிவை
தோற்றப் படாமையுமோ சொல். 99

(ப—ரை) (2) அதிட்டான தேவர் = ஆதாரமாய் நடத்துகின்ற தெய்வங்கள், அகங்காரம், ஐவாயு = பிராணன் முதலிய ஐந்து வாயுக்கள், பதிற்று ஆய=பத்தாகிய, இந்தியம்= இந்திரியங்கள், மெய் = சரீரம், என்று சொல்லப்பட்ட, பஞ்ச விதத்தானும் = ஐந்து வகைகளாலும், ஆற்றப்படும்= செய்யப்படும், (1) கர்மம் = கர்மங்களானவை, (3) ஆன்மா= ஆத்மாவானது, இவையும் = இவைகளும், இவை = இவைகள், தோற்றப்படாமையுமோ=ஒன்றும் தோன்றாத நிலையும் ஆமோ, ஆகாது, சொல்=அறிந்துபார்.

(பொ—ரை) கர்மங்களானவை ஆதாரமாய் நடத்துகின்ற தெய்வங்கள் அகங்காரம், பிராணன் முதலிய ஐந்து வாயுக்கள், பத்தாகிய இந்திரியங்கள், சரீரம் என்று சொல்லப்பட்ட ஐந்து வகைகளாலும் செய்யப்படும் ஆத்மாவானது இவைகளும், இவைகள் ஒன்றும் தோன்றாத நிலையும் ஆமோ ஆகாது. அறிந்து பார்.

ஒருமெய் பொறிபுலன்கா லுள்ள மறதிக்
குரியவனுய் மற்றை யுளவு—தெரியகிலாச்
சிற்றறிவன் யானென்னுஞ் சீவவறி வற்றருளான்
முற்றுணர்வின் பானுன் முதல். 100

(ப—ரை) ஒரு மெய்=ஒருவன் ஒரு சரீரம், பொறி= இந்திரியங்கள், புலன்=சப்தாதி விஷயங்கள், கால்=பிராணுதி வாயுக்கள், உள்ளம் = நினைவு, மறதிக்கு = மறதி என்னும் இவைகளுக்கு, உரியவனுய், மற்றையுளவு = மற்றுள்ள தோற்றங்களை, தெரிய இலா=தெரியாத, சிற்றறிவன் = சிறிய அறிவுடையவன், யான் என்னும் சீவ அறிவு, அற்று = நீங்கி, அருளால் = ஞானத்தினுல், முற்றுணர்வு = பேரறிவாகிய, இன்பு = சுக சொரூபம், ஆனுல், முதல் = அனைத்திற்கும் காரணமாகிய, பிரமமாவான்.

(பொ—ரை) ஒருவன் ஒரு சரீரம் இந்திரியங்கள் சப்தாதி விஷயங்கள், பிராணுதி வாயுக்கள், நினைவு, மறதி என்னும் இவைகளுக்கு உரியவனுய் மற்றுள்ள தோற்றங்களைத் தெரியாத சிறிய அறிவுடையவன் யான் என்னும் சீவ அறிவு நீங்கி ஞானத்தினுல் பேரறிவாகிய சுக சொரூபமானுல் அனைத்திற்கும் காரணமாகிய பிரமமாவான்.

இவ்வணம்யான் செய்வே னெனுநினைவு சங்கற்ப
மிவ்வணமெற் காக வெனல்வேட்கை—கவ்வுமனு
சந்தானம் போனதுன்னல் சான்ருயங் கங்கொழித்தல்
சிந்தா செயமீது செய். 101

(ப—ரை) இவ்வணம் = இந்த விதமாக, யான் செய்வேன் எனும் நினைவு, சங்கற்பம்=சங்கற்பமாம், இவ்வணம்= இந்த விதமாக, எற்கு=எனக்கு, ஆக=ஆகவேண்டும், எனல்= எனும் எண்ணம், வேட்கை= இச்சையாம், (3) கவ்வும்= பற்றுகின்ற, அனுசந்தானம்=அனுசந்தானமாம், (2) போனது உன்னல்=சென்ற காரியங்களை நினைத்தல், சான்ருய்=(சான்ருகி)

சாக்ஷியாகி, அங்கு அங்கு = மேற்கூறியவற்றை அவ்வச் சமயங்களில், ஒழித்தல் = ஒழித்தலே, சிந்தா செயம் = மனதின் வெற்றியாம், ஈது செய் = இக் காரியத்தை விடாமற் செய்.

(பொ—ரை) இந்த விதமாக யான் செய்வேன் எனும் நினைவு சங்கற்பமாம். இந்த விதமாக எனக்கு ஆகவேண்டும் எனும் எண்ணம் இச்சையாம். சென்ற காரியங்களை நினைத்தல் பற்றுகின்ற அனுசந்தானமாம். சாக்ஷியாய் மேற்கூறியவற்றை அவ்வச் சமயங்களில் ஒழித்தலே மனதின் வெற்றியாம். இக்காரியத்தை விடாமற் செய்.

## அறுசீர் விருத்தம்

மருவுஞா துருவிஞ் ஞான
மயன்மனோ மயனே ஞான
மிருள்விட யங்கண் ஞேய
மெனுந்திரி புடியாற் றோன்று
விரிதரு விடய வின்பம்
விடமது கலந்த தேன்போ
லருகுமா யிரந்துக் கத்தோ
டமைதலா லின்ப மாகா. 102

(ப—ரை) (2) மருவு = பொருந்திய, ஞாதுரு = அறிகிறவனானவன், (1) விஞ்ஞான மயன், (3) மனோமயன் (ஏ), ஞானம் = அறிவாகும், இருள் = மறைக்கின்ற, விடயங்கள் = விஷயங்கள், ஞேயம் = அறியப்படுவனவாம், எனும் = என்னும் இவைகளாகிய, திரிபுடியில் தோன்றும், விரிதரு = விரிகின்ற, விடய இன்பம் = சப்தாதி விஷயங்களால் உண்டான சுகமானது, விடம் (அது) = நஞ்சு கலந்த தேன் போல், அருகும் = குறைவையுடைய, ஆயிரந்துக்கத்தோடு, அமைதலால் = சேர்தலால், இன்பம் ஆகா = சுகம் ஆகாது.

(ஏ—அசை. அது—பகுதிப் பொருள் விகுதி)

(திரிபுடி—அறிகிறவன், அறிவு, அறிபடுபொருள்.)

(பொ—ரை) விஞ்ஞான மயன் பொருந்திய அறிகிறவனுனவன் மனோமயன் அறிவாகும். மறைக்கின்ற விஷயங்கள் அறியப்படுவனவாம் என்னும் இவைகளாகிய திரிபுடியில் தோன்றும் விரிகின்ற சப்தாதி விஷயங்களால் உண்டான சுகமானது நஞ்சு கலந்த தேன் போல் குறைவையுடைய ஆயிரம் துக்கத்தோடு சேர்தலால் சுகம் ஆகாது.

## கலிநிலைத்துறை

முதிய கண்ணுப நயனமேய்ச்
சுடருமுன் னிட்டா
லெதிரும் யாவையு நோக்கலிற்
சாட்சியிந் தியந்தான்
மதியு மொத்திடி லைவகை
விடயமே வடிவாய்ச்
சதிசெ யுஞ்சக முணர்தலான்
மற்றெலாஞ் சடமே. 103

(ப—ரை) முதிய கண் = முதிர்ந்த பருவத்திலுள்ள கண்கள், உபநயனம் = மூக்குக் கண்ணுடியை, மேய் = பொருந்தி, சுடரும் = பிரகாசமும், முன்னிட்டால் = முன்னிருந்தால், எதிரும் யாவையும் = எதிர்ப்பட்ட எல்லாவற்றையும், நோக்கலில் = பார்த்தல் போல, சாட்சி = சாட்சியாகிய ஆத்மா, இந்தியத்தால் = இந்திரியங்களைக்கொண்டு, மதியும் ஒத்திடில் = புத்தியும் கூடினுல், ஐவகை = சப்தம் முதலிய ஐந்து வகையான, விடயமே = விஷயங்களே, வடிவாய் = வடிவமாகி, சதி செயும் = வஞ்சனை செய்யும், சகம் = உலகத்தை, உணர்தலால் = அறிதலால், மற்று எலாம் = ஆன்மாவைத் தவிர மற்ற எல்லாம், (சடமே = ஜடமேயாகும், ஜடம் = அறிவில்லாதது, முதிய கண் = சாளேஸ்வரமடைந்த கண்)

(பொ—ரை) முதிர்ந்த பருவத்திலுள்ள கண்கள் மூக்குக் கண்ணுடியைப் பொருந்தி பிரகாசமும் முன்னிருந்தால் எதிர்ப்பட்ட எல்லாவற்றையும் பார்த்தல் போலச் சாட்சியாகிய ஆத்மா இந்திரியங்களைக் கொண்டு புத்தியும் கூடிஞல் சப்தம் முதலான ஐந்து விதமான விஷயங்களே வடிவமாகி வஞ்சனை செய்யும். உலகத்தை அறிதலால் ஆன்மாவைத் தவிர மற்ற எல்லாம் ஜடமேயாகும்.

துறைய ஞதியா மவித்தைவா
சனையிஞற் ருேன்று
மறையு டற்பிரா ணேந்திய
மனங்களின் மானம்
பெறுத லானவற் றின்பதுன்
பங்களாம் பிராந்திச்
செறிவை யென்னதென் றுயிரதாம்
விசாரிப்பிற் சிவமே. 104

(ப—ரை) துறை அஞதியாம் = ஒருவன் அஞதிக் கிரமத்தையுடைய, அவித்தை = அஞ்ஞானத்திஞலும், வாசனையிஞல் = வாசனையிஞலும், தோன்றும் = தோற்றுகிற, மறை=அழிவையுடைய, உடல், பிராணேந்திய=பிராணவாயு, இந்திரியம், மனங்களில்=மனம் என்னும் இவைகளில், மானம் = யான் எனது என்னும் அபிமானம், பெறுதலான்=அடைதலால், அவற்று = அவைகளில் ஏற்படும், இன்ப துன்பங்களாம், பிராந்திச் செறிவை = மயக்கக் கூட்டத்தை, என்னதென்று = என்னுடையதென்று நினைத்து, உயிர் அது (ஆம்) = சீவஞவன், விசாரிப்பின்=அவற்றை நன்ருக விசாரித்துப் பார்த்தால், சிவமே = சிவமாகவே இருப்பன்.

(அது—பகுதிப் பொருள் விகுதி)

(பொ—ரை) ஒருவன் அஞதிக் கிரமத்தையுடைய அஞ்ஞானத்திஞலும் வாசனையிஞலும் தோற்றுகிற

அழிவையுடைய உடல், பிராணவாயு, இந்திரியம், மனம் என்னும் இவைகளில் யானெனது என்னும் அபிமானம் அடைதலால் அவைகளில் ஏற்படும் இன்ப துன்பங்களாம். மயக்கக் கூட்டத்தை என்னுடையதென்று நினைத்து சீவனுவன். அவற்றை நன்ருக விசாரித்துப்பார்த்தால் சிவமாகவே இருப்பன்.

இந்தி யங்கண்மே விடும்விட யங்களி னிவற்றிற்
சிந்தை யொன்றியே விளங்கிடச் செய்யுமிச் செயலிற்
பந்த முற்றியா னறிந்தன னெனுஞ்சிதா பாசன்
ருெந்த மற்றுணர்ந் திலங்கிடுஞ் சாட்சிசிற் சோதி. 105

(ப—ரை) இந்தியங்கள் = இந்திரியங்கள், (3) மேவிடும் = பொருந்தும், (2) விடயங்களில் = சப்தாதி விஷயங்களில், இவற்றில் = இவைகளில், சிந்தை ஒன்றியே = மனமானது கலந்தே, விளங்கிடச் செய்யும் = விளங்கும்படிச் செய்யும், இச்செயலில் = இந்தச் செய்கைகளில், (5) பந்தமுற்று = கட்டுப்பட்டு, யான் அறிந்தனன் = நான் அறிந்தேன், எனும் = என்று நினைப்பான்; (4) சிதாபாசன் = ஜீவன், (6) தொந்தமற்று = இவைகளில் சம்பந்தமின்றியே, உணர்ந்து = அறிந்துகொண்டு, இலங்கிடும் = பிரகாசிக்கும், சாட்சி = சாட்சியானது, சித் சோதி = ஞான சோதியாகிய சிவமாம்.

(பொ—ரை) இந்திரியங்கள், சப்தாதி விஷயங்களில் மனமானது கலந்தே விளங்கும்படி செய்யும். இந்தச் செய்கைகளில் பொருந்தும்ஜீவன், கட்டுப்பட்டு நான் அறிந்தேன் என்று நினைப்பான். இவைகளில் சம்பந்தமின்றி அறிந்துகொண்டு பிரகாசிக்கும் சாட்சியானது ஞான சோதியாகிய சிவமாம்.

## கலி விருத்தம்

வசித்த லோகமண் ணீரழல் வாதம்விண்
ணசுத்த வூன்றிர ளாக்கைசொல் சத்தமாம்
விசைத்த காற்றுயி ராய்விளங் கும்மன
நசித்தொன் றின்மையஞ் ஞானமஞ் ஞானமே. 106

(ப—ரை) (1) வசித்தலோகம் = சராசரங்கள் வசிக்கின்ற உலகமானது, மண், நீர், அழல்=தீ, வாதம்=காற்று, விண்= வெளி என்னும் இவைகளாம்; (3) அசுத்த = அசுத்தமான ஊன் திரள் = மாமிச முதலியவைகளின் கூட்டமாம்; (2) ஆக்கை = சரீரமானது; (4) சொல் = வாக்கானது, சத்தமாம்=ஓசையாம்; (6) விசைத்த காற்று = வேகமுள்ள காற்றும், (5) உயிர்=பிராணனானது, (8) ஆய்=மேற்கூறியவை எல்லாம் ஆகி, விளங்கும் = விளங்குவதாம்; (7) மனம்= மனமானது, (10) நசித்து = இவைகள் எல்லாம் ஒழிந்து, ஒன்று இன்மை=ஒன்றும் தோன்றாமையாம்; (9) அஞ்ஞானம்= அஞ்ஞானமாவது, அ ஞானமே=இவ்விதம் போல் பிரகாசிப்பது அந்த பிரம சொரூபமாகிய ஞானமே.

(பொ—ரை) சராசரங்கள் வசிக்கின்ற உலகமானது மண், நீர், தீ, காற்று, வெளி என்னும் இவைகளாம். சரீரமானது அசுத்தமான மாமிச முதலியவைகளின் கூட்டமாம். வாக்கானது ஓசையாம். பிராணனானது வேகமுள்ள காற்றும். மனமானது மேற்கூறியவை எல்லாமாகி விளங்குவதாம். அஞ்ஞானமாவது இவைகள் எல்லாம் ஒழிந்து ஒன்றும் தோன்றாமையாம். இவ்விதம் போல் பிரகாசிப்பது அந்தப் பிரம சொரூபமாகிய ஞானமே.

## வெண்பா

தாமாக்கை யென்னுந் தமமிதற்குற் றோர்க்கிறைதா
ணுமோக முன்னும்விட யாதியெணன்—மாமோகந்
தாமிசிர மாங்குத் தடையாறுற் கோபமந்த
தாமிசிரங் காக்கநினைத் தல். 107

(ப—ரை) (2) தாம், ஆக்கை என்னும் = சரீரம் என்று நினைக்கும், தமம்=தமமானது, (4) இதற்கு=இந்த சரீரத்திற்கு, உற்றோர்க்கு=உரியவர்களுக்கு,இறை=தலைவன், தாறு=தானாக, (3) மோகம் = மோகமானது, (5) உன்னும் = நினைக்கும், (7) விடயாதி=விஷயம் முதலியவற்றை, எணல்=எண்ணுதல்

6) மாமோகம்=மாமோகமாவது, (8) தாமிசிரம்=தாமிசிரமாவது ஆங்கு=அவ்விஷயம் முதலியவற்றிற்குத், தடையானல்= தடையுண்டானல், கோபம் = ஏற்படும் கோபமாம், அந்த தாமிசிரம் = அந்தத் தாமிசிரம்ாவது, காக்க = அவ்விஷயம் முதலியவற்றிற்குத் தடையுண்டாகாமல் காக்க, நினைத்தல் = நினைத்தலாம்.

(பொ—ரை) தமமானது தாம் சரீரம் என்று நினைக்கும். மோகமானது இந்த சரீரத்திற்கு உரியவர்களுக்குத் தலைவன் தானுக நினைக்கும். மகா மோகமாவது விஷயம் முதலியவற்றை எண்ணுதல். தாமிசிரமாவது அவ்விஷயம் முதலியவற்றிற்குத் தடையுண்டானல் ஏற்படும் கோபம், அந்தத் தாமிசிரமாவது அவ்விஷயம் முதலியவற்றிற்குத் தடையுண்டாகாமல் காக்க நினைத்தலாம்.

## ஆசிரிய விருத்தம்

இனவுரி யிரத்தஞ் சஞயுவூன் மச்சையென்
பென்னுமா ருய தூலத்
திவ்வண மிலிங்கமெய் நிற்குநா
வாக்குவா யிற்கழுத் திடையு தானன்
மனமிரு தயத்திற் பிராணனெடு புத்தியாம்
வருநாபி யிற்ச மான
வாயுசித் தங்குதத் தின்பால பானன்
வயங்குபா யுருமெய் யெலாங்
கனவகங் காரம் வியானன் றுவக்குவாங்
கவருச்சி யிற்றேயுசு
கருவிழியி னுட்சட்சு காதுட்
சுரோத்திரங் கடியவாக் ராண மூக்குட்
பனுவுகுய் யத்துபத் தங்கை தனிற்பாணி
பாதமது காலின் மற்றுப்
பகர்தரு மவித்தைகா ரணமெய்
யவத்தையோ படர்நனவு கனவு துயிலே. 108

(ப—ரை) (1) இனவுரி = இனத்தையுடைய தோல், இரத்தம், சனுயு = நரம்பு, ஊன் = மாமிசம், மச்சை = எலும்பினுள் இருக்கும் மூளை, என்பு = எலும்பு, என்னும் = என்று சொல்லப்படுகிற, ஆறு ஆய = ஆறு தத்துவங்களான, தூலத்து = ஸ்தூல சரீரத்தில், இவ்வணம் = மேற்சொல்லப்படும் விதமாக, இலிங்கமெய் = சூக்ஷ்ம சரீரம், நிற்கும் = இருக்கும்; (3) நா = வாக்கு (சிங்குவை) இந்திரியமும், வாக்கு = பேச்சும் இருக்கும், (2) வாயில், (4) கழுத்திடை = கழுத்தில், உதானன் = உதான வாயுவும், மனம் = மனமும் இருக்கும்; இருதயத்தில், பிராணனேடு = பிராணவாயுவும், புத்தியாம் = புத்தியும் இருக்கும், வரும் = உண்டாகிய, நாபியில், சமான வாயு = சமான வாயுவும், சித்தம் = சித்தமும் இருக்கும், குதத்தின் பால் = குதத்தில், அபானன் = அபான வாயுவும், வயங்கு = விளங்குகின்ற, பாயுரு = பாயுரு இந்திரியமும் இருக்கும்; மெய் எலாம் = சரீரத்தின் எல்லாவிடத்தும், கன = தடித்த, அகங்காரம் = அகங்காரமும், வியானன் = வியான வாயுவும், துவக்குவாம் = துவக்கு இந்திரியமும் இருக்கும்; கவர் = கிரகிக்கின்ற, உச்சியில், தேயுசு = உள்ளம் இருக்கும், கருவிழியினுள், சட்சு = சட்சு இந்திரியம் இருக்கும், காது உள் = காதினுள், சுரோத்திரம் = சுரோத்திர இந்திரியம் இருக்கும்; (6) கடிய = கடுமையான, ஆக்ராணம் = ஆக்ராண இந்திரியம் இருக்கும், (5) மூக்குள் = மூக்கினுள், (7) பனுவு = சொல்லப்படுகிற, குய்யத்து = குய்யத்தில், உபத்தம் = உபஸ்த இந்திரியம் இருக்கும், கைதனில் = கையில், பாணி = பாணி இந்திரியம் இருக்கும், (9) பாதம் = பாத இந்திரியம் இருக்கும், (8) காலில், (10) (மற்று) பகர்தரும் = சொல்லப்படுகிற, அவித்தை = அஞ்ஞானம், காரணமெய் = காரண சரீரமாம், அவத்தையோ = அவஸ்தை என்பன, படர் = விரிந்த, நனவு = விழிப்பு, கனவு, துயில் = தூக்கமாம்.

(அது—பகுதிப்பொருள் விகுதி. மற்று—இடைச்சொல்.)
(ஏ—அசை.)

(பொ—ரை) இனத்தையுடைய தோல், இரத்தம், நரம்பு, மாமிசம், எலும்பினுள்ளிருக்கும் மூளை, எலும்பு என்று

சொல்லப்படுகிற ஆறு தத்துவங்களான ஸ்தூல சரீரத்தில் மேற்சொல்லப்படும் விதமாக சூக்ஷ்ம சரீரம் இருக்கும். வாயில் வாக்கு (சிங்குவை) இந்திரியமும் பேச்சும் இருக்கும். கழுத்தில் உதான வாயுவும் மனமும் இருக்கும். இருதயத்தில் பிராணவாயுவும் புத்தியும் இருக்கும். உண்டாகிய நாபியில் சமான வாயுவும் சித்தமும் இருக்கும். குதத்தில் அபான வாயுவும் விளங்குகிற பாயுரு இந்திரியமும் இருக்கும். சரீரத்தின் எல்லாவிடத்தும் தடித்த அகங்காரமும், வியான வாயுவும், துவக்கு இந்திரியமும் இருக்கும். கிரகிக்கின்ற உச்சியில் உள்ளம் இருக்கும். கருவிழியினுள் சட்சு இந்திரியம் இருக்கும். காதினுள் சுரோத்திர இந்திரியம் இருக்கும். மூக்கினுள் கடுமையான ஆக்ராண இந்திரியம் இருக்கும். சொல்லப்படுகிற குய்யத்தில் உபஸ்த இந்திரியம் இருக்கும். கையில் பாணி இந்திரியம் இருக்கும். காலில் பாத இந்திரியம் இருக்கும். சொல்லப்படுகிற அஞ்ஞானம் காரண சரீரமாம். அவஸ்தை என்பன விரிந்த விழிப்பு, கனவு, தூக்கமாம்.

### அறுசீர் விருத்தம்

ஒத்ததத் துவமுப் பத்தா
னுயர்பூத மைந்து தூல
தத்துவ மாறு சூக்க
தத்துவ மிருபான் மூலத்
துய்த்தமெய் யவித்தை மாயை
யுயிரீச னிவைகட் கெல்லாஞ்
சத்ததிட் டான மாஞ்சை
தன்னியப் பிரம மொன்றே. 109

(ப—ரை) ஒத்த = பொருந்திய, தத்துவம் முப்பத்தாறு, அவையாவன, உயர் = உயர்ந்த, பூதம் ஐந்து, தூலதத்துவம் ஆறு = தூல சரீர தத்துவம் ஆறு, சூக்க = சூக்ஷ்ம சரீரத்தின், தத்துவம், இருபான் = இருபது, மூலத்து = காரணமென்று, உய்த்த = சொல்லப்படுகிற, மெய் = சரீரம், அவித்தை = அஞ்ஞானம் ஒன்று,

மாயை, உயிர்=ஜீவன், ஈசன்=ஈஸ்வரன், இவைகட்கெல்லாம், (8) சத்து = இருப்பும், அதிட்டானமாம் = ஆதாரமும் ஆகும், (2) சைதன்ய=ஞான சொரூபமாகிய, பிரமம் (ஒன்று) (ஏ)

(ஏ—அசை.)

(பொ—ரை) பொருந்திய தத்துவம் முப்பத்தாறு. அவையாவன:- உயர்ந்த பூதம் ஐந்து, ஸ்தூல சரீரத்தின் தத்துவம் ஆறு. சூக்ஷ்ம சரீரத்தின் தத்துவம் இருபது. காரணம் என்று சொல்லப்படுகிற சரீரம் அஞ்ஞானம் ஒன்று.மாயை ஜீவன், ஈஸ்வரன் இவைகட்கு எல்லாம், ஞான சொரூபமாகிய பிரமம் என்பது இருப்பும் ஆதாரமும் ஆகும்.

## ஆசிரிய விருத்தம்

பகர்வரிய பிரமமே தானென்று மற்றமுப்
பத்தைந்து மன்றென்றுணர்
பதிவிவே கிக்ககங் காரக்
கிரந்தியது பாறலா லிருபதோடெண்
வகைசெயுந் தொழிலையான் செய்யவிலை யவையுண்ப
மற்றியா னுண்ணவில்லை
மன்னெனத் திடமாய் மயக்கற்ற
படியினன் மருவுமிரு பத்தெட்டுமாய்
நிகழ்வினர்ச் சித்தபுண் ணியபாவ மவைநின்று
நீங்கியே கன்மமறலா
நிறைசனன மரணாதி சமுசார
மில்லாம னிற்பனாற் பிரமமாக
வகமில்பக வற்பத்த னுயர்பிரா மணனதிவர்
ணாச்சிரமி சீவன்முத்த
னமர்குணா தீதன் றிடப்பிரஞ
னெனவிவனை யாரணம் பரவுறுமரோ. 110

(ப—ரை) (1) பகர்வரிய = சொல்லுதற்கரிய, பிரமமே தானென்றும், மற்ற முப்பத்தைந்தும்=மற்றைய முப்பத்தைந்து தத்துவங்களும், அன்று=அல்ல, என்று உணர்=என்று அறிந்த, பதி=மேலோனாகிய, விவேகிக்கு, அகங்காரக் கிரந்தி (அது), பாறலால்=ஒழிந்ததால், இருபதோடு எண் வகை=ஸ்தூல சரீர தத்துவம் ஆறு, சூக்ஷ்ம சரீர தத்துவம் இருபது, காரண சரீர தத்துவம் ஒன்று, ஜீவன் ஒன்று, ஆக இருபத்தெட்டு தத்துவங்களும், செயுந்தொழிலை=செய்யும் தொழில்களை, யான் செய்யவில்லை = தான் செய்யவில்லை, அவை உண்ப = அந்த தத்துவங்கள் அனுபவித்தவைகளை, (மற்று) யான் உண்ணவில்லை = நான் அனுபவிக்கவில்லை, மன் என = இது நிச்சயமென்று, திடமாய், மயக்கு=மயக்கம், அற்றபடியினால், மருவும்=பொருந்திய, இருபத்தெட்டுமாய்=இருபத்தெட்டு தத்துவங்களே, நிகழ்வின் = விளங்கும்படி, ஆர்ச்சித்த = தேடப்பட்ட, புண்ணிய பாவம் (அவை) நின்றும் = புண்ணிய பாவங்களிலிருந்தும், நீங்கியே, கன்மம் அறலால் = கர்மங்கள் ஒழிந்ததால், நிறை=மிகுந்த, சனன மரணாதி=பிறப்பு இறப்பு முதலிய, சமுசாரமில்லாமல், (3) நிற்பான் (ஆல்) = இருப்பான், (2) பிரமமாக, (5) அகம் இல் = அகங்காரமில்லாத, பகவற்பத்தன், உயர் = உயர்ந்த, பிராமணன், அதிவர்ணாச்சிரமி, சீவன் முத்தன், அமர் = விரும்பப்படுகிற, குணாதீதன், திடப்பிரஞன் என = திடப்பிரஞன் என்று, (4) இவனை, (6) ஆரணம்=வேதங்கள், பரவுறும் (அரோ) =புகழும்.

(மற்று—அசை, அவை—பகுதிப்பொருள் விகுதி,)
(ஆல், அரோ—அசைகள்.)

(பொ—ரை) சொல்லுதற்கரிய பிரமமே தானென்றும் மற்றைய முப்பத்தைந்து தத்துவங்களும் அல்ல என்று அறிந்த மேலோனாகிய விவேகிக்கு, அகங்காரக் கிரந்தி ஒழிந்ததால், ஸ்தூல சரீர தத்துவம் 6, சூக்ஷ்ம சரீர தத்துவம் 20, காரண சரீர தத்துவம் 1, ஜீவன் 1, ஆக இருபத்தெட்டு தத்துவங்களும் செய்யும் தொழில்களை நான் செய்யவில்லை. அந்த தத்துவங்கள் அனுபவித்தவைகளை நான் அனுபவிக்கவில்லை. இது நிச்சயமென்று திடமாய் மயக்கம் அற்றபடியால் பொருந்திய

இருபத்தெட்டுத் தத்துவங்களே விளங்கும்படி தேடப்பட்ட புண்ணிய, பாவங்களிலிருந்தும் நீங்கியே கர்மங்கள் ஒழிந்ததால் மிகுந்த பிறப்பு, இறப்பு முதலிய சமுசாரமில்லாமல் பிரமமாக இருப்பான். இவனை அகங்காரமில்லாத பகவற்பத்தன், உயர்ந்த பிராமணன், அதிவர்ணாச்சிரமி, சீவன் முத்தன், விரும்பப்படுகிற குணாதீதன், திடப் பிரஞ்ஞன் என்று வேதங்கள் புகழும்.

## வெண்பா

*மீக்கண் மறந்து மிதந்தழுந்த மூலவுடல்*
*சூக்குமமெய் தூலஞ் சுழுத்திகனாச்—சாக்கிரமா*
*மீது, கனவி லிவைசுழுத்தி யிற்போமெப்*
*போதுமிலை தன்னிலிந்தப் பொய்.* 111

(ப—ரை) (1) மீ=மேலான, கண்=ஞான திருஷ்டியை, மறந்து=அஞாதியே மறந்து, மிதந்து=சூக்ஷமமாய், அழுந்த=ஸ்தூலமாக,முறையே,மூலவுடல்=காரண சரீரம், சூக்குமமெய்=சூக்ஷம சரீரம், தூலம்=ஸ்தூல சரீரம் தோன்றி, சுழுத்தி, கனா = சொற்பனம், சாக்கிரம், ஆம் = உண்டாம், ஈது= இச்சாக்கிராவஸ்தை, கனவில் = சொற்பனாவஸ்தையிலும், இவை = இச்சாக்கிரமும், சொற்பனமும், சுழுத்தியிற்போம்= சுழுத்தி அவஸ்தையிலும் ஒழியும், (3) எப்போதும், இலை= இல்லவேயில்லை, (2) தன்னில் = சாக்ஷியாகிய ஆத்மாவில், (4) இந்தப் பொய் = மேற்சொல்லப்பட்ட மூன்று சரீரங்களும் மூன்று அவஸ்தைகளுமாகிய இந்தப் பொய்த் தோற்றங்கள்.

(பொ—ரை) மேலான ஞான திருஷ்டியை அஞாதியே மறந்து சூக்ஷமமாய், ஸ்தூலமாக, முறையே காரண சரீரம் சூக்ஷ்ம சரீரம், ஸ்தூல சரீரம் தோன்றி சுழுத்தி சொற்பனம், சாக்கிரம் உண்டாம். இச்சாக்கிராவஸ்தை, சொற்பனாவஸ்தையிலும், இச்சாக்கிரமும், சொற்பனமும் சுழுத்தி அவஸ்தையிலும் ஒழியும். சாக்ஷியாகிய ஆத்மாவில் எப்போதும் மேற்சொல்லப்பட்ட மூன்று சரீரங்களும் மூன்று அவஸ்தைகளுமாகிய இப்பொய்த் தோற்றங்கள் இல்லவேயில்லை.

(குறிப்பு:- மறந்து மூலவுடல், பிறந்து சூக்ஷ்ம மெய் அழுந்த ஸ்தூல உடல் தோன்றும்.) மூல உடல் மாத்திரம் சுழுத்தியிலும் மூலவுடலும் சூக்ஷ்ம மெய்யும் கனவிலும், மூலவுடலும் சூக்ஷ்ம மெய்யும் தூலமும் சாக்கிரத்திலும் தோற்றும்.

ஒன்று மொழியா துளவனைத்துஞ் சாக்கிரமாய்த்
துன்று மதுவுமிலை சொற்பனத்திற்—பொன்றிவ்
விரண்டுஞ் சுழுத்தியினி லில்லையிவை மூன்றுந்
தெருண்டதன்பா லுண்டோ தெளி. 112

(ப—ரை) (1) ஒன்றும் ஒழியாது=யாதொன்றையும் விடாமல், உள=உள்ளனவாகிய, அனைத்தும், சாக்கிரமாய்= சாக்கிராவஸ்தையாக, துன்றும் = பொருந்தும், அதுவும்= அப்படிப்பட்ட சாக்கிராவஸ்தையும், இலை சொற்பனத்தில் = சொற்பனுவஸ்தையில் இல்லாமல் வேறு விதமாய் அந்த சாக்கிராவஸ்தை போல பொய்யாகத் தோன்றும், பொன்று = அழிகின்ற, இவ்விரண்டும் = இச்சாக்கிரமும், சொற்பனமும், சுழுத்தியில்=ஒன்றும் தோன்றாமையாகிய சுழுத்தி அவஸ்தையில் இல்லை, இவை மூன்றும் = இச்சாக்கிர, சொற்பன, சுழுத்தி மூன்றும், தெருண்ட = தெளிவாகிய, தன்பால் = ஆத்மாவான தன்னிடத்தில், உண்டோ = இல்லை, தெளி = தெளிந்து நின்று இதையறி, தெளிதல்= நினைப்பும், உறக்கமும் அற்றிருத்தல்.

(பொ—ரை) யாதொன்றையும் விடாமல் உள்ளனவாகிய அனைத்தும் சாக்கிராவஸ்தையாக பொருந்தும். அப்படிப்பட்ட சாக்கிராவஸ்தையும் சொற்பனுவஸ்தையில் இல்லாமல் வேறுவிதமாய் அந்தச் சாக்கிராவஸ்தை போலப் பொய்யாய்த் தோற்றும். அழிகின்ற இச்சாக்கிரமும், சொற்பனமும் ஒன்றும் தோற்றாமையாகிய சுழுத்தியவஸ்தையில் இல்லை. இச்சாக்கிர சொற்பன சுழுத்தி மூன்றும் தெளிவாகிய ஆத்மவான தன்னிடத்தில் இல்லை. இதையறி.

தூலமோர் சூக்குமமே சூக்குமமோ காரணமே
மூலமோர் தாஞ முதுதுரியஞ்—சாலுமது
மூலமா காவிந்த மூலமா காசூக்கந்
தூலமா காசூட் சுமம். 113

(ப—ரை) (1) தூலமோ=ஆராய்ந்து பார்க்கில் ஸ்தூல சரீரமோ, சூக்குமமே=சூக்ஷ்ம சரீரமே, சூக்குமமோ = சூக்ஷ்ம சரீரமோ, காரணமே=அஞ்ஞானமே. மூலமோ = அஞ்ஞானமோ, தாஞம் = தாஞகிய, முது துரியம் = நித்தியமான துரியமாம், சாலும்=பூரணமாகிய, அது=அந்தத் துரியநிலை, மூலம் ஆகா= அஞ்ஞானமாகாது. இந்த = இந்த, மூலம் = அஞ்ஞானம், ஆகா சூக்கம்=சூக்ஷமம் ஆகாது, தூலம் = ஸ்தூல சரீரமானது, ஆகா சூட்சுமம்=சூக்ஷ்மம் ஆகாது.

(பொ—ரை) ஆராய்ந்து பார்க்கில் ஸ்தூல சரீரமோ சூக்ஷ்ம சரீரமே. சூக்ஷ்ம சரீரமோ அஞ்ஞானமே. அஞ்ஞானமோ தாஞகிய நித்தியமான துரியமாம். பூரணமாகிய அந்தத் துரியநிலை அஞ்ஞானம் ஆகாது. இந்த அஞ்ஞானம் சூக்ஷ்மம் ஆகாது. சூக்ஷ்மம் ஸ்தூலம் ஆகாது.

எண்சீர் விருத்தம்

தூலசுர மைவாத பித்த நோய்கள்
சூடுவிடி முறிச்சலிவை சூக்கு மத்தின்
பாலவைநாண் குரோதமத முலோபங் காமம்
பயமோகஞ் சமைதமைகள் சிரத்தை பத்தி
மூலசுரம் பலபடக்கா ரியச ரீர
முளைப்பித்தல் சுரமவையே யுடற்சு பாவ
நூலுடைபோற் பிரகாச முயிர்ச்சு பாவ
நோக்கிடுங்கா லெனிற்றனக்கு நோயொன் றுண்டோ
114

(ப—ரை) (1) தூலசுரம்=ஸ்தூல சரீரத்தின் சுரமாவன, (3) ஐ = சிலேட்டும, (2) வாத பித்த, (4) நோய்கள் = நோய்களாம், (7) சூடு, (6) இடி, (8) முறிச்சல் = முறிச்சல் என்பனவாம், (5) இவை, (9) சூக்குமத்தின்=சூக்ஷ்ம சரீரத்தின், பாலவை=இடத்துள்ள நோய்களாவன, நாண் = வெட்கம், குரோதம்=கோபம், மதம், உலோபம், காமம், பயம், மோகம், சமை, தமைகள், சமம், தமம், சிரத்தை=விசுவாசம், பத்தி = பக்தி என்பனவாம்; மூலசுரம்=காரண சரீரத்தின் நோயாவது, பலபட=பலவிதமாக, காரிய சரீரம், ஸ்தூல சூக்ஷமம் என்னும் காரிய சரீரங்களை, முளைப்பித்தல்=உண்டாக்குதலாம்,(12)சுரம்= (அவை) ஏ=நோய்களே, உடல் சுபாவம்=மூன்று சரீரங்களுக்கும் சுபாவங்களாம், (11) நூல் உடைபோல் = நூலே ஆடையாவது போல, (13) பிரகாசம் = பிரகாசமே, உயிர்ச் சுபாவம் = ஜீவ சுபாவமாம், (10) நோக்கிடுங்கால் = ஆராயுமிடத்து, (14) எனில்=என்றால், தனக்கு = பரமப் பிரகாசமாகிய, ஆத்மாவான தனக்கு, நோய் ஒன்று உண்டோ = நோய் ஒன்று இருக்குமோ, இல்லை. (அவை—பகுதிப் பொருள் விகுதி.)

(சமம்—மனஅடக்கம், தமம்—இந்திரிய அடக்கம்.)

(பொ—ரை) ஸ்தூல சரீரத்தின் சுரமாவன:- வாத, பித்த சிலேட்டும நோய்களாம். இவை இடி, சூடு, முறிச்சல் என்பனவாம். சூக்ஷ்ம சரீரத்தின் இடத்துள்ள நோய்களானவை வெட்கம், கோபம், மதம், உலோபம், காமம், பயம், மோகம், சமம், தமம், விஸ்வாசம், பக்தி என்பனவாம். காரண சரீரத்தின் நோயாவது பலவிதமாக ஸ்தூல சூக்ஷமமென்னும் காரிய சரீரங்களை உண்டாக்குதலாம். ஆராயுமிடத்தே நூலே ஆடையாவது போல, நோய்களே மூன்று சரீரங்களுக்கும் சுபாவங்களாம். பிரகாசமே ஜீவ சுபாவமாம், என்றால் பரமப் பிரகாசமாகிய ஆத்மாவான தனக்கு நோய் ஒன்று இருக்குமோ? இல்லை.

## அறுசீர் விருத்தம்

ஆக்கை யிந்திய முருவமாப்
பிராணனை யசைவதா வயலாக
நோக்கு வாயென நோக்கியே
யருவமாய் நுழைமன மறிவாமென்
ஞக்கி னேக்குளாய் நிற்கமுன்
வாசனை யாகிய வுயிர்ப்பண்பால்
வீக்கு றும்விவ காரமுற்
ருயினும் விபுவெனை யலதுண்டோ. 115

(ப—ரை) (1) ஆக்கை = சரீரத்தையும், இந்தியம் = இந்திரியங்களையும், உருவமா = உருவமாகவும், பிராணனை = பிராணவாயுவை, அசைவு (அது) ஆ = அசைவாகவும், அயலாக = வேருக, நோக்குவாய் என = நோக்குவாய் என்று ஏவ; நோக்கியே = அவ்விதமே நோக்கி, அருவமாய் = அருவமாய் இருந்து, நுழைமனம் = நினைக்கின்ற மனம், அறிவு ஆம் என் = அறிவு வடிவமாகிய, எனது, ஆக்கினைக்கு, உள் ஆய = உள்ளாகி நிற்க, முன் = பூர்வ வாசனையாகிய, உயிர் பண்பால் = ஜீவ சுபாவத்தால், (2) வீக்குறும் = கட்டுப்படும், (3) விவகாரம் உற்று = விவகாரங்களைப் பொருந்தி, அவற்றில், (4) ஆயினும் = ஆனாலும் அவைகள், விபு = வியாபகமும்—சர்வகர்த்தாவுமாகிய, எனை அலது = ஆத்மாவான என்னைத் தவிர, உண்டோ = இல்லை.

(அது—பகுதிப்பொருள் விகுதி, ஏ—அசை)

(பொ—ரை) சரீரத்தையும், இந்திரியங்களையும் உருவமாகவும், பிராணவாயுவை அசைவாகவும், வேருக நோக்குவாய்என்று ஏவ, அவ்விதமே நோக்கி அருவமாய் இருந்து நினைக்கும் மனம் அறிவு வடிவமாகிய எனது ஆக்கினைக்கு உள்ளாகி நிற்க, பூர்வ வாசனையாகிய ஜீவ சுபாவத்தால் விவகாரங்களைப் பொருந்தி அவற்றில் கட்டுப்படும். ஆனாலும் அவைகள் வியாபகமும் சர்வகர்த்தாவும் ஆகிய ஆத்மாவான என்னைத் தவிர (வேறு) இல்லை.

உடலிற் பல்பொறி பொறிகளில்
வாயுவு முயிர்ப்பினின் மனந்தானுந்
திடமுற் றொன்றின்மே லொன்றது
முதன்மையாஞ் சினமகங் கரங்காம
மிடர்சு கம்பயம் வாசனை
யால்வரு மெண்ணன்மட் டாநெஞ்சிற்
சுடர்த னக்கிலை நினைவினே
தாகுமென் சூழ்வலான் மனந்தாமோ. 116

(ப—ரை) (1) உடலில் = சரீரத்தைக் காட்டிலும், பல்பொறி = பல இந்திரியங்களும், பொறிகளில் = இந்திரியங்களைக் காட்டிலும், வாயுவு = பிராணவாயுவும், உயிர்ப்பினில் = பிராணவாயுவைக் காட்டிலும், மனம் (தான்) உம் = மனமும், திடமுற்று = செவ்வையாய், ஒன்றின் மேல் ஒன்று (அது), முதன்மையாம் = மேலாம், (3) சினம் = கோபம், அகங்காரம், காமம், இடர் = துன்பம், சுகம் = இன்பம், பயம் = பயம் முதலியவைகள், வாசனையால் வரும் = இவைகளெல்லாம் பூர்வ வாசனையால் தோன்றும், (2) எண்ணல் மட்டும் ஆம் = நினைவு மாத்திரமாகிய, நெஞ்சில் = மனதில், (4) இவைகளெல்லாம் சுடர் = ஞானப்பிரகாசமாகிய, தனக்கு = ஆத்மாவுக்கு, இலை = இல்லை, நினைவின் = மனதின், ஏது ஆகும் = மூலமாகிய என் ஆத்மாவானது, சூழ்வு அலால் = வியாபகத்தைத் தவிர, மனம் = அந்த மனமானது, தாமோ = தானே செல்லுமோ, செல்லாது.

(தான்—சாரியை, அது—பகுதிப்பொருள் விகுதி.)

(பொ—ரை) சரீரத்தைக் காட்டிலும் பல இந்திரியங்களும், இந்திரியங்களைக் காட்டிலும், பிராணவாயுவும், பிராணவாயுவைக் காட்டிலும், மனமும், செவ்வையாய் ஒன்றின் மேல் ஒன்று மேலாம். நினைவு மாத்திரமாகிய மனதில், கோபம், அகங்காரம், காமம், துன்பம், இன்பம், பயம் முதலியவைகள் பூர்வ வாசனையால் தோன்றும். இவைகளெல்லாம் ஞானப்பிரகாசமாகிய

ஆத்மாவுக்கு இல்லை. மனதின் மூலமாகிய ஆத்மாவான எனது வியாபகத்தைத் தவிர அந்த மனமானது தானே செல்லுமோ. (செல்லாது).

நினைவிற் றோற்றமா முடல்பிரா
ணன்பொறி நினைவுமாத் திரமாகக்
கனவிற் றோன்றிடச் சுழுத்தியிற்
றோன்றுருக் கணக்கினு லெனக்கென்றும்
முனை ந ஞுத்திரங் கனவதத்
திரந்துயின் மூடம்வே றெனமூன்று
தனுவு மன்னிய மாய்த்தெரிந்
திடுவதாற் றனித்தசித் துருநானே. 117

(ப—ரை) நினைவில், தோற்றமாம் = தோற்றுகின்ற, உடல் = சரீரம், பிராணன் = பிராணவாயு, பொறி = இந்திரியங்கள் என்பன, நினைவு மாத்திரமாக, கனவில் = சொற்பனத்தில், தோன்றிட = தோன்ற, சுழுத்தியில் = நித்திரையில், தோன்றுரு = தோன்ருத, கணக்கினுல் = படியினுல், (2) எனக்கு = ஆத்மாவாகிய எனக்கு, (1) என்றும் = எப்போதும், (4) முனை = எதிர்க்கின்ற, நனு = சாக்கிரம், திரம் = நிலையுள்ளதாம், கனவு அது, அத்திரம் = நிலையில்லாததும், துயில் = நித்திரை, மூடம் = அறியாமையாம், வேறென் = இவை அனைத்தும் வேறு என்று, மூன்று தனுவும் = மூன்று சரீரங்களையும், அன்னியமாய் = வேருக, தெரிந்திடுவதால் = அறிகிறதனுல், தனித்த = ஒப்பற்ற ஏகமான, சித்துரு = ஞான சொரூபம், நானே.

(அது—பகுதிப்பொருள் விகுதி.)

(பொ—ரை) எப்போதும் ஆத்மாவாகிய எனக்கு நினைவில் தோற்றுகின்ற சரீரம், பிராணவாயு, இந்திரியங்கள் என்பன நினைவு மாத்திரமாகச் சொற்பனத்தில் தோன்ற நித்திரையில் தோன்ருதபடியினுல் எதிர்க்கின்ற சாக்கிரம் நிலையுள்ளதாம். கனவு நிலையில்லாததும் நித்திரை அறியாமையாம். இவையனைத்தும் வேறென்று மூன்று

சரீரங்களையும் வேருக அறிகிறதினுல் ஒப்பற்ற ஏகமான ஞான சொரூபம் நானே.

## எண்சீர் விருத்தம்

பவிக்குஞ்சீ வனுக்குத்தூ லஞ்சூக்க மூலம்
பரனுக்குப் புருடனொடு காலபரம் வியோமஞ்
சிவத்திற்குப் பரம்விசுவக் கிராசமுப சாந்தந்
திகழ்நனவு கனவுதுயி னிரைநிரையின் மொழிந்த
வவத்தைக்கு விசுவன்றை சதனேடு பிராஞ்ஞன்
ஞனவிராட் டிரணியகர்ப் பன்னவியா கிருதன்
புவிக்கட்சிற் சொலிதைபிர சாபத்ய னேடு
பொற்புவிசாந் தன்னபிமா னப்பெயரா முறையே. 118

(ப—ரை) (2) பவிக்கும்=தோன்றுகின்ற, சீவனுக்கு, தூலம்=ஸ்தூல சரீரம், சூக்கம்=சூக்ஷ்ம சரீரம், மூலம் = காரண சரீரம், பரனுக்கு= ஈஸ்வரனுக்கு, புருடனேடு காலபரம் = புருஷனுடன் காலபரம், வியோமம், சிவத்திற்கு, பரம், விசுவக் கிராசம், உபசாந்தம் என்பன சரீரங்களாம், திகழ்=விளங்குகின்ற, நனவு=சாக்கிரம், கனவு=சொற்பனம், துயில்=சுழுத்தி, என்பன அவஸ்தைகளாம், நிரை நிரையில் = வரிசைக் கிரமமாக, மொழிந்த=சொல்லப்பட்ட, அவஸ்தைக்கு=அவஸ்தைகளுக்கு விசுவன், தைசதன் (ஓடு), பிராஞ்ஞன்=பிராஞ்ஞன் என்பதன் சீவனுக்கும், ஆனவிராட் இரணியகர்ப்பன்; அவியாகிருதன் என்பன ஈஸ்வரனுக்கும், (1) புவிக்கண் = பூமியில், (3) சிற்சொலிதை, பிரசாபத்யன் (ஓடு), பொற்பு விசாந்தன் = பொற்பு விசாந்தன் என்பன சிவத்திற்கும், (5) அபிமானப் பெயராம் = அவ்ஸ்தைகளின் அபிமானப் பெயர்களாம், (4) முறையே.

(ஓடு, ஓடு, ஒடு—மூன்றும் வேற்றுமை உருபுகள்.)

(பொ—ரை) உலகில் தோற்றுகின்ற சீவனுக்கு ஸ்தூல சரீரம், சூக்ஷ்ம சரீரம், காரண சரீரம். ஈஸ்வரனுக்கு புருடன்

காலபரம் வியோமம், சிவத்திற்குப் பரம் விசுவக்கிராசம், உபசாந்தம் என்பன சரீரங்களாம். விளங்குகின்ற சாக்கிரம் சொற்பனம் சுழுத்தி என்பன அவஸ்தைகளாம். வரிசைக் கிரமமாகச் சொல்லப்பட்ட அவஸ்தைகளுக்கு விசுவன், தைசதன், பிராஞ்ஞன் என்பன சீவனுக்கும், விராட் இரணியகர்ப்பன் அவியாகிருதன் என்பன ஈசனுக்கும், சிற்சொலிதை பிரசாபத்தியன் பொற்பு விசாந்தன் என்பன சிவத்திற்கும் முறையே அவஸ்தைகளின் அபிமானப் பெயர்களாம்.

சீவனுக்கு ஸ்தூல, சூக்ஷ்ம, காரணம் என்பன மூன்று சரீரங்களாம். ஈஸ்வரனுக்குப் புருடன் காலபரம், வியோமன் என்பன மூன்று சரீரங்களாம். சிவத்திற்குப் பரம் விசுவக்கிராசம், உபசாந்தம் என்பன மூன்று சரீரங்களாம். சீவனுக்கு சாக்கிரத்தில் விசுவன் எனவும், சொற்பனத்தில் தைசதன் எனவும், சுழுத்தியில் பிராஞ்ஞன் எனவும் அபிமானப் பெயர்களாம். ஈஸ்வரனுக்கு சாக்கிரத்தில் விராட் எனவும், சொற்பனத்தில் இரணிய கர்ப்பன் எனவும் சுழுத்தியில் அவியாகிருதன் எனவும் அபிமானப் பெயர்களாம். சிவத்திற்கு சாக்கிரத்தில் சிற்சொலிதை, சொற்பனத்தில் பிரசாபத்தியன், சுழுத்தியில் பொற்புவி சாந்தன் எனவும் அபிமானப் பெயர்களாம்.

தகுந்தூலங் கிரியாசம் பந்தஞ் சூக்க
தனுவிடய சம்பந்தங் கார ணந்தா
னகங்கார சம்பந்தஞ் சீவன் சித்த
மதன்சம்பந் தம்விராட் டுயர்போ கத்தின்
மிகுந்தாஞ் சம்பந்தமிர ணியக ருப்பன்
விட்சேப சம்பந்த மாயை மோகத்
துகந்தாய சம்பந்த மீச னிச்சை
யுடன்ஞானக் கிரியாசம் பந்த மன்றே. 119

(ப—ரை) தகும் = தகுந்த, தூலம் = ஸ்தூல சரீரமானது, கிரியா சம்பந்தம், சூக்கதனு = சூஷ்ம சரீரமானது, விடய சம்பந்தம், காரணம் (தான்) = காரண சரீரமானது, அகங்கார சம்பந்தம்,

சீவன்=சீவனுனவன், சித்தமதன் சம்பந்தம் = சித்தத்தின் சம்பந்தம், விராட் = விராட்டானது, உயர் = மேலான, போகத்தில், மிகுந்தாம் சம்பந்தம் = மிகவாகிய சம்பந்தம், இரணியகர்ப்பம் = இரணியகர்ப்பமானது, விட்சேப சம்பந்தம், மாயை = மாயையானது, மோகத்து = மோகத்தின், உகந்து ஆய = உயர்வாகிய, சம்பந்தம் = சம்பந்தமாம்; ஈசன் = ஈசனுனவன், இச்சையுடன், ஞான கிரியா சம்பந்தம்.

(அன்று, ஏ—அசைகள், தான்—சாரியை.)

(பொ—ரை) தகுந்த ஸ்தூல சரீரமானது கிரியா சம்பந்தம். சூக்ஷ்ம சரீரமானது விடய சம்பந்தம். காரண சரீரமான்து அகங்கார சம்பந்தம். ஜீவனுனவன் சித்தத்தின் சம்பந்தம். விராட்டானது மேலான போகத்தின் மிகவாகிய சம்பந்தம். இரணியகர்ப்பமானது விட்சேபசம்பந்தம். மாயையானது மோகத்தின் உயர்வாகிய சம்பந்தம் ஆம். ஈஸ்வரனுனவன் இச்சையுடன் ஞான கிரியா சம்பந்தம்.

## ஆசிரிய விருத்தம்

தூலவுட லிற்கிருத் தியமுநிட் கிரியையுஞ்
சூக்கமதி லேவிடயமுந்
தொடர்சித்த சஞ்சலமு மூலவுடலிற்குச்
சொலுந் தத்து வந்தெரிபடாச்
சாலமறை தலுமந்த காரமும் விராட்டுத்
தனக்குறு வியட்டி யஃதுஞ்
சமட்டியு மிரண்யகர்ப் பத்திற்றன்
மாத்திரையுஞ் சத்தியாம் விட்சேபமு
மாலின்மா யைக்குச்சர் வஞ்ஞத்து வம்படிக
வன்னமொரு பமுமுயிர்க்கு
வளர்கரண விந்திய சகாயமா
விடயமுண் வகையுமறி வாநிற்றலுஞ்

சீலமுறு மீசனுக் கிச்சைஞா னக்கிரியை
சேர்சொருப மதுவுஞானச்
சீர்வடிவு நிரைநிரையி னிற்பகிர் 120
முகத்துடன் றிகழந்தர் முகமாமரோ.

(ப—ரை)தூலஉடலில்=ஸ்தூல சரீரத்திற்கு,கிருத்தியமும்= விவகாரங்களும், நிட்கிரியையும் = விவகாரமின்மையும், சூக்குமத்தில் = சூக்ஷ்ம சரீரத்திற்கு, ஐவிடயமும் = பஞ்ச விஷயங்களும், தொடர்=தொடர்ந்த, சித்த சஞ்சலமும், மூல உடலிற்கு=காரண சரீரத்திற்கு, சொலும் தத்துவம் = சொல்லப் படுகின்ற தத்துவங்கள்,தெரிபடா=தோற்ருது, சாலமறைதலும்= நன்ருக மறைதலும், அந்த காரமும், விராட்டுத் தனக்கு=விராட் சரீரத்திற்கு, உறு வியட்டி அஂதும் = பொருந்திய வியஷ்டியும், சமட்டியும்=சமஷ்டியும், இரண்யகர்ப்பத்தில் = இரண்யகர்ப்ப சரீர்த்திற்கு, தன் மாத்திரையும், சத்தி ஆம், விட்சேபமும் = விட்சேப சக்தியும்,மாலின்=மயக்கத்தைச் செய்கின்ற, மாயைக்கு, சர்வஞ்ஞத்துவம்=சர்வஞ்ஞத்துவமும்,படிகவன்ன சொரூபமும்= ஸ்படிக வர்ண சொரூபமும், உயிர்க்கு = ஜீவனுக்கு, வளர் = வளர்கின்ற,கரண=அந்தக்கரண,இந்திய=இந்திரிய, சகாயமா= சகாயமாக, விடய = விஷயங்களை, உண்வகையும் = அனுபவித்தலும், அறிவா நிற்றலும்=அறிவாக இருப்பதும், சீலம் உறு=நன்மையுடைய, ஈசனுக்கு = ஈஸ்வரனுக்கு, இச்சை ஞான கிரியை, சேர் சொரூபம் (அது) உம்=சேர்ந்த சொருபமும், ஞான சீர்வடிவு=சிறந்த ஞான சொருபமும், நிரை நிரையினில்=நிரை நிரையாக,பகிர் முகத்துடன்=பகிர் முகமும்,திகழ்=விளங்குகின்ற, அந்தர்முகம் = அந்தர்முகமும். ஆம்(அரோ)=ஆகும்.

(பஞ்ச விஷயங்கள்:- சப்த, ஸ்பரிச, ரச, ரூப, கந்தம்.)
(அது—பகுதிப்பொருள் விகுதி. அரோ—அசை)

(பொ—ரை) ஸ்தூல சரீரத்திற்கு விவகாரங்களும் விவகாரமின்மையும், சூக்ஷ்ம சரீரத்திற்குப் பஞ்ச விஷயங்களும் தொடர்ந்த சித்த சஞ்சலமும், காரண சரீரத்திற்குச் சொல்லப் படுகின்ற தத்துவங்கள் தோற்ருது நன்ருக மறைதலும், அந்த காரமும், விராட் சரீரத்திற்குப் பொருந்திய வியஷ்டியும்

சமஷ்டியும், இரண்யகர்ப்ப சரீரத்திற்குத் தன் மாத்திரையும், விட்சேப சக்தியும், மயக்கத்தைச் செய்கின்ற மாயைக்குச் சர்வஞ்ஞத்துவமும், ஸ்படிக வர்ண சொரூபமும், ஜீவனுக்கு வளர்கின்ற அந்தக்கரண இந்திரிய சகாயமாக விஷயங்களை அனுபவித்தலும், அறிவாக இருப்பதும், நன்மையுடைய ஈஸ்வரனுக்கு இச்சை ஞானக்கிரியை சேர்ந்த சொரூபமும், சிறந்த ஞான சொரூபமும், நிரைநிரையாகப் பகிர்முகமும் விளங்குகின்ற அந்தர்முகமும் ஆகும்.

வெண்பா

அகோசரமா யொன்ரு யறிவாய தானே
யகோகோ சரமா மனந்தம்—விகாரப்
பிரபஞ்ச மாய்மறந்து பெத்தமா யோர்வு
வரநெஞ்சின் முத்தியுமா மன். 121

(ப—ரை) அகோசரமாம் = அறியப்படாததாய், ஒன்ருய் அறிவாய = அறிவு வடிவமாகிய தானே, அகோ = ஆச்சர்யம், (3) கோசரமாம் = அறியப்படுவனவாய், அனந்தம் விகார = முடிவற்ற விவகாரங்களான பிரபஞ்சமாய், (2) மறந்து = தன்னை மறந்து, (4) பெத்தமாய்=பந்தத் தன்மையை அடைந்து, பின்பு, (6) ஓர்வுவர = ஞானமுண்டாக, (5) நெஞ்சில் = மனதில், முக்தியுமாம்=மோக்ஷத் தன்மை அடையும், (7) மன் = நன்ருக. (விகாரம்=விகற்பம். பின்பு=முமூக்ஷப் பருவத்தில்.)

(பொ—ரை) அறியப்படாததாய் ஒன்ருய் அறிவு வடிவமாகிய தானே ஆச்சர்யம்! தன்னை மறந்து அறியப் படுவனவாய், முடிவற்ற விவகாரங்களான பிரபஞ்சமாய், பந்தத் தன்மையை அடைந்து பின்பு மனதில் ஞானமுண்டாக நன்ருக மோக்ஷத் தன்மையை அடையும்.

அனைத்துஞ் சடம்விடய மாமுலகே யாங்குத்
தனித்தவுணர் வாம்விடயி தானே—யினைத்தி
னறிந்தெவையுந் தாணுக்காண் பான்முத்த னீது
மறந்துழல்வா ரேபெத்தர் மன். 122

(ப—ரை) (1) அனைத்தும் = தோற்றுகின்றவை எல்லாம், சடம் = அறிவற்றதும், விடயம் = அறியப்படுவனவும், ஆம் = ஆகிய, உலகு (ஏ) = உலகமேயாம், (ஆங்கு) தனித்த = ஒப்பற்ற, உணர்வாம் = ஞான வடிவமான, விடயி = அறிகிறவனாகிய தானே, இனைத்தின் = இத்தன்மையுடையவனாய், அறிந்தெவையும் = அறியப்பட்டன யாவற்றையும், தாண = ஆத்மாவாகிய தானாக, காண்பான் = தெரிந்து கொள்பவனும்; முத்தன் = இவனே முத்தன் ஆவான்; ஈது = இத்தன்மையை மறந்து, உழல்வாரே = உழல்பவர்களே, (8) பெத்தர் = பந்தமடைவார்களாம், மன் = திடமாக. ஆங்கு—அசை.

(பொ—ரை) தோற்றுகின்றவை எல்லாம் அறிவற்றதும், அறியப்படுவனவும் ஆகிய உலகமேயாம். ஒப்பற்ற ஞான வடிவமான அறிகிறவனாகிய தானே இத்தன்மையுடையவனாய் அறியப்பட்ட யாவற்றையும் ஆத்மாவாகிய தானாக தெரிந்து கொள்பவனும். இவனே முத்தனுவான். இத்தன்மையை மறந்து உழல்பவர்களே திடமாகப் பந்தமடைவார்களாம்.

### கலிநிலைத்துறை

களங்க மாயைதான் பற்பல பேதமாய்க் காட்டி
யுளங்கொள் பந்தமாய்ச் சனிப்பொடு மரிப்பினை யுதவும்
அளந்தி டுஞ்சுசி மாயையோர் சின்மய மாயே
விளங்கு வித்துநித் தியசுக முத்தியாய் விடுமே. 123

(ப—ரை) களங்க மாயை (தான்) = அசுத்த மாயையானது, பற்பல பேதமாய் = அனேக விகற்பங்களாய், காட்டி, உளங்கொள் = மனதில் பொருந்திய, பந்தமாய், சனிப்பொடு மரிப்பினை = பிறப்பு இறப்புகளை, உதவும் = கொடுக்கும்,

அளந்திடும்=வேதங்களால் நிச்சயிக்கப்படுகின்ற, சுசிமாயை= சுத்த மாயையானது, ஓர் = ஒப்பற்ற, சின்மயமாய் (ஏ) = ஞான வடிவமாகி, விளங்குவித்து=விளங்கச் செய்து, நித்திய சுக= நித்தியானந்தமாகிய, முத்தியாய் விடும் (ஏ) = முத்தியாய்த் தோன்றும்.

(ஏ, ஏ—அசைகள். தான்—சாரியை.)

(பொ—ரை) அசுத்த மாயையானது, அநேக விகற்பங்களாய்க் காட்டி, மனதில் பொருந்திய பந்தமாய் பிறப்பு, இறப்புகளைக் கொடுக்கும். வேதங்களால் நிச்சயப்படுகின்ற சுத்த மாயையானது ஒப்பற்ற ஞான வடிவமாகி விளங்கச் செய்து நித்தியானந்தமாகிய முத்தியாய்த் தோன்றும்.

வெண்பா

ஆதியில தந்தமுள தாவ தவித்தைதா
ஞதியுள தந்தமில தாமுத்தி—யாதியுட
னந்த முளதுசகத் தாகுமே யாதியொடு
மந்த மிலதுபிர மம். 124

(ப—ரை) ஆதியிலது = ஆதியில்லாததாய், அந்தம் உளது ஆவது=அந்தமுடையதாய் இருப்பது,அவித்தை(தான்)= அஞ்ஞானமாம்; ஆதியுளது = ஆதியை உடையதாய், அந்தம் இலதாம்=அந்தம் இல்லாததாவது, முத்தி=மோக்ஷமாம்; ஆதி உடன் = ஆதியும், அந்தம் உளது = அந்தமும் உடையது, சகத்தாகும்(ஏ)=பிரபஞ்சமாம்; ஆதியொடும் அந்தம்=ஆதியும் அந்தமும், இலது=இல்லாதது, பிரமம்=பிரமமாம்.

(தான்—சாரியை. ஏ—அசை.)

(பொ—ரை) ஆதியில்லாததாய் அந்தமுடையதாய் இருப்பது அஞ்ஞானமாம். ஆதியுடையதாய் அந்தமில்லாததாவது முத்தியாம் (மோக்ஷமாம்). ஆதியும் அந்தமும் உடையது பிரபஞ்சமாம். ஆதியும் அந்தமும் இல்லாதது பிரமமாம்.

## கட்டளைக் கலித்துறை

ஓசை பரிச மொளிசுவை கந்த முருவமதாம்
வாசனை நல்லவுந் தீயவு நாமங்கண் மாயையிதே
மாசின் விடய மிதுவே றெனவே மயங்கல்பந்தத்
தேசிற் சதானந்த மாந்தா னெனுமத் திடமுத்தியே. 125

(ப—ரை) (2) ஓசை, பரிசம், ஸ்பரிசம், ஒளி, சுவை, கந்தம்=கந்தம் என்னும் இவைகள், உருவம் (அது) ஆம் = ரூபமாம், (1) வாசனை நல்லவும் தீயவும் = சுத்த வாசனையும், அசுத்த வாசனையும், நாமங்கள், நாமமாம், (3) மாயையிதே = இதுவே மாயை என்பதாம், மாசின் = குற்றமுடைய, விடயம் இது=இந்த விடயத்தை, வேறென (ஏ) = அன்னியமென்று, மயங்கல், பந்தம் = பந்தமாம், தேசின் = பிரகாசமான, சதா ஆனந்தமாம்= நித்திய சுகமாகிய, தான் எனும் = தானே என்னும், அத்திடம்=அந்தத்திடம், முத்தி (ஏ) = மோக்ஷமாம்.

(பொ—ரை) சுத்த வாசனையும், அசுத்த வாசனையும் நாமமாம். ஓசை, ஸ்பரிசம், ஒளி, சுவை, கந்தம் எனும் இவைகள் ரூபமாம். குற்றமுடைய இந்த விடயத்தை அன்னியமென்று மயங்கல் பந்தமாம். பிரகாசமான நித்திய சுகமாகிய தானே என்னும் அந்தத் திடம் மோக்ஷமாம்.

(அது—பகுதிப்பொருள் விகுதி, ஏ, ஏ—அசைகள்.)

## கலிவிருத்தம்

கடகல சாதிபோற் களிமண் டோற்றிடு
மடைவினி லுடல்சக மாதி போற்றிகழ்ந்
திடலறி வுருவமாம் யாளெ ருத்தனே
மடமைதான் மறந்திடன் மயக்கன் மாயையே. 126

(ப—ரை) (2) கட சலச ஆதிபோல் = குடம், கலசம் முதலியவைகளாக, (1) களிமண்=களிமண்ணனது, (3) தோற்றிடும், அடைவினில் = விதம்போல, (5) உடல் சகம் ஆதி போல் = சரீரம், பிரபஞ்சம் முதலியவைகளைப் போல,

திகழ்ந்திடல் = விளங்குகின்றேன் என்ற நிச்சயமே ஞானம், (4) அறிவு உருவமாம், யான் ஒருத்தனே = நான் ஒருவனே, மடமைதான் = அஞ்ஞானமாம், மறந்திடல் = இந்த நிச்சயத்தை மறத்தலே, (8) மயக்கல் = இவ்வாறு மயங்குவது, மாயை (ஏ)= மாயை என்பதாம். (ஏ—அசை.)

(பொ—ரை) களிமண்ணானது குடம், கலசம் முதலியவைகளாகத் தோற்றிடும் விதம் போல அறிவு உருவமாம் நான் ஒருவனே சரீரம், பிரபஞ்சம் முதலியவைகளைப்போல விளங்குகின்றேன் என்ற நிச்சயமே ஞானம். இந்த நிச்சயத்தை மறத்தல் அஞ்ஞானமாம். இவ்வாறு மயங்குவது மாயைஎன்ப தாம்

குறள் வெண்பா

ஓம்பாச்சங் கற்ப முரைவிகற்ப நாமமுரு
வாம்பா வனைமாயை யால். 127

(ப—ரை) ஓம்பா = வேண்டத்தகாத, சங்கற்பம்= சங்கற்பமும், உரை = சொல்லப்படுகின்ற, விகற்பம் = விகற்பமும், நாமம் = முறையே நாமமும், உரு = ரூபமுமாம், ஆம் = இவ்வாருகிய, பாவனை = பாவனையை உண்டாக்குவது, மாயை (ஆல்)= மாயையாம். (ஆல்—அசை.)

(பொ—ரை) வேண்டத்தகாத சங்கற்பமும் சொல்லப் படுகின்ற விகற்பமும் முறையே நாமமும் ரூபமுமாம். இவ்வாருகிய பாவனையை உண்டாக்குவது மாயையாம்.

அறுசீர் விருத்தம்

ஊற்றமா ஞான மாவ
துலோகாந்த குந்தம் போலப்
போற்றிய சிதாபா சாந்த
புத்தியின் விருத்தி யேயா
மாற்றலான் மாற்ற லாகு
மஞ்ஞானந் தனெக்கெ னத்தான்
ஞேற்றமில் லாமை என்றே
சொல்லுவர் நல்லோ ரெல்லாம். 128

(ப—ரை) ஊற்றமா = உறுதியான, ஞானமாவது, உலோக அந்த = இரும்பின் முனையாகிய, குந்தம் போல = ஈட்டிபோல, போற்றிய = கவனிக்கத்தக்க, சித் ஆபாச = ஜீவனது, அந்த = முடிவான, புத்தியின் = விருத்தியேயாம், ஆற்றலால் = திடஞானத்தால், மாற்றலாகும் = நீக்கப்படுகின்ற, அஞ்ஞானம் = அஞ்ஞானமாவது, தனக்கென (தான்) = தனக்கென்று, தோற்றம் இல்லாமை = விளக்கம் இல்லாமையே, என்று (ஏ) = என, (3) சொல்லுவர் = சொல்லுவார்கள். (1) நல்லோர் எல்லாம் = நல்லோர் யாவரும்.

(தான்—சாரியை. ஏ—அசை.)
(சித் + ஆபாசன் = சிதாபாசன் = ஞானம் போன்றவன்
சித் = ஞானம் = ஆத்மா.)

(பொ—ரை) நல்லோர்யாவரும் உறுதியான ஞானமாவது, இரும்பின் முனையாகிய ஈட்டிபோல் கவனிக்கத்தக்க ஜீவனது முடிவான புத்தியின் விருத்தியேயாம். திடஞானத்தில் நீக்கப்படுகின்ற அஞ்ஞானமாவது தனக்கென்று விளக்கம் இல்லாமையே எனச்சொல்லுவார்கள்.

### எழுசீர் விருத்தம்

பிரமசை தன்ய நனவினிற் சான்றாய்ப்
பிறங்குசீ வாத்துமா வென்று
மருகுசொற் பனத்திற் சாட்சியா யந்த
ராத்துமா வென்றுநற் சுழுத்தி
யிருளினிற் சாட்சி யாய்ப்பர மான்மா
வென்றுமூன் றவத்தையின் சான்றாய்ப்
பிரிவின்ஞா ஞன்மா கூடத்த ரென்னும்
பேசுமாற் றத்துவ நூலே. 129

(ப—ரை) (1) பிரம சைதன்யம் = அறிவு வடிவமான பிரமமானது, நனவில் = சாக்கிரத்தில், சான்றாய் = சாக்ஷியாகி,

பிறங்கு = விளங்குகின்ற, சீவாத்துமாவென்றும், அருகு = குறைகின்ற, சொற்பனத்தில், சாட்சியாய், அந்தராத்துமா, என்றும் = எனவும், நல் சுழுத்தி இருளினில் = இருள் போன்ற நல்ல சுழுத்தியில், சாட்சியாய், பரமான்மா என்றும், மூன்று அவத்தையின் சான்ருய் = இம் மூன்று அவஸ்தைகளுக்கும் சாக்ஷியாகி, பிரிவு இல் = பேதமற்ற, ஞானன்மா = ஞானுத்மா எனவும், கூடத்தர் என்றும் = கூடஸ்தர் எனவும், (3) பேசும் (ஆல்) = சொல்லும், தத்துவ நூல் (ஏ) = ஞானசாஸ்திரங்கள்.

(ஆல், ஏ—அசைகள்.)

(பொ—ரை) அறிவு வடிவமான பிரமமானது, சாக்கிரத்தில் சாக்ஷியாக விளங்குகின்ற ஜீவாத்மா என்றும், குறைகின்ற சொப்பனத்தில், சாக்ஷியாய் அந்தராத்மா என்வும், இருள் போன்ற நல்ல சுழுத்தியில், சாட்சியாய் பரமான்மா என்றும் இம் மூன்று அவஸ்தைகளுக்கும் சாக்ஷியாகி பேதமற்ற ஞானுத்மா எனவும், கூடஸ்தர் எனவும் ஞான சாஸ்திரங்கள் சொல்லும்.

## அறுசீர் விருத்தம்

பாரின்மறை யாற்றெளி வுறக்கேட்ட
    தாகும் பரோக்ஷமது வானசாக்ஷாத்
காரநிச் சயஞான மேயவாந்
    தரமொழி கலந்தகுரு வுபதேசநற்
சீரினு லேயனுக் கிரகமது
    பெற்றதே திகழ்மகா வாக்கியந்தா
னீரறிஞ ராற்புகலு மாப்தவாக்
    கியமே நிவர்த்திவாக் கியமென்பதே. 130

(ப—ரை) (1) பாரில் = உலகத்தில், (3) மறையால் = வேதத்தினுல், தெளிவுறக் கேட்டதாகும், பரோக்ஷம் = பரோக்ஷ ஞானமாவது, (5) அதுவான = அந்தப் பிரமமாகிய, சாக்ஷாத்கார = பிரத்யக்ஷ, நிச்சய, ஞானமே, (4) அவாந்தர மொழி = அவாந்தர வாக்கியமாவது, (7) கலந்த = ஐக்கியமாகிய, குரு = குருவின்

உபதேச நல் சீரினுலே = நல்ல உபதேசச் சிறப்பினுலே, அனுக்கிரகம் (அது) பெற்றதே, (6) திகழ் = விளங்குகின்ற, மகாவாக்கியம் (தான்) = மகா வாக்கியமாவது, (9) நீர் = சத்துவ குணமுடைய, அறிஞரால் = அறிவுடையோரால், புகலும் = சொல்லப்பட்ட, ஆப்த வாக்கியம் (ஏ) = ஆப்த வாக்கியமாம். (8) நிவர்த்தி வாக்கியம் என்பது (ஏ)

(அது—பகுதிப்பொருள் விகுதி தான்—சாரியை,)
(ஏ, ஏ—அசைகள். ஆப்தம் = உண்மை.)

(பொ—ரை) உலகத்தில் பரோக்ஷ ஞானமாவது வேதத்தினுல் தெளிவுறக்கேட்டதாகும். அவாந்தர வாக்கியமாவது அந்தப் பிரமமாகிய பிரத்யக்ஷ நிச்சய ஞானமே. விளங்குகின்ற மகாவாக்கியமாவது ஐக்கியமாகிய குருவின் நல்ல உபதேசச் சிறப்பினுலே அனுக்கிரகம் பெற்றதே. நிவர்த்தி வாக்கியம் என்பது சத்துவ குணமுடைய அறிவுடையோரால் சொல்லப்பட்ட ஆப்த வாக்கியமாம்.

## கலி விருத்தம்

மிகுசி ரத்தை விசாரநன் னிச்சயத்
தகவு ருமை சவண மனனமோ
டிகழ்வி லாநிதித் யாசனத் தின்றனிப்
பகைக ளென்னப் பழமறை யோதுமால். 131

(ப—ரை) (2) மிகு சிரத்தை = அதிக விஸ்வாசம், விசாரம் = ஆராய்ச்சி, நல்நிச்சயத்தகவு = நல்ல நிச்சயத் தன்மை என்னும் இவைகளை, உருமை = அடையாமையாம், (1) சவணம் = முறையே சிரவணம், மனனம், (ஓடு), இகழ்வு இலா = பழிப்பில்லாத, நிதித்தியாசனத்தின் = நிதித்தியாசனம் எனும் இவைகளின், தனி = ஒப்பற்ற, பகைகள் = பகைகளாவன, (3) என்ன = என்று, பழமறை = பழமையான வேதங்கள், ஓதும் (ஆல்) = சொல்லும்.

(ஓடு—மூன்றும் வேற்றுமை உருபு, ஆல்—அசை)
(நிதித்தியாசனம்—நிதித்தி = தியானம், திரும்பத் திரும்ப ஒரே பாவனை செய்தல்)

(பொ—ரை) முறையே சிரவணம், மனனம், பழிப்பில்லாத நிதித்தியாசனமென்னும் இவைகளின் ஒப்பற்ற பகைகளாவன அதிக விசுவாசம், ஆராய்ச்சி, நல்ல நிச்சயத்தன்மை என்னும் இவைகளை அடையாமையாம் என்று பழமையான வேதங்கள் சொல்லும்.

சிரவணத்தின் பகை சிரத்தையின்மை.
மனனத்தின் பகை விசாரமின்மை.
நிதித்தியாசனத்தின் பகை நிச்சயமின்மை.

### அறுசீர் விருத்தம்

நிச்சய ஞானத் தோடு
நிகழ்த்திய சமாதி ஞான
மச்சமில் சகச ஞான
மாவதா லடைவி னுக
நச்சிய சத்தாய்ச் சித்தாய்
நவிலுமா னந்த மென்ன
வைச்சபே ரினவா மூன்ரு
வரணமு மாயு மன்றே. 132

(ப—ரை) நிச்சய, ஞானத்தோடு = ஞானத்துடன், நிகழ்த்திய = விளங்குகின்ற, சமாதி ஞானம், அச்சமில் = பயமற்ற, சகசஞானம், ஆவதால் = என்னும் இவைகள் ஏற்படுவதால், அடைவினுக = முறையாக, நச்சிய = விரும்பிய, சத்தாய் = சத் எனவும், சித்தாய் = சித் எனவும், நவிலும் = சொல்லப்படுகின்ற, ஆனந்தமென = ஆனந்தமெனவும், வைச்ச = பிரித்து வைக்கப்பட்ட, பேரினவாம் = பெயரையுடையனவாகி, மூன்று = மூன்றின், ஆவரணமும் = ஆவரணங்களும், மாயும் அன்று (ஏ) = கெடும். (அன்று, ஏ—அசைகள்.)

(பொ—ரை) நிச்சய ஞானத்துடன் விளங்குகின்ற சமாதி ஞானம், பயமற்ற சகச ஞானம் என்னும் இவைகள் ஏற்படுவதால் முறையாக விரும்பிய சத் எனவும், சித் எனவும் சொல்லப்படுகின்ற ஆனந்தம் எனவும் பெயரையுடையனவாகி மூன்றின் ஆவரணங்களும் கெடும்.

குறிப்பு:— நிச்சய ஞானத்தால் சத்தாவரணமும், சமாதி ஞானத்தால் சித்தாவரணமும், சகச ஞானத்தால் ஆனந்தாவரணமும் நீங்கும். சத்து = இருப்பு

சித்து = ஞானம். ஆவரணம் = மறைப்பு, சத்து ஆவரணம் = சத்தின் மறைப்பு, சித்து ஆவரணம் = சித்தின் மறைப்பு. ஆனந்த ஆரணம் = ஆனந்தத்தின் மறைப்பு.

## எண்சீர் விருத்தம்

நீதமதாஞ் சமாதியிலக் கணம்வத்துத் தானாய்
நிற்பதுவா மவதிநினை யாதிருக்க விடய
வாதனைபோற் சமாதியின்வா தனைசாதி யாமல்
வரல்யுத்தி யிருளின்மயிற் குஞ்சுதர்க்க கர்மத்
தேதுவினாற் போனவர்க்குப் பஞ்சவன்ன வண்டா
யிடல்போல்வத் துவிலழுந்திப் பேராம லிருத்தல்
சூதகலும் பலமுடல மிருக்கும்போ தேநற்
சொரூபசாட் சாத்காரந் தானாவ தேயாம். 133

(ப—ரை) நீதம் (அது) ஆம் = நீதியாகிய, சமாதி இலக்கணம் = சமாதியின் இலக்ஷணமாவது, வத்து = வஸ்துவாகிய ஆத்மா, தானாய், நிற்பதுவாம் = இருப்பதாம், அவதி = எல்லையாவது, நினையாதிருக்க = தான் நினையாமலிருக்க, விஷய வாதனை போல் = விஷய வாசனைகள் தானே வருவது போல், சமாதியின் வாதனை, சாதியாமல் = அப்பியாசியாமல் வருதலாம், யுத்தி = யுத்தியாவது, இருளில், மயிற்குஞ்சு = மயிலின் குஞ்சானது, தர்க்க கர்மத்து ஏதுவினால் போனவர்க்கு, பஞ்ச வன்ன வண்டாயிடல் போல், வத்துவில் = ஆத்ம வஸ்துவில், அழுந்தி, பேராமல், இருத்தல் = இருத்தலாம், சூது அகலும் = வஞ்சனையற்ற, பலம் = பிரயோசனமாவது, உடலம் = சரீரம், இருக்கும்போதே, நல் = நல்ல, சொரூப சாட்சாத்காரம், தானாவதேயாம் = தானாக விளங்குதலாம்.

(அது—பகுதிப்பொருள் விகுதி.)

(பொ—ரை) நீதியாகிய சமாதியின் லக்ஷணமாவது வஸ்துவாகிய ஆத்மா தானாய் இருப்பதாம். எல்லையாவது தான் நினையாமலிருக்க விஷய வாசனைகள் தானே வருவது போல் சமாதியின் வாசனை அப்பியாசியாமல், வருதலாம். யுத்தியாவது மயிலின் குஞ்சானது தர்க்க கர்மத்தேதுவினால் போனவர்க்குப் பஞ்சவன்ன வண்டாயிடல் போல் ஆத்ம வஸ்துவில் அழுந்திப் பேராமல், இருத்தலாம். வஞ்சனையற்ற பிரயோசனமாவது சரீரம் இருக்கும்போதே நல்ல சொரூப சாட்சாத்காரம் தானாக விளங்குதலாம்.

தேவவுபா சனையதனாற் சித்தநிரோ தந்தே
சிகற்கனுகூ லந்தானாய் நடந்தவர்நற் கருணை
மேவிறிலஞ் ஞானவிரு ணிவர்த்திசிவ பத்தி
மேலீட்டால் விசுவலயஞ் சாட்சாத்கா ரத்தின்
சீவன்முத்தர்க் கனுகூல மாயவரைக் களிசெய்
திறத்தாலா னந்தசெனி தங்காருண் யத்தால்
வாவருமா னந்தபர வசமாகி யொழிவு
வைராகத் தால்வாத னக்ஷயமும் வருமால். 134

(ப—ரை) தேவவுபாசனை அதனால் = தெய்வ உபாசனையினால், சித்த நிரோதம் = மன அடக்கமாம், தேசிகற்கு = குருவுக்கு, அனுகூலம் (தான்) ஆய் = அனுகூலமாய், நடந்து, அவர் நற்கருணை = அவருடைய நல்ல கருணையை, மேவுறில் = பெற்றால், அஞ்ஞான இருள் = இருள் போன்ற அஞ்ஞானம், நிவர்த்தி = நீங்கும், சிவபக்தி, மேலீட்டால் = மிகுதலால், விசுவலயம் = உலகத்தோற்றம் போம், சாட்சாத்காரத்தின் = சாட்சாத்காரமுடைய சீவன் முத்தர்க்கு அனுகூலமாய், அவரை = அவர்களை, களிசெய் = சந்தோஷப்படுத்துகின்ற, திறத்தால் = தன்மையினால், ஆனந்த செனிதம் = ஆனந்தம் உதயமாம், காருண்யத்தால், வாவு அரு = தாண்டமுடியாத, ஆனந்த பரவசம், ஆகும் = ஏற்படும், ஒழிவு = உபரதி வைராக்கியத்தால், வாதனக்ஷயமும் = வாசனைகளின் நீக்கமும், வரும் = உண்டாகும். (தான்—சாரியை, ஆல்—அசை.)

(பொ—ரை) தெய்வ உபாசனையால் மன அடக்கமாம். குருவுக்கு அனுகூலமாய் நடந்து அவருடைய நல்ல கருணையைப் பெற்றால் இருள் போன்ற அஞ்ஞானம் நீங்கும். சிவபக்தி மிகுதலால் உலகத்தோற்றம் போம். சாட்சாத்காரமுடைய சீவன் முக்தர்க்கு அனுகூலமாய் அவர்களை சந்தோஷப்படுத்துகின்ற தன்மையினால் ஆனந்தம் உதயமாம். காருண்யத்தால் தாண்டமுடியாத ஆனந்த பரவசம் ஏற்படும். உபரதி வைராக்கியத்தால் வாசனைகளின் நீக்கமும் உண்டாகும்.

## கட்டளைக் கலித்துறை

நத்துஞ்செம் மைப்பண் பினன்வெண்
குணத்தவ னலல்வியல்பும்
வத்துஞ்செய் சிட்டியுங் காப்புசங்
காரமு மன்மனனத்
தொத்திம்ப ரிந்திர சாலமுஞ்
சொப்பன முந்துயிலு
மத்தன்சொற் றொந்த தசிப்பொரு
ளாந்தன் னனுபவத்தே. 135

(ப—ரை) (2) நத்தும் = விரும்புகின்ற, செம்மைப் பண்பினன் = சிவந்த குணம் எனப்படும் இராசதத்தையுடைய பிரமனும், வெண் குணத்தவன் = வெள்ளைக் குணம் எனப்படும் சத்துவத்தையுடைய விஷ்ணுவும், அலல் = கருப்பு, இயல்பும் = குணம் எனப்படும் தாமதத்தையுடைய, வத்தும் = வஸ்துவாகிய ருத்திரனும், செய் = முறையாகச் செய்கின்ற, சிட்டியும் = சிருஷ்டியும், காப்பு = ஸ்திதியும், சங்காரமும் = சங்காரமும், மன் = நன்றாக, மனனத்து = சிந்தனை செய்வதனால் முறையே, (4) ஒத்து = போன்று, (1) இம்பர் = இவ்வுலகத்தில், (3) இந்திர சாலமும், சொப்பனமும், துயிலும் = நித்திரையும், (6) அத்தன் சொல் = குருவின் வாக்கியமாகிய, தொம்தத் அசி = நீ அதுவாய் இருக்கிறாய் என்பதன், பொருளாம் = அர்த்தம் விளங்கும், (5) தன் அனுபவத்து (ஏ) = தனது அனுபவத்தில். (ஏ—அசை.)

(பொ—ரை) இவ்வுலகில் விரும்புகின்ற சிவந்த குணம் எனப்படும் இராசதத்தையுடைய பிரமனும், வெள்ளைக் குணம் எனப்படும் சத்துவத்தையுடைய விஷ்ணுவும், கருப்பு குணம் எனப்படும் தாமதத்தையுடைய வஸ்துவாகிய ருத்திரனும் முறையாகச் செய்கின்ற சிருஷ்டி, ஸ்திதி, சங்காரமும் நன்ருகச் சிந்தனை செய்வதனுல் முறையே இந்திரசாலமும், சொப்பனமும், நித்திரையும் போன்று, தனது அனுபவத்தில் குருவின் வாக்கியமாகிய நீ அதுவாய் இருக்கிருய் என்பதன் அர்த்தம் விளங்கும்.

## எண்சீர் விருத்தம்

ஒருவிகற்பு மில்லாத சிதானந்த ரசமா
முயர்பிரமத் தியானமதாந் தோற்றுகின்ற வெல்லாம்
பிரமமன்ருே வெனுந்தடத்த ஞானத்தாற் பேதப்
பிரபஞ்ச மறுப்பிரம நாகு மெனவப்
பொருளினையே தாகை வறியுத்தி மனனப்
பொலிவதனுற் பிரமவியல் பிரத்தியக்கிற் கிலதாப்
பரவிநினை மாயையறுந் திரும்பவந்த ரூபப்
பாவனையா நிதித்யாசத் தபரோட்சந் தானே. 136

(ப—ரை) ஒருவிகற்பும் = ஒருவிகற்பமும், இல்லாத, சித்தானந்த=ஞான சுக, ரசமாம் = இயல்பையுடைய, உயர்= மேலான, பிரமத் தியானம் (அது) ஆம்=பிரமத் தியானமாகிய, தோற்றுகின்ற எல்லாம், பிரமமன்ருே எனும்=பிரமம் அல்லவா என்கிற, தடத்த = தடஸ்த, ஞானத்தால், பேதப்பிரபஞ்சம், அறும்=ஒழியும், பிரமம், நான் ஆகும்=நான் ஆவேன், என அப்பொருளினையே = எனும் அந்த அர்த்தத்தையே, தாகை, அறி=அறிகின்ற, யுத்தி மனனப் பொலிவு அதனுல்=மனன யுக்தி விளக்கத்தால், பிரமவியல் = பிரமத்தின் லக்ஷணம், பிரத்தியகிற்கு= இச்சரீரத்திற்குள்ளிருக்கும், சாட்சிக்கு, இலதா= இல்லை என்று, பரவி நினை = தொடர்ந்து நினைக்கின்ற, மாயையறும்=மாயையின் வலிமை நீங்கும், திரும்ப=மறுபடியும்,

அந்த ரூப பாவனையாம் = அந்தப் பிரம சொருபத்தின் பாவனையாகிய, நிதித்தியாசத்து = தியானத்தினால், அபரோக்ஷந் தான், (ஏ) = அனுபவ ஞானம் ஏற்படும்.

(அது—பகுதிப்பொருள் விகுதி, தான்—சாரியை, ஏ—அசை.)
தடஸ்தம்—காரியத்தைக்கொண்டு காரணத்தை நிச்சயித்தல்.

(பொ—ரை) ஓர் விகற்பமும் இல்லாத ஞான சுக இயல்பையுடைய மேலான பிரமத் தியானமாகிய தோற்றுகின்ற எல்லாம் பிரமம் அல்லவா என்கிற தடஸ்த ஞானத்தால் பேதப் பிரபஞ்சம் ஒழியும். பிரமம் நான் ஆவேன் எனும் அந்த அர்த்தத்தையே தானாக அறிகின்ற மனன யுத்தி விளக்கத்தால் பிரமத்தின் லக்ஷணம் இச் சரீரத்திற்குள்ளிருக்கும் சாட்சிக்கு இல்லை என்று தொடர்ந்து நினைக்கின்ற மாயையின் வலிமை நீங்கும். மறுபடியும் அந்தப் பிரம சொருபத்தின் பாவனையாகிய தியானத்தினால் அனுபவ ஞானம் ஏற்படும்.

## கலிநிலைத்துறை

சத்தி னிற்சக மசத்தலா
விதத்தினாற் சத்தென்
றொத்து வேறிலா வகையினா
லுண்மைதா னுரைக்கின்
மெய்த்த சீர்நிர வயவம
தாகையால் விசாதீ
யத்து டன்சசா தீயமே
சுவகத மாகா. 137

(ப—ரை) (3) சத்தினில் = பிரமமாகிய சத்தினிடத்து, (2) சகம் = பிரபஞ்சமானது, (4) அசத் அலா விதத்தினால் = அசத்தாகவிராதபடியினாலும், சத்து என்று = சத்து என்பதாய், ஒத்து = அதைப்போன்று, வேறு இலாவகையினால் = வேறாக இல்லாதபடியினாலும், (1) உண்மைதான் உரைக்கில் = எதார்த்தத்தைச் சொல்லுமிடத்து, (6) மெய்த்த = உண்மையாகிய,

சீர்=சிறப்பையுடைய, நிரவயவம்=அவயவமற்றது, (5) அது= அந்தப் பிரமம், (7) ஆகையால் = ஆனபடியாலும், முறையே, விசாதீயத்துடன்=விசாதீயமும், சசாதீயம் (ஏ) = சசாதீயமும், சுபகதம்=சுபகதமும், ஆகா.

(ஏ—அசை) விசாதீயம்—வேறு சாதியை உடையது.
சசாதீயம்—சொந்த சாதியை உடையது.
சுவகதம்—அவயவம் உடையது.

(பொ—ரை) எதார்த்தத்தைச் சொல்லுமிடத்து பிரபஞ்சமானது, பிரமமாகிய சத்தினிடத்து அசத்தாக இராதபடியினாலும், சத் என்பதாய் அதைப்போன்று வேருக இல்லாதபடியினாலும், அந்தப்பிரமம் உண்மையாகிய சிறப்பை உடைய அவயவமற்றது ஆனபடியினாலும் முறையே விசாதியமும், சசாதீயமும், சுவகதமும் ஆகா.

## அறுசீர் விருத்தம்

புருடனை யரியென் ருற்போற்
புதல்வனை யான்மா வென்ன
றிருடனென் றிடல்போற் கட்டை
திரிவித வுடனு னென்ன
விருளறக் கட்டை கட்டை
யென்னல் போற்கரிநா னென்னன்
முருகுறு கௌண மித்தை
முக்கியான் மாவென் றேர்வாய். 138

(ப—ரை) (2) புருடனை = ஒரு மனிதனை, அரி என்ருற் போல் = சிறப்பித்து சிங்கம் என்று சொல்லுவது போலவாம், (1) புதல்வனை = தனது புத்திரனை, ஆன்மா என்னல், (5) திருடன், என்றிடல்போல் = என்று சொல்லுவது போலவாம், கட்டை = இருளில் ஒரு கட்டையை, (3) திரிவித = மூன்று விதமாகிய, உடல் = சரீரத்தை, நான் = ஆன்மா, என்னல், (7) இருளற = இருள் நீங்கி பிரகாசமானபோது, கட்டை = கட்டையை, கட்டை, என்னல் = என்று சொல்லுதல் போலவாம்,

முறையே இவைகள், (6) கரி = சாட்சியே, நான் = ஆத்மா, என்னல், முருகுறு = அழகு பொருந்திய, கௌணம் = கௌணான்மா, மித்தை = மித்தையான்மா, முக்கியான்மா என்று, ஓர்வாய் = அறிவாய்.

(பொ—ரை) தனது புத்திரனை ஆன்மா என்னல் ஓர் மனிதனைச் சிறப்பித்துச் சிங்கம் என்று சொல்லுவது போலவாம். மூன்று விதமாகிய சரீரத்தை ஆத்மா என்னல் இருளில் ஒரு கட்டையைத் திருடன் என்று சொல்லுவது போலவாம். சாட்சியே ஆத்மா என்னல் இருள் நீங்கி பிரகாசமானபோது கட்டையை கட்டை என்று சொல்லுதல் போலவாம். முறையே இவைகள் அழகு பொருந்திய கௌணான்மா, மித்தையான்மா, முக்கியான்மா என்று அறிவாய்.

## எண்சீர் விருத்தம்

உடனசத்தை மைந்தர்முயற் கோடு போல
வுபேட்சித்தல் சடத்தையுரு நாமம் விட்டு
முடிவில்சத்து மாத்திரமாய்ப் பார்த்தல் கோர
மூடவிருத் திகளையிட ரொழித்துச் சத்து
மிடியில்சித்து மாய்நோக்கல் சாந்த மான
விருத்தியைசற் சிற்சுகமாய்க் காணா லிவ்வா
விடயசுகத் தின்வழியே பிரமா னந்த
மேவுறலா மூடருக்கும் விருப்பத் தாலே. 139

(ப—ரை) (1) உடன் = தோன்றின உடனே, அசத்தை, மைந்தர் முயற் கோடு போல = மனிதர்கொம்பு முயற்கொம்பு போல, உபேட்சித்தல் = உபேட்சிக்கக் கடவர், சடத்தை = தோற்றினவுடனே சடத்தை, உருநாமம் விட்டு = நாமஉருவத்தை விட்டு, முடிவு இல் = அழிவற்ற சத்துமாத்திரமாக; பார்த்தல் = பார்க்கக் கடவர், கோர மூட விருத்திகளை, இடர் ஒழித்து = துன்பம் என்பதை விட்டு, சத்தும், மிடியில் = குறைவில்லாத, சித்தும் ஆய் = சித்தும் ஆக, நோக்கல் = பார்க்கக் கடவர், சாந்தமான விருத்தியை, சத்சித் சுகம் ஆக நல் = சச்சிதானந்தமாகத் தெரியக்

கடவர், (4) இவ்வா = இவ்வாறு, விடய சுகத்தின் வழியே, பிரமானந்தம், மேவுறலாம் = அடைதலாகும், (2) மூடருக்கும் = அறிவில்லாதவர்க்கும், (3) விருப்பதால்(ஏ) = மிகுந்த பிரியத்தால்
சடம்—அறிவற்றது. உபேட்சை—விருப்பு, வெறுப்பின்மை.
அசத்து—இல்லாதது. (ஏ—அசை)

(பொ—ரை) தோற்றினவுடனே அசத்தை மனிதர்க் கொம்பு முயற்கொம்பு போல உபேட்சிக்கக் கடவர்; தோற்றின உடனே சடத்தை நாம உருவத்தை விட்டு அழிவற்ற சத்து மாத்திரமாகப் பார்க்கக்கடவர், கோர மூட விருத்திகளைத் துன்பம் என்பதை விட்டு சத்தும் குறைவில்லாத சித்துமாகப் பார்க்கக் கடவர்; சாந்தமான விருத்தியைச் சச்சிதானந்தமாகத் தெரியக் கடவர். அறிவில்லாதவருக்கும் மிகுந்த பிரியத்தால் இவ்வாறு விடய சுகத்தின் வழியே பிரமானந்தம் அடைவதாகும்.

## அறுசீர் விருத்தம்

உகப்பி லந்தக் காரணத்தா
ஓுறுகற் பனையெல் லாமொழிந்து
நிகழ்த்து சான்றே நானென்று
நின்றக் கரணங் களைச்சாட்சி
யகத்தி லூன்றிக் கொண்டுடல
மாதி சமுசா ரங்களெலாம்
வகுப்பின் மறந்தாங் கானந்தா
வரண மதனை மாற்றுதியால். 140

(ப—ரை) உகப்பில் = பிரியத்துடன், அந்தக்கரணத்தால், உறு = பொருந்திய, கற்பனை எல்லாம் ஒழிந்து, நிகழ்த்து = விளங்குகின்ற, சான்றே = சாட்சியே, நானென்று, நின்று = நிலைத்து, அக்கரணங்களை = அந்தக்கரணங்களை, சாட்சி அகத்தில் = சாட்சியினிடத்து ஊன்றிக் கொண்டு, உடலமாதி = சரீரம் முதலிய சமுசாரங்களெல்லாம், வகுப்பின் = கிரமமாக, மறந்து (ஆங்கு), ஆனந்த ஆவரணம் அதனை = ஆனந்தாவரணத்தை, மாற்றுதி (ஆல்) = நீக்குவாய். (ஆங்கு, ஆல்—அசைகள்.)
ஆனந்த ஆவரணம்—ஆனந்தத்தின் மறைப்பு.

(பொ—ரை) பிரியத்துடன் அந்தக்கரணத்தால் பொருந்திய கற்பனை எல்லாம் ஒழிந்து விளங்குகின்ற சாட்சியே நானென்று நிலைத்து அந்தக்கரணங்களை சாட்சியினிடத்து ஊன்றிக் கொண்டு சரீரம் முதலிய சமுசாரங்களெல்லாம் கிரமமாக மறந்து ஆனந்தாவரணமதை நீக்குவாய்.

## எண்சீர் விருத்தம்

பகர்பஞ்சீ கரணமதாந் தூல பூத
 பௌதிகதத் துவவரையீ சுரசி ருட்டி
யகனனவு முதற்சீவன் முத்தி மட்டு
 மவத்தைகளின் கற்பனையு மவத்தை யுள்ளாய்
திகழ்குலம் வர்ணுசிரம லவுகீ கங்கள்
 சீவசிருட் டிகளென்ப விவைக ளீசன்
வகிர்தருகற் பனையேனும் பிதாவாற் றேன்று
 மகளயலான் புருடனுக்குப் போகச் சார்போல். 141

(ப—ரை) பகர் = சொல்லப்படுகின்ற, பஞ்சீகரணம், (அது) ஆம் = ஆகிய, தூலபூத = ஸ்தூல பூதங்கள், பௌதிக, தத்துவம் = தத்துவங்கள், வரை = வரையும், ஈசுர, சிருட்டி = சிருஷ்டியாம், அகல் = விஸ்தாரமான, நனவு முதல் = சாக்கிராவஸ்தை முதலாக, சீவன் முக்தி, மட்டும் = பரியந்தமாகிய. அவத்தைகளின் = அவஸ்தைகளுடைய, கற்பனையும் = கற்பனைகளும், அவத்தை யுள்ளாய் = அவஸ்தைகளுக்கு உட்பட்டு, திகழ் = விளங்குகின்ற, குலம் வர்ணுசிரம, லவுகீகங்கள் = உலக விவகாரங்களும், சீவசிருட்டிகள், என்ப = என்று சொல்லுவார்கள், இவைகள், ஈசன் = ஈசுவரனுடைய, வகிர்தரு = பிரிவுபட்ட, கற்பனையேனும் = கற்பனைகளானலும், பிதாவிற்றேன்று = பிதாவினிடத்துப் பிறந்த, மகள் = புத்திரி, அயலான் புருடனுக்கு = அயலான புருடனுக்கு, போகச்சார்போல் = போகத்திற்கு உரியவள் ஆதல் போலச் சீவசிருஷ்டிகளென்று சொல்லப்படுகின்றனை.

(அது—பகுதிப்பொருள் விகுதி. பஞ்சீகரணம்—ஐந்தின் கலப்பு, (பூதகாரியம்—பௌதீகம் எனப்படும்.)

(பொ—ரை) சொல்லப்படுகின்ற பஞ்சீகரணமாகியஸ்தூல பூதங்கள் பௌதிக தத்துவங்கள் வரையும் ஈஸ்வர சிருஷ்டியாம். விஸ்தாரமான சாக்கிராவஸ்தை முதலாகச் சீவன் முக்தி பரியந்தமாகிய அவஸ்தைகளுடைய கற்பனைகளும் அவஸ்தைகளுக்குட்பட்டு விளங்குகின்ற குலம் வர்ணாசிரம உலக விவகாரங்களும் சீவ சிருட்டிகள் என்று சொல்வார்கள். இவைகள் ஈஸ்வரனுடைய பிரிவுபட்ட கற்பனைகளானாலும், பிதாவினிடத்துப் பிறந்த புத்திரி அயலான புருடனுக்குப் போகத்திற்கு உரியவள் ஆதல் போலச் சீவ சிருட்டிகளென்று சொல்லப்படுகின்றன.

வியலீசன் சிருட்டிபிர ளயத்தொ ழிந்தும்
விரிந்தெவர்க்கு முத்தியிலை சீவன் செய்கை
மயலொழிவாற் சுழுத்திசமா தியிற்சம் சார
மற்றிலையீ சன்சிருட்டி யிருந்த போது
முயிர்வினையே சுகதுக்கா தியசம் சார
முறுமூல மீச்சுரனு லன்றென் றோர்ந்தே
யியலத்து விதமுறலா முயர்ச்சி ருட்டி
யெனவொழித்தீ சன்சிருட்டி யிருக்கும் போதே.
142

(ப—ரை) வியல் = பெருமை பொருந்திய, ஈசன் = ஈஸ்வரனது, சிருட்டி = சிருஷ்டியானது, பிரளயத்து = பிரளய காலத்து, ஒழிந்தும் = ஒழிந்தாலும் விரிந்த = விஸ்தாரமான, எவர்க்கும் = எல்லார்க்கும், முத்தியிலை = மோக்ஷமுண்டாவது இல்லை, சீவன் செய்கை = ஜீவச் செயலாகிய, மயல் ஒழிவால் = பேத மயக்கம் நீங்குவதால், சுழுத்தி சமாதியில் = சுழுத்தியிலும் சமாதியிலும், சம்சாரம் (மற்று) = விவகாரமாகிய சம்சாரமானது, இலை = இல்லை, ஈசன் சிருட்டி = ஈஸ்வர சிருட்டியானது, இருந்த

போதும்=இருந்த காலத்திலும், உயிர்வினையே=சீவச் செயலே, சுகதுக்காதிய சம்சாரம் = சுகதுக்கம் முதலிய சம்சாரமானது, உறும் மூலம்=உண்டாகும் காரணம் ஆகும், ஈஸ்வரனால் அன்று, என்று ஓர்ந்து (ஏ)= ஈஸ்வரனால் உண்டாவதல்ல என்று அறிந்து, (4) இயல்=சுபாவமான, அத்துவிதம் = அத்வைத முத்தியை, உறலாம்=அடையலாம்,(3) உயிர் சிருஷ்டி எனல்= சீவச் சிருட்டி என்பதை, ஒழித்து=நீக்கி. (2) ஈசன் சிருட்டி இருக்கும்போதே= ஈஸ்வரனுடையசிருஷ்டி இருக்கும் காலத்திலேயே.

(மற்று, ஏ—அசைகள்.)

(பொ—ரை) பெருமை பொருந்திய ஈஸ்வரனது சிருஷ்டியானது பிரளயகாலத்து ஒழிந்தாலும் விஸ்தாரமான எல்லார்க்கும் மோக்ஷம் உண்டாவதில்லை. ஜீவச்செயலாகிய பேத மயக்கம் நீங்குதலால் சுழுத்தியிலும் சமாதியிலும் விவகாரமாகிய சம்சாரமானது இல்லை.ஈஸ்வர சிருட்டியானது இருந்த காலத்திலும் சீவச் செயலே சுகதுக்கம் முதலிய சம்சாரமானது உண்டாகும் காரணமாகும். ஈஸ்வரனால் உண்டாவதல்ல என்று அறிந்து ஈஸ்வரனுடையசிருஷ்டி இருக்கும் காலத்திலேயே ஜீவ சிருஷ்டி என்பதை நீக்கிச் சுபாவமான அத்வைத முத்தியை அடையலாம்.

## பன்னிருசீர் விருத்தம்

இருவித சிருட்டியுறு நனவினிற் சீவவினை
யிற்றவர்கள் சீவன்முத்த
ரியல்சீவ துவிதமுப யம்மிதிற்
சாத்ரீய மெழில்வேத நூற்சொல்வழிகேட்
டொருமனதி னிண்ணயத் தத்வசித் தாந்தநல்
லுத்தியின் கிரமமுதலா
முட்கரண மார்க்கமே யாமசாத்
ரீயநூ லுரைபிறழ்ந்து துலகமெய்யாக்
கருதியக் கட்டின்வழி நிர்ணயத் துட்கரண
கருமமித னிற்றீவிரங்
காரியம் வரைக்காம மாதிசெய
லென்பர்சங் கற்பமன திற்ப்ரவிர்த்தி

தரியா தமைத்தன் மந் தம்மசாத் ரீயமிவை
சவணஞ்செய் முன்விடுத்த
ருன்ஞான வேட்கையறி வுற்றபின்
னீக்கிடுத றகுசீவன் முத்தியமைவே. 143

(ப—ரை) இருவித சிருஷ்டி = ஈஸ்வர சிருஷ்டி ஜீவசிருஷ்டி என்னும் இரண்டும், ஒரு நனவினில் = இருக்கும் சாக்கிராவஸ்தையிலேயே, சீவவினை = சீவச்செயலை, இற்றவர்கள் = ஒழித்தவர்கள், சீவன் முத்தர் = சீவன் முத்தராவர்; இயல் = பொருந்திய, சீவ துவிதம் = சீவத் துவிதமானது, உபயம் = இரண்டு விதமாம்; இதில், சாத்ரீயம் = சாஸ்திரீயம் என்பது, எழில் = நல்ல, வேதநூல் = வேத சாஸ்திரங்கள், சொல்வழி = சொல்லுகின்ற மார்க்கத்தை, கேட்டு, ஒரு மனதின் = ஒருமையான மனதில், நிண்ணய = நிச்சயமான, தத்துவ சித்தாந்த, நல் உத்தியின் = சகாயமான நல்ல யுக்தியின், கிரமம், முதலாம் = முதலாகிய உட்கரண மார்க்கமேயாம், அசாத்ரீயம் = அசாஸ்திரீயமாவது, நூல் உரை = சாஸ்திர வாக்கியத்தை, பிறழ்ந்து = கடந்து, உலகம் = உலகத்தை, மெய்யாக் கருதி = உண்மையாக நினைத்து, அக்கட்டின் வழி = அக்கட்டின் வழியே, நிர்ணயத்து = நிச்சயம் செய்வதாகிய, உட்கரண கருமம் = உட்கரண கருமமாம்; இதனில், தீவிரம் = தீவிரமானது, காரியம் வரை = காரியம் முடியும் அளவும் ஆகிய, காமம் ஆதி, செயல் என்பர் = செய்கைகள் என்பர், சங்கற்பம் = சங்கற்பமாவது, மனதில் பிரவிருத்தி = மனதின் பிரவிருத்தியாம், தரியாது = தாங்காது, அமைத்தல் = இதனைச் செய்தல், மந்தம் = மந்தமாம்; அசாத்ரீயம் = அசாஸ்திரீய மார்க்கமாகிய, இவை = இவற்றை, சவணஞ் செய்முன் = சிரவணம் செய்வதற்கு முன், விடுத்தல் (தான்) = விடுவது, ஞான வேட்கை = ஞானத்தின் இச்சையினுலாம்; அறிவுற்றபின் = ஞானம் அடைந்த பின், நீக்கிடுதல், தகு = தகுதியான, சீவன் முத்தியமைவு (ஏ) = சீவன் முத்தி விளக்கமாம்.

(தான்—சாரியை. ஏ—அசை)

(பொ—ரை) ஈஸ்வர சிருஷ்டி, ஜீவ சிருஷ்டி, என்னும் இரண்டும் இருக்கும் சாக்ராவஸ்தையிலேயே சீவச் செயலை

ஒழித்தவர்கள் ஜீவன் முக்தர் ஆவார். பொருந்திய ஜீவத்துவிதமாவது இரண்டு விதமாம். இதில் சாஸ்திரீயம் என்பது நல்ல வேத சாஸ்திரங்கள் சொல்லுகிற மார்க்கத்தைக் கேட்டு ஒருமையான மனதில் நிச்சயமான தத்துவ சித்தாந்த சகாயமான நல்ல யுக்தியின் கிரமம் முதலாகிய உட்கரண மார்க்கமேயாம். அசாஸ்திரீயமாவது சாஸ்தியரீவாக்கியத்தைக் கடந்து உலகத்தை உண்மையாக நினைத்து அந்தக் கட்டின் வழியே நிச்சயம் செய்வதாகிய உட்கரணகருமமாம். இதினில் தீவிரமாவது காரியம் முடியுமளவுமாகிய காமமாதி செய்கைகள் என்று சொல்வார்கள். சங்கற்பமாவது மனதின் பிரவிருத்தியாம். தாங்காது இதனைச் செய்தல் மந்தமாம். அசாஸ்திரீய மார்க்கமாகிய இவற்றைச் சிரவணம் செய்வதற்கு முன் விடுவது ஞானத்தின் இச்சையினுலாம். ஞானம் அடைந்த பின் நீக்கிடுதல் தகுதியான சீவன் முக்தி விளக்கமாம்.

## எண்சீர் விருத்தம்

பூதமெனும் பிரதிபந்த மவன வன்றன்
புத்தியனு சரித்துப்போ திக்கத் தீரும்
வாதபவு டியஞ்சனன மெடுக்க மாயும்
வர்த்தமா னம்விடயா சத்தி நான்கு
சாதனத்தாற் பிரபஞ்ஞாமாந் தம்பல் காலுஞ்
சவணத்தாற் குதர்க்கமன னத்தான் மற்றும்
பாதநிதித் யாசனத்தால் விபரீ தப்பேர்ப்
பாவனைபோம் துராக்ரவகஞ் சமாதி யாற்போம். 144

(ப—ரை) பூதமெனும் பிரதிபந்தம் = இறந்த காலப் பிரதிபந்தமென்பது, அவனவன்றன் = அவனவனுடைய, புத்தி = புத்தியை, அனுசரித்து, போதிக்க தீரும், வாதம் = வாதிக்கின்ற, பௌடியம் = எதிர்காலப் பிரபந்தமானது, சனனமெடுக்க = பிறவி எடுத்தால், மாயும் = தீரும், வர்த்தமானம் = நிகழ்காலப் பிரதிபந்தத்தில், விடயாசத்தி = விஷய இச்சையானது, நான்கு

சாதனத்தால் = நான்கு சாதனங்கள் வந்தால் தீரும், பிரபஞ்ஞாமாந்தம் = புத்தியின் மந்தத்தன்மையானது, பல்காலம் = பலதரம், சவணத்தால் = சிரவணம் செய்தலால் நீங்கும், குதர்க்கம் = குதர்க்கமென்பது, மனனத்தால் = மனனம் செய்தலால் தீரும், மற்றும் = பின்பு, பாத = பாதிக்கின்ற, நிதித்யாசனத்தால், விபரீதப்பேர் பாவனை = விபரீதப்பாவனை, போம், துராக்ரவகம் = துராக்கிரக அகங்காரமானது, சமாதியால் = சமாதியினால், போம் = போகும். பிரதிபந்தம் = தடை.

(பொ—ரை) இறந்தகாலப் பிரதிபந்தமென்பது அவனவனுடைய புத்தியை அனுசரித்துப் போதிக்கத் தீரும். வாதிக்கின்ற எதிர்காலப் பிரதிபந்தமானது பிறவி எடுத்தால்தீரும். நிகழ்காலப் பிரதிபந்தத்தில் விஷய இச்சையானது நான்கு சாதனங்கள் வந்தால் தீரும். புத்தியின் மந்தத் தன்மையானது பலதரம் சிரவணம் செய்தலால் நீங்கும். குதர்க்கமென்பது மனனம் செய்தலால்தீரும். பின்பு பாதிக்கின்றநிதித்தியாசனத்தால் விபரீத பாவனை போம். துராக்கிரக அகங்காரமானது சமாதியினால் போகும்.

### கொச்சகக் கலிப்பா

சுகிதுக்கி புண்ணியவான் சூழ்பா வியைக்காணின்
வகிமைத் திரிகருணை மாமுதிதை நன்னொதுமற்
றொகைசே ரிராகந் துவேடநலம் பண்ணுமை
நகுபாவ மாகியவிந் நாற்குணமு நீங்கிடுமே. 145

(ப—ரை) சுகி = சுகமுடையவன், துக்கி = துக்கம் அடைந்தவன், புண்ணியவான், சூழ் = தீமைகள் சூழ்ந்த, பாவியை = பாவி என்னும் இவர்களை, காணில், (3) வகி = நீ கொள்வாய், (2) மைத்திரி = முறையே சிநேகிதத் தன்மை, கருணை மா = பெருமை பொருந்திய, முதிதை = திருப்தி, நல் நொதுமல் = நல்ல விருப்பு, வெறுப்பு இல்லாமை என்னும் இவைகளை, (4) தொகை சேர் = அதனால் முறையே பலஇனங்களை வேண்டும், இராகம் = இச்சை, துவேடம், கோபம், நலம் = புண்ணியம்,

பண்ணுமை = செய்யாமை, நகு = இகழ்ந்து சிரிக்கப்பட்ட, பாவம். ஆகிய இந் நாற்குணமும் = ஆகிய இந்த நான்கு குணங்களும். நீங்கிடும் (ஏ) = நீங்கி விடும். (ஏ—அசை.)

(பொ—ரை) சுகமுடையவன், துக்கமடைந்தவன், புண்ணியவான், தீமைகள் சூழ்ந்த பாவியென்னும்இவர்களைக் காணில் முறையே சிநேகிதத் தன்மை, கருணை, பெருமை பொருந்திய திருப்தி, நல்ல விருப்பு, வெறுப்பு இல்லாமை என்னும் இவைகளை நீ கொள்வாய். அதனுல் முறையே பல இனங்களை வேண்டும். இச்சை, கோபம், புண்ணியம் செய்யாமை, இகழ்ந்து சிரிக்கப்பட்ட பாவம் ஆகிய இந்நான்கு குணங்களும் நீங்கி விடும்.

குறிப்பு:- சுகியினிடத்து சிநேகம் செய்தலால் இச்சை நீங்கும், துக்கியினிடத்தில் கருணை செய்தால் கோபம் நீங்கும். புண்ணியவானிடத்தில் திருப்தி அடைந்தால் புண்ணியம் செய்யவில்லை என்னும் எண்ணம் நீங்கும். பாவியினிடத்தில் உபேக்ஷை அடைந்தால் பாவம் நீங்கும்.

## வெண்பா

சந்திரிகை யுண்ணுஞ் சகோரந் தனை நிகர்வார்
சுந்தரமா ஞான சுகுணத்தர்—சந்ததமு
மன்ன மனையா ரருட்பத்தர் கன்மத்தார்
பன்றுடை போல்வார் பலர். 146

(ப—ரை) (3) சந்திரிகை = நிலா ஒளியை, உண்ணும், சகோரந்தனை = சகோரப் பட்சியை, நிகர்வார் = ஒப்பாவர், (2) சுந்தரம் ஆம் = அழகாகிய, ஞான சுகுணத்தார் = நல்ல ஞான குணத்தையுடையவர்கள், (1) சந்ததமும் = எப்போதும், (5) அன்னம் அனையார் = அன்னப் பட்சியைப் போல்வார்கள், (4) அருட்பத்தர் = அருளைப் பெறும் பத்தர்கள், (6) கன்மத்தார் = [illegible]யுடையவர்கள், பன்றுடை போல்வார் = [illegible]குச் [illegible]வர்கள், (7) பலர் = பலரும்.

முத்திநெறி

(பொ—ரை) எப்போதும் அழகாகிய நல்ல ஞானகுணத்தையுடையவர்கள் நிலா ஒளியை உண்ணும் சகோரப் பட்சியை ஒப்பாவார். அருளைப் பெறும் பக்தர்கள் அன்னப் பட்சியைப் போல்வார்கள். கருமங்களை உடையவர்கள் பலரும் பன்றுடைக்குச் சமமாவார்கள்.

கலிநிலைத்துறை

வாம தேவர்தம் மார்க்கத்தாற் கிரமநன் முத்தி
நீவு றும்பிபீ லிகைநெறி மார்ச்சால நியாயந்
தாவ றுஞ்சுக மார்க்கத்தாற் சத்தியோ முத்தி
நேவி கங்கமா நெறியினின் மர்க்கட நியாயம். 147

(ப—ரை) வாமதேவர் (தம்) மார்க்கத்தால், கிரம நல்முத்தி=கிரமமுத்தியாம், நீவுறும்=மிருதுவாகச் செல்லுகின்ற பிபீலிகை=சிற்றெறும்பின், நெறி = போக்காம், மார்ச்சால நியாயம் = பூனைக்குட்டி நியாயமாய், தாஅறும் = கேடில்லாத, சுக = சுகருடைய, மார்க்கத்தால், சத்தியோ முத்தி = சத்தியோ முத்தியாம், நே=அன்புடைய, விகங்க=பட்சியின், மா=பெரிய, நெறியினில் = போக்கில், மார்க்கட நியாயம் = குரங்குக்குட்டி நியாயமாம்.

(தாம்—சாரியை.) சத்தியோமுத்தி—இச்சரீரத்திலேயே முத்தி.

(பொ—ரை) வாமதேவர் மார்க்கத்தால் கிரம முத்தியாம். மிருதுவாகச் செல்லுகின்ற சிற்றெறும்பின் போக்காம். பூனைக்குட்டி நியாயமாய் கேடில்லாத சுகருடைய மார்க்கத்தால் சத்தியோ முத்தியாம். அன்புடைய பட்சியின் பெரிய போக்கில் குரங்குக் குட்டி நியாயமாம்.

கலிவிருத்தம்

நீய தாகம நேரது நான்மறை
தீய போதமுஞ் சீவத் துவமதும்
போய காலைப் பொருள்சரி யாமலால்
வாய தாக வரும்பல பேதமே. 148

(ப—ரை) நீ அது = நீ அந்தச் சிவமே என்பது, ஆகமம் = ஆகம மார்க்கமாம், நேர் = நேராக, அது நான் = அந்தச் சிவன் நானே யென்பது, மறை = வேத மார்க்கம், தீய = முறையே தீமையாகிய, போதமும் = தற்போதமும். சீவத்துவமதும் = ஜீவத்தன்மையும், போயகாலை = ஒழிந்த காலத்தில், பொருள் சரியாம் = பொருள் சரியாய் விளங்கும், அலால் = அப்படி அல்லாமல், வாயது ஆக = பேச்சு மாத்திரமாய் இருந்தால், வரும் பல பேதம் (ஏ) = அநேக பேத கற்பனைகள் ஏற்படும்.

(ஏ—அசை.) தற்போதம்—நான் என்னும் உணர்வு.

(பொ—ரை) நீ அந்தச் சிவமே என்பது ஆகம மார்க்கம். நேராக அந்தச் சிவம் நானே என்பது வேத மார்க்கமாம். முறையே தீமையாகிய தற்போதமும், ஜீவத்தன்மையும் ஒழிந்த காலத்தில் பொருள் சரியாய் விளங்கும்; அப்படி அல்லாமல் பேச்சு மாத்திரமாய் இருந்தால் அநேக பேத கற்பனைகள் ஏற்படும்.

## அறுசீர் விருத்தம்

மண்ணிற் கடமுன் னில்லைஎன்றும்
வந்தகடம்பின் னில்லை யென்றும்
பண்ணக் கடத்திற் படமுமந்தப்
படத்திற்கடமு மில்லை யென்றும்
விண்ணிற் கமல மொருகாலும்
விளங்கா தென்று மபாவமுறை
யண்ணற் பிராக்குப் பிரத்துவம்ச
மன்யோன் னியமத் யந்தமிதே. 149

(ப—ரை) மண்ணில், கடம் = குடம், முன் = உண்டாவதற்கு முன், இல்லை என்றும், வந்த கடம் = உண்டான குடமானது, பின் = உடைந்த பின், இல்லை என்றும், பண்ண = உண்டாக்க, கடத்தில் = குடத்தில், படமும் = வஸ்திரமும், அந்தப் படத்தில் = அந்த வஸ்திரத்தில், கடமும் = குடமும், இல்லை என்றும்,

விண்ணில் = ஆகாயத்தில், கமலம்=தாமரைப்பூ, ஒருக்காலும்= ஒரு காலத்திலும், விளங்காதென்றும் = இருக்கமாட்டாதென்றும், அபாவ முறை=அபாவத்தின் கிரமமாம், அண்ணல் பிராக்கு= இவ்வைகள் முறையே பெருமை பொருந்திய பிராக்பாவம் என்றும், பிரத்துவம்சம்=பிரத்துவம்ச பாவம் என்றும், அன்யோன்யம் = அன்னியோன்னியா பாவம் என்றும், அத்தியந்தம்=அத்தியந்தா பாவம் என்றும், இது (ஏ) = இப் பெயரையுடையனவாம். பிராக் அபாவம் = முன் இன்மை, பிரத்வம்ச அபாவம் = அழிந்த பின் இன்மை, அன்யோன்ய அபாவம்=ஒன்றில் மற்றொன்று இல்லாமை, அத்யந்த அபாவம்=முழுதும் இல்லாமை.

(ஏ—அசை.)

(பொ—ரை) மண்ணில் குடம் உண்டாவதற்கு முன் இல்லை என்றும், உண்டான குடமானது உடைந்த பின் இல்லை என்றும், உண்டாக்க குடத்தில் வஸ்திரமும் அந்த வஸ்திரத்தில் குடமும் இல்லை என்றும், ஆகாயத்தில்தாமரைப்பூ ஒருகாலத்திலும் இருக்கமாட்டாது என்றும், அபாவத்தின் கிரமமாம். இவைகள் முறையே பெருமை பொருந்திய பிராக் பாவம் என்றும், பிரத்துவம்ச பாவம் என்றும், அன்யோன்யா பாவம் என்றும், அத்தியந்தா பாவம் என்றும் இப்பெயரையுடையனவாம்.

## எழுசீர் விருத்தம்

தருபிதா சுதன்போற் பிறிபட்டும் பாலிற்
   றயிரெனத் தன்னுருக் கெட்டுங்
கருதொணுப் பிரம காரண மதனிற்
   காரிய சகமுதித் திலதா
லிருமையா ரம்ப முடன்பரி ணும
   மெனப்படா பழுதையிற் பணிபோல்
வருவதால் விவர்த்த பட்சமா நிரம்ச
   வானினீ லந்தலம் போல. 150

(ப—ரை) (1) தரு = கொடுக்கின்ற, பிதா = தகப்பன் சுதன்=புத்திரன், போல்=போல, பிறிபட்டும்=வேறு வேருகியும்,

பாலில்=பாலிலிருந்து மாறுபட்டு, தயிர் எ=தயிரானது போல, தன் உரு=தனது உருவம், கெட்டும், கருதவொண்ணு=நினைக்க முடியாத, பிரம காரணமதனில் = பிரமமென்னும் காரணத்தில், காரிய சகம் = காரியமான உலகம், உதித்திலதால் = உண்டாகாதபடியால், இருமை = இரு தன்மையுடைய, ஆரம்பம் (உடன்), பழுதையில் = பழுதையினிடத்து, பணிபோல் = பாம்பு தோன்றுதல் போல, வருவதால் = தோன்றுதலாலும், (3)விவர்த்த பக்ஷமாம்=விவர்த்த கிரமமாம், (2)நிரம்ச=அம்சமற்ற,வானில்= ஆகாயத்தில், நீலம் = நீல நிறமும், தலம் = இடமும், போல = தோன்றுதல் போலவும்.

(உடன்—மூன்றும் வேற்றுமை உருபு.)

(பொ—ரை) கொடுக்கின்ற தகப்பன், புத்திரன் போல வேறு வேருகியும் பாலிலிருந்து மாறுபட்டு தயிரானது போல தனது உருவம் கெட்டும் நினைக்க முடியாத பிரமம் என்னும் காரணத்தில் காரியமான உலகம் உண்டாகாதபடியால் இரு தன்மையுடைய ஆரம்பம் பரிணமம் என்று சொல்லப்பட்ட, பழுதையினிடத்து பாம்பு தோன்றுதல் போல தோன்றுதலாலும் அம்சமற்ற ஆகாயத்தில் நீல நிறமும் இடமும் தோன்றுதல் போலவும் விவர்த்த கிரமமாம்.

அறுசீர் விருத்தம்

திறவுப ரதியி னேது
திகழுமட் டாங்க யோக
நிறுவிய சொரூபஞ் சித்த
நிரோதமே காரி யந்தா
னறவிவ காரங் குன்ற
லவதியே சுழுத்தி போன்மெய்
மறவியாம் பிரம லோக
சாமீபம் வருப லங்காண். 151

(ப—ரை) (1) திறவு பரதியின் = மேன்மையான உபரதியின், ஏது, திகழும் = விளங்குகின்ற, அட்டாங்க யோகம் = அஷ்டாங்க யோகமாம், நிறுவிய = நிலைத்த, சொரூபம், சித்த நிரோதம்(ஏ) = மன அடக்கமாம், காரியம்(தான்), அற விவகாரங் குன்றல் = மிகவும் விவகாரம் குறைந்து விடுதலாம், அவதி(ஏ), சுழுத்தி போல் = நித்திரையிற் போல், மெய் = சரீரத்தை, மறவியாம் = மறத்தலாம், (3) பிரம் லோக சாமீபம் = பிரம லோகத்தை அடுத்திருத்தலாம், (2) வரு பலம்(காண்) = வருகின்ற பலம். காண்—முன்னிலை அசை.

(ஏ, ஏ—அசைகள். தான்—சாரியை.) ஏது—காரணம்
அவதி—எல்லை அல்லது முடிவு. பலம்—பிரயோசனம்.

(பொ—ரை) மேன்மையான உபரதியின் ஏது விளங்குகின்ற அஷ்டாங்க யோகமாம். நிலைத்த சொரூபம் மன அடக்கமாம். காரியம் மிகவும் விவகாரம் குறைந்து விடுதலாம். அவதி நித்திரையிற் போல் சரீரத்தை மறத்தலாம். வருகின்ற பலம் பிரமலோகத்தை அடுத்திருத்தலாம்.

விரவும்வை ராகத் தேது
விடயத்திற் ரோட திட்டி
சொரூபமே கான்ற கூழ்போற்
றோன்றல்கா ரியம்பின் னாசை
யருகுரு தொழிவ தாகு
மவதியே பிரம லோகம்
வரைதுரும் பாக வெண்ணல்
வருபலம் பிரம லோகம். 152

(ப—ரை) விரவும் = கலக்கின்ற, வயிராகத்து ஏது = வைராக்கியத்தின் ஏது, விடயத்தில் = விஷய போகங்களில், தோடதிட்டி = தோஷ திருஷ்டியாம், சொரூபம்(ஏ) = சொரூபமானது, கான்றக் கூழ் போல் = வாந்தி செய்த அன்னம் போல, தோன்றல் = தோன்றலாம், (3) காரியம், (2) பின் = பின்பு, (4) ஆசை = இச்சையை, அருகு உருது = குறைவர, ஒழிவதாகும் = நீங்குவதாம், அவதி (ஏ), பிரமலோகம் வரை = பிரமலோகம்

மட்டும், துரும்பு ஆக எண்ணல்=துரும்பு போல எண்ணுதலாம் வருபலம்=வருகின்ற பிரயோசனம், பிரமலோகம் = பிரம லோகமாம்.

(ஏ, ஏ—அசைகள்.) தோஷ திருஷ்டி—குற்றங்களைக்காணுதல்.

(பொ—ரை) கலக்கின்ற வைராக்கியத்தின் ஏது விஷய போகங்களில் தோஷ திருஷ்டியாம்; சொரூபமானது வாந்தி செய்த அன்னம் போல தோன்றலாம். பின்பு காரியம் இச்சையை குறைவர நீங்குதலாம் அவதி. பிரமலோகமட்டும் துரும்பு போல எண்ணுதலாம். வருகின்ற பிரயோசனம் பிரமலோகமாம்.

திகழ்ந்தஞா னத்திற் கேது
சிரவணு திகள் சொரூபம்
வகிர்ந்ததத் துவமித் யாபா
வனையதாங் காரி யம்பின்
னகங்காரக் கிரந்தி வாரா
தமைவதே யவதி முன்சட்
டகந்தானென் றற்போ லான்மாத்
தானெனல் பலமே மோக்ஷம். 153

(ப—ரை) திகழ் = விளங்கிய, ஞானத்திற்கேது, சிரவணுதிகள்=சிரவண மனன நிதித்தியாசனமாம், சொரூபம், வகிர்ந்த = பிரிக்கப்படுகின்ற, தத்துவ மித்தியாபாவனை (அது) ஆம்= தத்துவங்களைப் பொய்யாக எண்ணுதலாம். (ஏ) காரியம், பின்=பின்பு, அகங்காரக் கிரந்தி, வாராது அமைவது (ஏ) = வாராது இருத்தலாம், அவதி, முன்=முன் காலத்தில், சட்டகம்= சரீரம், தான் என்றற்போல் = தானே என்ற திடம் போல, ஆன்மா தான் எனல்=ஆத்மாவே தான் என்னும் திடமாம், பலம் (ஏ), மோக்ஷம்=முத்தியாம்.

(ஏ, ஏ—அசைகள்) அது—பகுதிப்பொருள் விகுதி.
கிரந்தி—முடிச்சு.

(பொ—ரை) விளங்கிய ஞானத்திற்கேது சிரவண மனன நிதித்யாசனமாம். சொரூபம் பிரிக்கப்படுகின்ற தத்துவங்களைப் பொய்யாக எண்ணுதலாம். பின்பு காரியம் அகங்காரக் கிரந்தி வாராது இருத்தலாம், அவதி. முன் காலத்தில் சரீரம் தானே என்ற திடம் போல ஆத்மாவே தான் என்னும் திடமாம். பலம் முத்தியாம்.

### வெண்பா

என்கோவே யென்திருவே யென்னல் கடைப்பத்தி
என்கண்ணே என்னுயிரே யென்னலிடை—யன்பாகுந்
தானே யெனலுத் தமமா கியபக்தி
யூற ரரக்கர்பகுப் போர். 154

(ப—ரை)(1)என்கோவே=எனது நாயகனே,என் திருவே= எனது செல்வமே, என்னல் = என்று பாவித்தல், கடைப்பத்தி, என் கண்ணே, என் உயிரே, என்னல்=என்று பாவித்தல், இடை அன்பு ஆகும்=இடைப் பத்தியாம். தானே எனல் = நீ நானே என்று பாவித்தல், உத்தமமாகிய பக்தி, ஊன் = மாமிசத்தை, ஆர் = புசிக்கின்ற, அரக்கர் = இராட்சதர் ஆவார், (2) பகுப்போர் = சிவத்தைப் பிரித்துக் காண்போர்.

(பொ—ரை) எனது நாயகனே, எனது செல்வமே என்று பாவித்தல் கடைப்பத்தி. என் கண்ணே, என் உயிரே என்று பாவித்தல் இடைப்பத்தியாம். நீ—நானே என்று பாவித்தல் உத்தமமாகிய பத்தி. சிவத்தைப் பிரித்துக் காண்போர் மாமிசத்தைப் புசிக்கின்ற இராட்சதர் ஆவார்.

### கட்டளைக் கலித்துறை

நாதன் குருமன்னன் மூதாதை
தந்தையண் ணன்கணவன்
மாதுலன் றம்பியம் மான்மைத்
துனன்றன் மகன்மருக
னேதில னட்டான் பகையென்
றொருவனே யேபலரு
மோதுவர் யாவ னவன்றத்து
வத்தும்வைத் தோர்ந்திடுமே. 155

(ப—ரை) நாதன் = தலைவன், குரு, மன்னன் = அரசன், மூதாதை=பாட்டன், தந்தை=தகப்பன், அண்ணன்=தமையன், கணவன் = நாயகன், மாதுலன், தம்பி, அம்மான் = மாமன், மைத்துனன், தன் மகன், மருமகன், ஏதிலன் = அன்னியன், நாட்டான்=சினேகிதன், பகை=பகைவன், என்று ஒருவனையே பலரும், ஓதுவர் = சொல்லுவார்கள், யாவன் அவன் = அந்த ஒருவனை யார் என்று சொல்லலாம்? தத்துவத்தும் = சிவம் முதலிய தத்துவங்களுக்குள்ளும், வைத்து = இவ்விதமாக வைத்து, ஓர்ந்திடும் (ஏ) = அறிந்து கொள்ளுங்கள்.

(ஏ—அசை. தான்—சாரியை) மாதுலன்—மனைவியின் பிதா.

(பொ—ரை) தலைவன், குரு, அரசன், பாட்டன், தகப்பன் தமையன், நாயகன், மாதுலன், தம்பி, மாமன், மைத்துனன், மகன், மருமகன், அன்னியன், சினேகிதன், பகைவன் என்று ஒருவனையே பலரும் சொல்லுவார்கள். அந்த ஒருவனை யார் என்று சொல்லலாம்? சிவம் முதலிய தத்துவங்களுக்குள்ளும் இவ்விதமாக வைத்து அறிந்து கொள்ளுங்கள்.

### வெண்பா

தசமனைக் காணு தவன்றசமத் தேட்ட
மிசைவுற்றுத் தான்றசம னேயாய்த்—தசம
வனுபவமுந் தீர்வுற் றமர்ந்திடுவ தன்றோ
நினையிற் சுபாவ நிலை. 156

(ப—ரை) தசமனை = பத்தாவானை, காணுதவன் = பாராதவன், தசமத் தேட்டம் = பத்தாவானைத் தேடிக் காண வேண்டும் என்னும் எண்ணத்தை, இசைவுற்று = அடைந்து, தான்=அறிவிக்கும் ஒருவனால் தானே, தசமன் (ஏ) = பத்தாவான், ஆய = ஆகி, தசம அனுபவமும் = பத்தாவான், நானாகவே இருந்தேனே என்னும் அனுபவமும், தீர்வுற்று = நீங்கி, அமர்ந்திடுவது = இருப்பது, அன்றோ = அல்லவா, நினையிற் = யோசித்துப் பார்க்கின், சுபாவ நிலை=சுபாவ நிலையாம்.

(ஏ—அசை.)

(பொ—ரை) பத்தாவானைப் பாராதவன் பத்தாவானைத் தேடிக் காணவேண்டும் என்னும் எண்ணத்தை அடைந்து அறிவிக்கும் ஒருவனால் தானே பத்தாவான் ஆகிபத்தாவான் நானாகவே இருந்தேனே என்னும் அனுபவம் நீங்கி இருப்பது அல்லவா, யோசித்துப்பார்க்கின் சுபாவ நிலையாம்.

இவ்வுவமானத்தைக் கொண்டு உபமேயத்தை அறிக.

அதாவது: தன்னை அறியாதவன் தன்னை ஆராய்ந்து அறியவேண்டுமென்னும் தேட்டத்தை அடைந்து தான் தானே என்று அறிந்து அவ்விசேஷ அனுபவம் நீங்கி இருப்பதே சுபாவ நிலையாம். தான்—சிவன் அல்லது ஆத்மா.

## குறள் வெண்பா

இவன்றசம னானலெல் லாருந் தசமத்
துவம்பெறுவர் தீருந் துயர். 157

(ப—ரை) இவன்=பத்துப்பேர் ஆற்றிலிறங்கிக் கரையேறி, எண்ணிப்பார்க்கும்பொழுது தன்னைக் கருதாமல் மற்ற ஒன்பது பேரைக் கண்டு பத்தாவான் ஆற்றோடு போய்விட்டானென்று வருந்துகிற ஒருவன், தசமன் ஆனால் = வழியில் வந்த ஒருவன் அறிவிக்க, எண்ணிப் பார்க்கத் தானே பத்தாவன் என்று அறிந்து கொண்டால், எல்லாரும்=மற்ற ஒன்பது பேரும், தசமத்துவம்= பத்தாவானாகும் தன்மையே, பெறுவர் = அடைவார்கள், தீரும் துயர்=வருந்திய துன்பமும் நீங்கும்.

(பொ—ரை) பத்துப்பேர் ஆற்றிலிறங்கிக் கரையேறி, எண்ணிப் பார்க்கும் பொழுது தன்னைக் கருதாமல் மற்ற ஒன்பது பேரைக் கண்டு பத்தாவான் ஆற்றோடு போய்விட்டான் என்று வருந்துகிற ஒருவன், வழியில் வந்த ஒருவன் அறிவிக்க, எண்ணிப் பார்க்கத் தானே பத்தாவான் என்று அறிந்து 'கொண்டால் மற்ற ஒன்பது பேரும் பத்தாவான் ஆகும் தன்மையை அடைவார்கள். வருந்திய துன்பமும் நீங்கும்.

இவ்வுவமானத்திற்கு உபமேயமாவது:- தன்னை அறிய வேண்டுமென்னும் தேட்டமுடையவன் தன்னை அறிந்து கொண்டால் சர்வமும் தானாக விளங்குவன். சர்வ துக்கமும் நீங்கும்.

### வெண்பா

அவ்வவ் வியல்கொண் டருமறையோர் நீசராய்ச்
செவ்வன் னடித்துந் திகழ்கூத்தர்க்—கவ்வக்
குலமும் பயனுங் குணமுமுண்டோ பின்னு
மிலரப் பெயர்கூத்த ரென்று. 156

(ப—ரை) அவ் அவ் இயல் கொண்டு = அந்த அந்த சுபாவத்தை அடைந்து, அருமறையோர் = அருமையான வேதம் உணர்ந்த பிராமணன், நீசர் = புலையர், ஆய் = போல் ஆகி. செவ்வன் = நன்றாக. நடித்தும் = அபிநயம் செய்தும், திகழ் = விளங்குகின்ற, கூத்தர்க்கு, அவ் அக்குலமும் = அந்த அந்த குலமும், பயனும் = பிரயோசனமும், குணமும், உண்டோ = உண்டா, இல்லை, பின்னும் = மேலும், இலர் அப்பெயர் கூத்தர் என்று = கூத்தர் என்று அப்பெயர் கூட இல்லாதவராவர்.

(பொ—ரை) அந்த அந்த சுபாவத்தை அடைந்து. அருமையான வேதமுணர்ந்த பிராமணன், புலையர் போலாகி நன்றாக அபிநயம் செய்து விளங்குகின்ற கூடத்தர்க்கு அந்த அந்த குலமும் பிரயோசனமும், குணமும் உண்டா. இல்லை. மேலும் கூடத்தர் என்று அப்பெயர் கூட இல்லாதவர் ஆவர்.

ஆத்மாவானது தன்னிடத்திருக்கும் இத்தன்மையதென்று நிச்சயிக்க முடியாத மாயா சக்தியினால் ஜக சீவ பரம் போலவும் பந்த முத்தித் தன்மையை அடைந்தது போலவும் தோற்றினும் உண்மையில் தன்னைத் தவிர வேறொன்றும் இல்லாததாம்.

எல்லாப் பணிகாரத் திற்குஞ் சுவைவெல்ல
மல்லாற் கொடுத்த தயலுண்டோ—வில்லாப்
பணியைப் பழுதை படைத்ததுகொல் கொப்பு
ட்ணியிற் குறைவென் சலத்து. 159

(ப—ரை) (1) எல்லா, பணிகாரத்திற்கும்=பலகாரத்திற்கும், சுவை=சுவையை, (3) வெல்லம் அல்லால் = வெல்லத்தைத் தவிர, (2) கொடுத்தது, (4) அயல் உண்டோ = அன்னியம் ஒன்று உள்ளதா, இல்லை. இல்லா = உண்மையாக இல்லாத, பணியை=பாம்பை, பழுதை = பழுதையானது, படைத்தது கொல்=உண்டாக்கினதோ, இல்லை.(6) கொப்புள்=குமிழியானது, தணியில்=அடங்கினுல், குறைவு என் = என்ன குறைவாம், (5) சலத்து=நீரில்.

(பொ—ரை) எல்லாப் பலகாரத்திற்கும் சுவையைக் கொடுத்தது வெல்லத்தைத் தவிர அன்னியம் ஒன்றுள்ளதா. இல்லை. உண்மையாக இல்லாத பாம்பை பழுதையானது உண்டாக்கினதோ. இல்லை. நீரில் குமிழியானது அடங்கினுல் என்ன குறைவாம்?

இவ்வுவமானத்திற்கு உபமேயம் :-சகல விஷய சுகங்களும் தனது சுகவடிவின் இலேசப் பிரதிபிம்பமாம். சுகவடிவமான ஆத்மாவைத் தவிர துக்கவடிவமான எல்லாவற்றையும் அவ் ஆத்மா உண்டாக்கவில்லை. ஆனுல் அஞ்ஞானத்திலேயே தோற்றுகின்றது, ஆத்மாவினிடத்தில் தோற்றுகிற இச்சரீராதிகள் அழிந்ததனுல் ஆத்மாவிற்கு ஓர் குறைவுமில்லை.

பழுதை கிளிஞ்சிலெனப் பார்த்துணரா மூடர்
கழிபாம்பு வெள்ளியெனக் கண்டு—முழுமயலா
யச்சம் விடங்கொண் டமர்கலகஞ் செய்வர்பினு
நிச்சம் விசாரியார் நின்று. 160

(ப—ரை) (1) பழுதை=இது பழுதை, கிளிஞ்சல் என= இது கிளிஞ்சல் என்று, பார்த்து உணரா=உண்மையைக் காணுத,

மூடர், கழி=பெரிய, பாம்பு, வெள்ளியென் = வெள்ளியென்று கண்டு=நிச்சயித்து,முழுமயலாய்=பெரு மயக்கத்தை அடைந்து அச்சம்=பயத்தையும், விடம்=விஷத்தையும், கொண்டு=ஏற்று அமர் கலகம் செய்வர்=பொருந்திய கலகத்தைச் செய்வார்கள், பினும்=பின்னும், (3) நிச்சம் = எப்போதும், விச்சாரியார் = ஆராய்ந்து பார்க்கமாட்டார்கள்; (2) நின்று=நினைத்து.

(பொ—ரை) இது பழுதை, இது கிளிஞ்சில் என்று உண்மையைக் காணாத மூடர், பெரிய பாம்பு வெள்ளியென நிச்சயித்து பெரும்மயக்கத்தை அடைந்து, பயத்தையும் விஷத்தையும் ஏற்று பொருந்திய கலகத்தைச் செய்வார்கள். பின்னும் நினைத்து ஆராய்ந்து பார்க்கமாட்டார்கள்.

இவ்வுவமானத்திற்கு உபமேயம்:- சச்சிதானந்தமென்று தன்னையறியாத மூடர் அசத்து சடம் துக்கமான சரீராதி பிரபஞ்சமாகக் கண்டு பந்த விவ்காரங்களையே செய்து பிறந்து இறந்து உழல்வார்கள்.

பூணுங் கடத்துருவும் பொன்மண் ணலாதுண்டோ
தூணுங் கயிறுமலாற் சோரனராக்—காணுவதோ
மைந்தன் மருப்பு மலரென்ற சொல்லுமிலை
வந்திமுயல் வானின் வழி. 161

(ப—ரை) பூணும் = ஆபரணமும், கடத்துருவும் = குடத்தின் உருவமும், பொன் மண் அலாது = முறையே பொன்னையும் மண்ணையும் தவிர, உண்டோ=இல்லை, தூணும், கயிறும், அல்லாமல், சோரன் = முறையே திருடனும், அரா = சர்ப்பமும், காணுவதோ=தோன்றுமோ, (3)மைந்தன்=முறையே மகன், மருப்பு = கொம்பு, மலர் = புஷ்பம், என்ற சொல்லும், இலை=இல்லை, (2) வந்தி=மலடி, முயல், வானின் = ஆகாயம் என்னும் இவைகளின், வழி=இடத்து.

(பொ—ரை) ஆபரணமும், குடத்தின் உருவமும் முறையே பொன்னையும் மண்ணையும் தவிர இல்லை. தூணும், கயிறும் அல்லாமல் முறையே திருடனும் சர்ப்பமும் தோன்றுமோ. மலடி,

முயல், ஆகாயம் என்னும் இவைகளினிடத்து மகன், கொம்பு புஷ்பம் என்ற சொல்லும் இல்லை.

இவ்வுவமானத்திற்கு உபமேயம்:- தன்னைத் தவிர அன்னியம் இல்லை என்பதாம். முதல் இரண்டு உபமானத்திற்கும் உபமேயம் மூன்ருந்தரமான ஞானிகள், இரண்டாவது இரண்டு உபமானத்திற்கும் உபமேயம் இரண்டாந்தர ஞானிகள். மூன்ருவது மூன்று உபமானங்களுக்கும் உபமேயம் முதல்தர ஞானிகள்.

எல்லாந்தா ஞுக விருக்கு முணர்வுருவாய்
நில்லாதந் தோவிந் நிசித்தவுடல்—பொல்லாப்
பிரபஞ்சம் யானெனதாப் பேணியல மாத்த
லரவென் றிரச்சுவை யோர்ந்தற்று. 162

(ப—ரை) எல்லாம் தாஞுக இருக்கும், உணர்வுருவாய்= ஞானவடிவாய், நில்லாது = நில்லாமல், அந்தோ, இந்நிசித்த உடல் = இவ்வசுத்த சரீரத்தையும், பொல்லா = கெடுதலான, பிரபஞ்சம்=உலகத்தையும், யான் எனதா=யான் எனது என்று, பேணி=கருதி, அலமாத்தால்=துன்பம் அடைதல்,அரவென்று= பாம்பு என்று, இரச்சுவை = கயிற்றை, ஓர்ந்தற்று = அறிந்தது போலவாம்.

(பொ—ரை) எல்லாம் தாஞுக இருக்கும் ஞான வடிவமாய் நில்லாமல் அந்தோ, இவ்வசுத்த சரீரத்தையும் கெடுதலான உலகத்தையும் யான் எனது என்று கருதி துன்பமடைதல் பாம்பு என்று கயிற்றை அறிந்தது போலவாம்.

பூணழிப்பர் கொல்லோநற் பொன்ஞுகக் கள்வனைப்போய்த்
தாஞுவைத்தா வென்று தடிவர்கொலோ—வீணின்
முயற்கோடு தன்னை முறித்திடுவ மென்று
செயற்கோடு வாரோ சிலர். 163

(ப—ரை) பூண் = ஆபரணத்தை, அழிப்பர்கொல்(ஓ)= அழிப்பார்களா, (1) நற்பொன்ஆக = நல்ல பொன்னுவதற்கு கள்வனை=இரவிற் கண்ட திருடனை,போய்=அவனருகிற் சென்று தாணுவை=கட்டையை, தா என்று = கொடு என்று, தடிவர் கொல் (ஓ)=அடிப்பார்களா, (5) வீணில்=வீணுக, முயல் கோடு தன்னை=முயலின் கொம்பை, முறித்திடுவம் = முறித்திடுவோம் என்று=என்று நினைத்து, செயற்கு=அச்செயலைச் செய்வதற்கு ஓடுவாரோ=ஓடுவார்களோ, (4) சிலர்=சிலபேர்.

(ஓ, ஓ—அசைகள்.)

(பொ—ரை) நல்ல பொன்னுவதற்காக ஆபரணத்தை அழிப்பார்களா. இரவிற் கண்ட திருடனை அவனருகிற் சென்று கட்டையைக் கொடு என்று அடிப்பார்களா. சில பேர் வீணுக முயலின் கொம்பை முறித்திடுவோம் என்று நினைத்து அச்செயலைச் செய்வதற்கு ஓடுவார்களா?

இதற்கு உவமேயம்:- அதிகாரமுடையவன் நன்ருய் விசாரித்தால் சகல துன்பம் நீங்கவும், பரமானந்தம் அடையவும் செய்யவேண்டியது ஒன்றுமில்லை என்று நன்ருய் விளங்கும்.

## கலிவிருத்தம்

மண்ணைப் பொன்னை மறந்து குடம்பணி
வண்ண மாக வழங்கினு மண்பொனைக்
கண்ணிற் காண்கில மென்று கலங்கினு
மெண்ணின் மண்பொனை யேயங் கிசைப்பரோ. 164

(ப—ரை) மண்ணைப் பொன்னை = மண்ணையும் பொன்னையும் மறந்து, குடம் = முறையே குடம், பணி = ஆபரணம் என்றவற்றின், வண்ணமாக = உருவமாக, வழங்கினும் = வழங்கினுலும், மண் = மண்ணையும், பொனை = பொன்னையும் கண்ணில் = கண்ணினுல், காண்கிலம் = யாம் பார்க்கவில்லைஎன்று கலங்கினும்= என்று கலங்கினுலும், எண்ணின் = யோசித்துப்

பார்க்குமிடத்து, மண் = மண்ணையும், பொனையே = பொன்னையுமே, அங்கு = அப்படி, இசைப்பர் (ஏ) = சொல்கிருர்கள்.

(பொனை—பொன்னை என்பதன் இடைக்குறை. ஏ—அசை.)

(பொ—ரை) மண்ணையும், பொன்னையும் மறந்து முறையே குடம், ஆபரணம் என்பவற்றின் உருவமாகி வழங்கிளுலும், மண்ணையும் பொன்னையும் கண்ணிஞல் யாம் பார்க்கவில்லை என்று கலங்கிளுலும், யோசித்துப் பார்க்குமிடத்து மண்ணையும் பொன்னையுமே அப்படிச் சொல்லுகிருர்கள்.

ஆத்மாவாகிய தன்னை மறந்து சரீரமாகவும், உலகமாகவும் வழங்கிளுலும், ஆத்மாவாகிய தன்னைத்தான் அறியவில்லையே என்று கலங்கிளுலும், நன்ருக விசாரிக்குமிடத்துச் சத்தாகிய ஆத்மாவான தன்னையே இவ்விதம் சொல்லிக் கொள்வதேயாகும். பந்த முத்தி போல் சத்தே விளங்குவது என்பது கருத்து.

**கலித்தாழிசை**

பற்பலபாண் டங்கள் பணிகளெலா மண்கனக
நற்பயனைக் காட்டி நனிவிளங்க வைத்தனவே. 165

(ப—ரை) பற்பல பாண்டங்கள் = பல பல பாத்திரங்கள், பணிகளெலாம் = ஆபரணங்கள் என்பன எல்லாம், மண் கனக = முறையே மண்ணினுடையதும், பொன்னினுடையதுமாகிய, நற்பயனைக் காட்டி = நல்ல பிரயோசனத்தைக் காட்டி, நனிவிளங்க = அது நன்ருக விளங்கும்படி, வைத்தனவே = ஏற்படுத்தப்பட்டனவாம்.

(பொ—ரை) பல பல பாத்திரங்கள், ஆபரணங்கள் என்பன எல்லாம் முறையே மண்ணினுடையதும், பொன்னினுடையதும் ஆகிய நல்ல பிரயோசனத்தைக்காட்டி அது நன்ருக விளங்கும்படி. ஏற்படுத்தப்பட்டனவாம்.

பந்த முத்தி விவகாரங்களெல்லாம் சச்சிதானந்தமாகிய தனது சுபாவத்தைக் காட்டி அது நன்ருக விளங்கும்படி செய்வதற்கு ஏதுவாம்.

குறள் வெண்பா

நீலமிலே வானமே நீரில்லே கானலே
ஞாலமிலே நானே நனி. 166

(ப—ரை) நீலமிலே = தோற்றுகின்ற நீல நிறமானது உண்மையாய் இல்லே, வானமே = ஆகாயமான வெளியே இருக்கிறது, நீரில்லே = ஜலமில்லே, கானலே = கானலே தோற்றுகிறது, ஞாலம் இலே = சரீரம், உலகம் என்பது இல்லே, நானே = சச்சிதானந்தமாகிய நானேவிளங்குகின்ற, நனி = நன்ருக.

(பொ—ரை) தோற்றுகின்ற நீல நிறமானது உண்மையாய் இல்லே. ஆகாயமான வெளியே இருக்கிறது. ஜலமில்லே, கானலே தோற்றுகிறது. இவைபோல சரீரம், உலகம் என்பது இல்லே. நன்ருக சச்சிதானந்தமாகிய நானே விளங்குகின்றேன்.

வெண்பா

கண்கஊயல் லால்விளங்கா கண்ணுமோ கண்டிலவோ
வுண்டுகொலோ சற்றுமுள தோவல்லல்—கண்டும்
விருப்புவெறுப் பாமோ விசேடமின்ருே உண்டோ
தருப்பணத்திற் ருேற்றமனந் தம். 167

(ப—ரை) (2) கண்கஊ, அல்லால் = அல்லாமல்,விளங்கா, கண்ணுமோ = கண்களும் ஆகா, கண்டிலவோ = காணப்படவில்லேயா, உண்டு கொல் (ஒ) = உண்மையாய் இருக்கிறதா, இல்லே. (4) சற்றும் உளதோ = சிறிதாவது இருக்கிறதா, (3) அல்லல் = துன்பம் என்பது, (5)கண்டும் = காணப்பட்டாலும், விருப்பு வெறுப்பாமோ = அவற்றில் விருப்பு, வெறுப்பு உண்டா, இல்லே,விசேடமென்ருே = விசேஷமில்லேயா, உண்டோ = ஆனுல் இருக்கிறதா. (1) தருப்பணத்தில் = கண்ணுடியில், தோற்றம் அனந்தம் = அளவற்ற தோற்றங்கள்.

(ஒ—அசை.)

(பொ—ரை) கண்ணாடியில் அளவற்ற தோற்றங்கள் கண்களையல்லாமல் விளங்கா, கண்களும் ஆகா. காணப்படவில்லையா? உண்மையாய் இருக்கிறதா? இல்லை. துன்பம் என்பது சிறிதாவது இருக்கிறதா. காணப்பட்டாலும் அவற்றில் விருப்பு வெறுப்பு உண்டா. இல்லை. விசேஷமில்லையா. ஆனால் இருக்கிறதா?

இவ்வுபமானத்திற்கு உபமேயம்:- நினைவில் தோன்றுகின்ற அந்த தோற்றங்கள் சாட்சியாகிய ஞான சொருபமான தன்னைத் தவிர விளங்கா, ஆனால் தானுமோ காணப்படவில்லையா. ஆனால் இருக்கிறதா, துன்பம் சிறிதேனும் உண்டா, அவற்றில் விருப்பு வெறுப்பு உண்டா, இல்லை. விசேஷம் இல்லையா? இருக்கிறது. ஆனால் இருக்கிறதா? இல்லை.

ஏற்ற மிகழ்ச்சி யிடரின்பம் பற்றல்விடல்
சீற்றம் விருப்புச் செயும்பொருளோ—தோற்றிலவோ
வுண்ணாடின் மெய்யோ வுனையின்றி வேறுமோ
கண்ணாடித் தோற்றங் கனா. 168

(ப—ரை) (2) ஏற்றம் = உயர்வு, இகழ்ச்சி = தாழ்வு, இடர் = துன்பம், இன்பம், பற்றல் = பற்றுதல், விடல் = விடுதல், சீற்றம் = கோபம், விருப்பு = ஆசை, செயும் பொருளோ = என்னும் இவைகள் செய்யத்தக்க பொருள்களா, அல்ல, தோற்றிலவோ = தோன்றவில்லையா, உள் நாடின் = உள்ளத்தால் ஆராய்ந்து பார்க்கின், மெய்யோ = உண்மையோ, உனையின்றி வேறுமோ = உன்னைத் தவிர வேறு ஆகுமோ, (1) கண்ணாடி = கண்ணாடியில், தோற்றம் = தோன்றுகிற வஸ்துக்களும், கனா = கனவில் தோன்றுகிற வஸ்துக்களும்.

(பொ—ரை) கண்ணாடியில் தோன்றுகிற வஸ்துக்களும், கனவில் தோன்றுகிற வஸ்துக்களும், உயர்வு, தாழ்வு, துன்பம், இன்பம், பற்றுதல், விடுதல், கோபம், ஆசை என்னும் இவைகள் செய்யத்தக்கப் பொருள்களா? அல்ல, உள்ளத்தில் ஆராய்ந்து பார்க்கில் உண்மையோ. உன்னைத் தவிர வேறுகுமோ.

இவ்வுவமானத்திற்கு உபமேயம்:- நினைவில் தோன்றுகின்ற சரீராதி,பிரபஞ்சங்கள்,உயர்வு,தாழ்வு, துன்பம்,இன்பம், பற்றுதல், விடுதல், கோபம், ஆசை என்னும் இவைகள் செய்யத்தக்க பொருள்களா, அல்ல; தோன்றவில்லையா, உள்ளத்தால் ஆராய்ந்து பார்க்கில் உண்மையோ, உன்னைத் தவிர வேருகுமோ.

கண்ணுடி யேயுன் கருணையமு தேமழைக்
குண்ணுடி யாதை யுவமிப்பே—னண்ணு
வெதிர்த்தவெதி ராதவுள தில்லதுவா மீதென்
றுதித்தவெலா மில்லையென்ரு யுற்று. 169

(ப—ரை) கண்ணுடியே, உன் கருணை அமுத மழைக்கு, உள் நாடி = உள்ளத்தில் ஆராய்ந்து, யாதை = எதை, உவமிப்பேன் = உவமானமாகச் சொல்லுவேன், அண்ணு = பொருந்தி, எதிர்த்த = எதிராகத் தோற்றியவை, எதிராத = எதிர்ப்படாதவைகள், உளது=இருப்பது, இலது = இல்லாதது, ஆம்=ஆகிய, ஈது என்று=இது என்று, உதித்த எல்லாம் = தோன்றியவை எல்லாம், (3) இல்லை என்ருய் = இல்லை என்று சொன்ருய், (2) உற்று=உண்மையாக.

(பொ—ரை) கண்ணுடியே உன் கருணையமுத மழைக்கு உள்ளத்தில் ஆராய்ந்து எதை உவமானமாகச் சொல்லுவேன். பொருந்தி எதிராகத் தோற்றியவை, எதிர்ப்படாதவைகள், எதிர்ப்படாதிருப்பது, இல்லாததாகிய இது என்று தோற்றியவை எல்லாம் உண்மையாக இல்லை என்று சொன்ருய்.

இதற்கு உபமேயமாவது:- நினைவில் தோன்றியவை தோன்ருதவை, உள்ளன, இல்லாதன ஆகிய இது என்று தோற்றியவை எல்லாம் உண்மையாக இல்லை.

## கலிவிருத்தம்

கயத்துட் பார்த்துக் கரையமர் தானுந்தன்
னயற்பொ ருட்களு மாழ்ந்தலை கின்றவென்
றுயக்க லுற்றுணின் றுய்த்திடு மாறிலை
பயத்தின் மேற்றனைப் பார்க்கின் மகிழ்ச்சியே. 170

(ப—ரை) கயத்துள்=தடாகத்தினுள்ளே, பார்த்து, கரை அமர்=கரையில் இருக்கின்ற, தானும், தன் அயல் பொருட்களும்= தனக்கு வேருன வஸ்துக்களும், ஆழ்ந்து = நீரினில் மூழ்கி, அலைகின்ற என்று = அலைச்சல் படுகின்றன என்று, உயக்கல் உற்று = துன்பம் அடைந்து, உள் நின்று=உள்ளேயிருந்து, உய்த்திடும் = மேலேகொண்டு வரும், ஆறிலை = வழியில்லை, பயத்தின் = நீரின், மேல் = மேலிடத்திலிருக்கிற, தன்னைப் பார்க்கில்=தன்னைப் பார்த்தால், மகிழ்ச்சியே=சந்தோஷமேயாம். (உயக்கல்—உயங்கல் என்பதன் வரித்தல் விகாரம்.)

(பொ—ரை) தடாகத்தின் உள்ளே பார்த்துக் கரையில் இருக்கின்ற தானும் தனக்கு வேருன வஸ்துக்களும் நீரினில் மூழ்கி அலைச்சல் படுகின்றன என்று துன்பம் அடைந்து 'உள்ளேயிருந்து மேலே கொண்டுவரும் வழியில்லை. நீரின் மேலிடத்தில் இருக்கின்ற தன்னைப் பார்த்தால் சந்தோஷமேயாம்.

இதற்கு உபமேயம்: நினைவுடன் கூடிருல் தானும் மற்றவைகளும் பலவித சஞ்சலமடைந்து துன்பம் உறுவதாய்த் தோன்றும். இச்சங்கடத்தையும், துன்பத்தையும் நீக்கும் வழி கிடையாது. நினைவு ஒழிந்து சாட்சி மாத்திரமாய் நின்ருல் தானும் மற்றவையும் ஆனந்த வடிவமாம்.

### வெண்பா

எவ்வெவ் விதந்தா னெழுதப் படாதவைக
ளெவ்வெவ் விதந்தா னெதிர்தோன்ரு—தவ்வவ்
விசித்திரமாஞ் சித்திரங்கள் வேறல்ல சற்று
மிசைத்தவொரு வத்திரந்தா னே. 171

(ப—ரை) எவ்வெவ்விதந்தான்=ஒரு வஸ்திரத்தில் எந்த எந்த விதமாகத்தான், எழுதப்படாது = எழுதக் கூடாது, அவைகள்=அப்படி எழுதப்பட்டவைகள், எவ்வெவ்விதந்தான்= எந்த எந்த விதமாகத்தான், எதிர் தோன்ரு=எதிரே தோன்ருது இருக்கும், அவ்வவ் விசித்திரமாம்=அந்தந்த விசித்திரங்களான, சித்திரங்கள், வேறல்ல சற்றும் = சிறிதும் வேருகா, இசைத்த= அவைகளெல்லாம் எழுதுவதற்கிடமான, ஒருவத்திரந்தானே = அந்த ஒரே வஸ்திரந்தான்.

(பொ—ரை) ஒரு வஸ்திரத்தில் எந்த எந்த விதமாகத்தான் எழுதக்கூடாது. அப்படி எழுதப்பட்டவைகள் எந்த எந்த விதமாகத்தான் எதிரே தோன்ருது இருக்கும். அந்த அந்த விசித்திரமான சித்திரங்கள் சிறிதும் வேருகா. அவைகள் எல்லாம் எழுதுவதற்கிடமான அந்த ஒரே வஸ்திரந்தான்.

இதற்கு உபமேயம்: ஜக சீவபரம் போலவும், பந்த முத்திகள் போலவும் சங்கற்பத்திஞலேயே தோற்றும். ஆனல் அவைகள் எல்லாம் அச்சங்கற்பத்திற்கு ஆதாரமும் சங்கற்பமற்றதுமாகிய சாக்ஷி வடிவமான சின்மாத்திரமேயாம். அல்லது சிவமேயாம். (சின் மாத்திரம்=ஞான மாத்திரம்.)

ஆடைக்கு வெண்மை அமிர்தந் தனக்கினிமை
தேடக் கருதார் சிறிதுமயன்—மூடு
மழுக்கொழிவு நீர்சுவற லாகுங்காற் ருனே
மழுத்தவள ம்ம்மதுர மும். 172

(ப—ரை) ஆடைக்கு = வஸ்திரத்திற்கு, வெண்மை= வெள்ளை நிறமும், அமிர்தம் தனக்கு = பாலுக்கு, இனிமை = தித்திப்பும், உண்டாகா. (3) தேடக்கருதார் =தேடியலைவதற்கு நினையார்கள், (2) சிறிதும் அயல்=சிறிதும் வேருக, (4) மூடும்= அழுக்கு மூடியிருக்கிற, அழுக்கு ஒழிவும் = வஸ்திரத்திற்கு அழுக்கின் நீக்கமும், நீர் சுவறல் = பாலுக்கு நீர் சுண்டுவதும், ஆகுங்கால் = ஏற்படுமிடத்து, தானே=அந்த வஸ்திரமே, முழுத்தவளமும்=சுத்த வெண்மையாம், தானே=அந்தப் பாலே, மதுரமும்=நல்ல தித்திப்பு வடிவமாம்.

(பொ—ரை) வஸ்திரத்திற்கு வெள்ளை நிறமும், பாலுக்குத் தித்திப்பும் உண்டாகச்சிறிதும் வேருகத் தேடியலைய நினையார்கள். அழுக்கு மூடியிருக்கின்ற வஸ்திரத்திற்கு அழுக்கு நீக்கமும், பாலுக்கு நீர் சுண்டுதலும் ஏற்படுமிடத்து அந்த வஸ்திரமே சுத்த வெண்மையாம். அந்தப் பாலே தித்திப்பு வடிவமாம்.

இதற்கு உபமேயம் :- ஜீவர்கள் தங்களுக்கு ஆனந்தம் வேண்டி எந்த அனுஷ்டானங்கள் செய்தாலும் ஆனந்தம் ஏற்படாது. நன்ருகத் தம்மை விசாரித்து சங்கற்பமும் அற்ருல் பரமானந்த வடிவமான சிவமாவார்கள்.

அனந்தவிகற் பத்தா லளவற்ற தாக
வுனும்பல் பொருட்களோ டொன்று—முனங்காணு
கங்குலையும் வேருகக் கண்டு தனிநின்ற
செங்கணவை யாகுமோ செப்பு. 173

(ப—ரை) அனந்த விகற்பத்தால் = முடிவற்ற பேதங்களாக, அளவற்றதாக = அளவில்லாதனவாக, உனும் = நினைக்கப்பட்ட, பல் பொருட்களோடு = அனேக வஸ்துக்களோடும், ஒன்றும், முனங்காணு = முன்னே தோன்ருத, கங்குலையும் = இருளையும், வேருகக்கண்டு, தனி நின்ற = தான் மாத்திரமாய் இருக்கின்ற, செங்கண் = நல்ல கண்ணனது, அவையாகுமோ = முன் காணப் பட்டவைகள் ஆகுமோ, செப்பு = நீ சொல்,

உனும்—உன்னும் என்பதன் இடைக்குறை.
முனம்—முன்னம் என்பதன் இடைக்குறை.

(பொ—ரை) முடிவற்ற பேதங்களாக அளவில்லாதனவாக நினைக்கப்பட்ட அநேக வஸ்துக்களோடும் ஒன்றும் முன்னே தோன்ருத இருளையும் வேருகக் கண்டு தான் மாத்திரமாய் இருக்கின்ற நல்ல கண்ணனது முன் காணப்பட்டவைகள் ஆகுமோ. நீ சொல்.

இதற்கு உபமேயம்:-அளவற்ற பேதங்களாகத் தோற்றுகின்ற சாக்கிர பிரபஞ்சத்தையும், சொப்பனப் பிரபஞ்சத்தையும், இவை ஒன்றும் தோன்ருத, சுழுத்தியையும், சாக்ஷியாய் இருந்து அறிகின்ற சின்மாத்திரமான ஆத்மா அவைகள்ஒன்றும் ஆகாது.

பொன்மண்ணூல் விட்டொழிந்து பூண்கலசம் வத்திரத்தை
யென்வகையாற் காண்ப திருக்குங்கொ—றன்னையலா
லுள்ளதுவு மில்லதுவு முண்டோ தனதுருவாய்க்
கள்ள மறவனைத்துங் காண். 174

(ப—ரை) பொன்,மண்,நூல்=பொன்னையும், மண்ணையும், நூலையும், விட்டொழிந்து = நீக்கிவிட்டு, பூண் = முறையே ஆபரணத்தையும், கலசம் = கலசத்தையும், வத்திரத்தை = வஸ்திரத்தையும், . என் = என்ன, வகையால் = விதத்தினால், காண்பது, இருக்குங்கொல் = அவை இருக்குமா, அதுபோல், தன்னையலால்=சின்மாத்திரமான தன்னைத் தவிர, உள்ளதுவும்= சாக்கிர பிரபஞ்சம், சொப்பனப் பிரபஞ்சம் முதலிய தோற்றப் பொருள்களும், இல்லதுவும்=சுழுத்தி முதலிய ஒன்றும் தோன்றாத சூனியமும் உண்டோ, தனதுருவாய் = சங்கற்பமற்ற ஆத்ம சொரூபமாகிய தனது வடிவமாக, கள்ளம் அற=மறைப்பின்றி, அனைத்தும் காண்=எல்லாவற்றையும் அறிவாய்.

(பொ—ரை) பொன்னையும், மண்ணையும், நூலையும் நீக்கி விட்டு முறையே ஆபரணத்தையும் கலசத்தையும், வஸ்திரத்தையும் என்ன விதத்தினால் காண்பது, அவை இருக்குமோ. அதுபோல் சின்மாத்திரமான தன்னைத்தவிர சாக்கிர பிரபஞ்சம், சொப்பனப் பிரபஞ்சம் முதலிய தோற்றப் பொருள்களும், சுழுத்தி முதலிய ஒன்றும் தோன்றாத சூனியமும் உண்டோ. சங்கற்பமற்ற ஆத்ம சொரூபமாகிய தனது வடிவமாக மறைப்பின்றி எல்லாவற்றையும் அறிவாய்.

பொன்னிடத்து மண்ணுண்டோ பொன்மண்ணே
பொன்பொன்னே
என்னிடத்து மற்றொன் றிருக்குமோ—பின்னம்
விளங்குகிலா யான்றானும் வேறாவே நல்ல
களங்கமிலா யான்யானே காண். 175

(ப—ரை) பொன்னிடத்து=பொன்னில், மண்ணுண்டோ, பொன்=பொன்னுனது, மண்ணே = மண்ணுகுமா, பொன் பொன்னே=பொன் பொன்னே தான், அதுபோல, என்னிடத்து= சர்வ சாட்சியாகிய என்னிடத்து, மற்ருென்று இருக்குமோ, பின்னம் = பேதங்கள், விளங்குகிலா = விளங்காத, யான் (தான் உம்)=யான், வேரு=வேறல்ல, களங்கமிலா=குற்றமற்ற, யான்=சின் மாத்திரமாகிய யான், யானே (காண்).

காண்—முன்னிலை அசை. தான், உம்—சாரியை.

(பொ—ரை) பொன்னில் மண்ணுண்டோ, பொன்னுனது மண்ணுகுமோ, பொன் பொன்னே தான். அதுபோல சர்வ சாட்சியாகிய என்னிடத்து மற்ருென்று இருக்குமோ. பேதங்கள் விளங்காத யான் வேரு, வேறல்ல,குற்றமற்ற சின்மாத்திரமாகிய யான் யானே.

பொன்னுருகிக் கம்பி தகடுபொடி பூடணமாய்ப்
பன்னவரு மாயினுமப் பைம்பொன்னே—அன்னியமில்
சுத்தசிவஞ் சத்தியாய்ச் சூனியஞ்சீ வன்மனமெய்
யித்தனையா யும்பேத மேது. 176

(ப—ரை) பொன்னுருகி; கம்பி = கம்பியாகவும், தகடு= தகடாகவும், பொடி = பொடிகளாகவும், பூடணமாய் = ஆபரணங்களாகவும்,பன்னவருமாயினும்=சொல்ல வருமாளுலும், அப் பைம்பொன்னே = அந்தப் பசுமையான பொன்னேதான், அதுபோல, அன்னியமில்=அன்னியமற்ற, சுத்தசிவம்=ஆனந்த வடிவமான சுத்த சிவமானது, சத்தியாய்=சத்தியாகி, சூனியம், சீவன், மனம், மெய்= சரீரம் என்னும், இத்தனையாவும் = இவைகளாகியும், பேதம் ஏது=பேதம் இல்லை.

(பொ—ரை) பொன் உருகிக் கம்பிகளாகவும், தகடாகவும் பொடிகளாகவும், ஆபரணங்களாகவும் சொல்ல வருமாளுலும் அந்தப்பசுமையான பொன்னையேதான். அதுபோல் அன்னியமற்ற ஆனந்த வடிவமான சுத்த சிவமானது சத்தியாகி சூனியம், சீவன், மனம், சரீரம் என்னும் இவைகளாகியும் பேதம் இல்லை.

பொன்னு இருக்கிற்றுன் பூண்பலவாய் வேட்டணிவ
ரென்னு யினுமஃ திருப்பதுசெம்— பொன்னுயே
தானு இருந்திடிற்றுன் சர்வசக மாய்ச்சுகக்கூத்
தானு தெனினுந்தான் றுன். 177

(ப—ரை) பொன்னுயிருக்கிற்றுன் = பொன்னுக இருந்தால் தான், பூண்பல ஆய் = பல ஆபரணங்களாக, வேட்டு = அவற்றை விரும்பி, அணிவர் = தரிப்பார்கள், என்னுயினும் = எந்தவித மானுலும், அஃது இருப்பது, செம்பொன்னுயே = நல்ல பொன்னுகவேதான், அது போல, தானுயிருந்திடில் தான் = ஆத்மாவாகிய தானுய் இருந்தால்தான், சர்வ சகமாய் = சகல பிரபஞ்சங்கள் போலாகி, சுகக் கூத்து = ஆனந்த நடனம், ஆனுது = இடைவிடாது விளங்கும், எனினும் = இப்படியானுலும், தான்றுன் = விசேக்ஷமின்றி ஆத்மாவாகிய தான் தானுகவே இருக்கும்.

(பொ—ரை) பொன்னுக இருந்தால்தான் பல ஆபரணங் களாக அவற்றை விரும்பித் தரிப்பார்கள். எந்தவிதமானுலும், அஃது இருப்பது நல்ல பொன்னுகவே தான். அதுபோல ஆத்மாவாகிய தானுய் இருந்தால்தான் சகல பிரபஞ்சங்கள் போலாகி ஆனந்த நடனம் இடைவிடாது விளங்கும். இப்படியானுலும் விசேக்ஷமின்றிஆத்மாவாகிய தான் தானுகவே இருக்கும்.

கலிவிருத்தம்

பொன்ன லாற்பணி வேறு பொலிவுரு
தென்ன மெய்யுணர் வின்ப உருவமாந்
தன்ன லாற்சக சீவ பரமெலாம்
பின்ன மன்று பிரம சொரூபமே. 178

(ப—ரை) பொன்னலால் = பொன்னைத் தவிர, பணி = ஆபரணங்கள், வேறு = வேருக, பொலிவுருதென்ன = விளங்காது போல, மெய்யுணர்வு இன்ப உருவமாம் = சச்சிதானந்த

வடிவமாகிய, தன்னலாற்=தன்னைத்தவிர, சக சீவ பரமெலாம்= ஜக சீவ பரங்கள் எல்லாம், பின்னமன்று = வேறல்ல, பிரம சொரூபமே=பிரம சொரூபமேயாம்.

(பொ—ரை) பொன்னைத்தவிர ஆபரணங்கள் வேருக விளங்காதது போலச் சச்சிதானந்த வடிவமாகிய தன்னைத் தவிர ஜக சீவ பரங்கள் எல்லாம் வேறல்ல. பிரம சொரூபமேயாம்.

### கலித்துறை

எந்தவ ணத்துமி ருந்துவி
ளங்குவ தின்பொன்ரு
முந்தவ ணங்கரு மெந்தைபி
ரானுரு முறையன்ரே
சந்தவ ணப்பொன் அனந்தவி
தப்பணி தாயும்
வந்தவ ணந்தவ ணந்தனே
யல்லது மற்றுண்டோ. 179

(ப—ரை) எந்த வணத்தும் = எந்த உருவத்தோடும், இருந்து விளங்குவது, இன்பு ஒன்ரும் = ஒரே ஆனந்தமாகிய, முந்த = எதிரிட்டு, வணங்கரும் = வணங்குதற்கரிய, எந்தை பிரான்=நமது தந்தையான, தலைவனுன பரமசிவத்தின், உருமுறையன்ரே=அருள் வடிவக் கிரமமல்லவா? சந்த=அழகிய, வணப்பொன் = நிறத்தையுடைய பொன்னுனது, அனந்தவிதப் பணி=அநேக வகை ஆபரணங்கள், (தான்) ஆயும் வந்து= ஆகித்தோன்றியும், அவண்=அந்தவிடத்து, அந்தவணந்தனை = அந்தப் பொன்னுருவத்தை, அல்லது = தவிர, மற்றுண்டோ= வேருய் இருக்குமோ.

(தான்—சாரியை, வணம்—வண்ணம் என்பதன் இடைக்குறை)

(பொ—ரை) எந்த உருவத்தோடும் இருந்து விளங்குவது ஒரே ஆனந்தமாகிய எதிரிட்டு வணங்குதற்கரிய நமது தந்தையான தலைவனுன பரமசிவத்தின் அருள்வடிவக் கிரமங்கள் அல்லவா. அழகிய நிறத்தையுடைய பொன்னுனது அநேக

வகை ஆபரணங்கள் ஆகித் தோன்றியும் அவ்விடத்து அப்பொன்னுருவத்தைத் தவிர வேருயிருக்குமோ.

**கலிவிருத்தம்**

தொல்லை ஞாலத்தின் ருேற்ற மெனல்சற்று
மில்லை யில்லை யிருப்பதவ் வாறுண
ரெல்லை யற்றபே ரின்ப சிவமதா
மொல்லை யிற்பணி யுண்மையச் சொன்னமே. 180

(ப—ரை) தொல்லை ஞாலத்தின் = பழமையான உலகத்தின், தோற்றம் எனல், சற்றும் = சிறிதும், இல்லை இல்லை = இல்லவே இல்லை, இருப்பது = இருப்பதோ, அவ்வாறு உணர் = அந்த விதமாக அறிகின்ற ஞானமயமாகிய, எல்லையற்ற, பேரின்ப = பேரின்ப வடிவமான, சிவம் (அது) ஆம் = சிவமேயாம், ஒல்லையில் = பார்த்தவுடனே, பணி = ஆபரணங்களின், உண்மை = உண்மை வடிவமானது, அச் சொன்னமே = அந்தப் பொன்னே அல்லவா. அது—பகுதிப் பொருள் விகுதி.

(பொ—ரை) பழமையான உலகத்தின் தோற்றமெனல் சிறிதும் இல்லவே இல்லை. இருப்பதோ அந்த விதமாக அறிகின்ற ஞானமயமாகிய எல்லையற்ற பேரின்ப வடிவமான சிவமேயாம். பார்த்த உடனே ஆபரணங்களின் உண்மை வடிவமானது அந்தப் பொன்னே அல்லவா.

**வெண்பா**

சங்கற்ப ரூபமே சர்வ சகங்களுமற்
றிங்கற்ப மேனு மிலையதுவும்—பங்கமற்ற
ஞானமய வான்மாவே நண்ணியபாண் டம்பலவு
மானமண்ணே யஃதுமணு வாம். 181

(ப—ரை) சங்கற்ப ரூபமே = நினைவு வடிவமே, சர்வ சகங்களும் = எல்லா உலகங்களுமாம், மற்று = அதைத் தவிர, இங்கு = இவ்விடத்தில், அற்பமேனும் = சிறிதாயினும், இலை = இல்லை, அதுவும் = அச்சங்கற்பமும், பங்கமற்ற = பேதமில்லாத, ஞானமய = அறிவு உருவமான, ஆன்மாவே = ஆத்மாவேயாம்,

நண்ணிய = இருக்கின்ற, பாண்டம் பலவும் = எல்லாப் பாண்டங்களும், ஆன மண்ணே = நலமான மண்ணேயாம், அஃதும் = அந்த மண் என்பதும், அணுவாம் = அணுக்களாம்.

(பொ—ரை) நினைவு வடிவமே எல்லா உலகங்களுமாம். அதைத்தவிர இவ்விடத்தில் சிறிதாயினும் இல்லை. அச்சங்கற்பமும் பேதமில்லாத அறிவு உருவமான ஆத்மாவேயாம். இருக்கின்ற எல்லாப் பாண்டங்களும் நலமான மண்ணேயாம். அந்த மண் என்பதும் அணுக்களாம்.

### குறள் வெண்பா

பிரதிமைபோற் கல்லே பிரபஞ்சம் போலப்
பரசிவமாஞ் சித்தேநீ பார் 182

(ப—ரை) பிரதிமை போல் = பலவித பிர்திமைகளைப்போல விளங்குவது, கல்லே = கல்லேதான், பிரபஞ்சம் போல = பிரபஞ்சம் போல விளங்குவது, பர = மேலான, சிவமாம் = மங்களகரமான, சித்தே = ஞான வடிவமாகிய ஆத்மாவே, நீ பார் = நீ இதை அறிந்து பார்.

(பொ—ரை) பல விதப் பிரதிமைகள் போல விள்ங்குவது கல்லே தான். பிரபஞ்சம் போல விளங்குவது மேலான மங்களகரமான ஞான வடிவமாகிய ஆத்மாவே. நீ இதை அறிந்து பார்.

### கலிநிலைத்துறை

வைத்த நாமரூ பங்களைக் கண்டிடின் மண்ணிற்
சத்தி பொய்பல வமைத்தல்போ னித்திரா சத்தி
மத்த மாங்கனு வமைத்தல்போற் பிரமத்தின் மாயை
யுய்த்த பொய்யன்றோ வென்றதி சயப்படா துறைப்பாய். 183

(ப—ரை) வைத்த = தோற்றப்பட்ட, நாமரூபங்களை, கண்டிடில் = காணும் போது, மண்ணில் = தகுந்த மண்ணில்

ஏற்படுகிற, சத்தி=கட சத்தியானது, பொய்பல = பலவிதமான நாம ரூபங்களையுடைய பாண்டங்களை, அமைத்தல் போல் = உண்டாக்குதல் போலவும், நித்திராசத்தி = தூக்கத்திலுள்ள சத்தியானது, மத்தமாம்=பித்த தன்மை போன்ற, கனு=பல பல விதமான சொப்பனத் தோற்றங்களை, அமைத்தல் போல் = உண்டாக்குதல் போலவும், பிரமத்தில் = பிரமத்தினிடத்தில் அபேதமாயுள்ள,மாயை=இன்ன விதமென்று நிச்சயிக்கமுடியாத மாயையானது, உய்த்த = காட்டுகின்ற, பொய்யன்றோ= பொய்த் தோற்றமல்லவா, என்று, அதிசயப்படாது = அதிசயப்படாமல், உறைப்பாய் = சம்சயமின்றி நிச்சயமாக அறிவாய்.

கடசத்தி=பாண்டங்களை உண்டுபண்ணும் வல்லமை,
உய்த்தல்=செலுத்தல்,

(பொ—ரை) தோற்றப்பட்ட நாமரூபங்களைக் காணும் போது தகுந்த மண்ணில் ஏற்படுகிற கடசத்தியானது பல விதமான நாமரூபங்களையுடைய பாண்டங்களை உண்டாக்குதல் போலவும், தூக்கத்தில் உள்ள சக்தியானது பித்துத் தன்மை போன்ற பல பல விதமான சொப்பனத் தோற்றங்களை உண்டாக்குதல் போலவும், பிரமத்தினிடத்தில் அபேதமாய் உள்ள இன்ன விதம் என்று நிச்சயிக்க முடியாத மாயையானது காட்டுகின்ற பொய்த் தோற்றமல்லவா என்று அதிசயப்படாமல் சம்சயம் இன்றி நிச்சயமாக அறிவாய்.

### வெண்பா

அகில மனைத்து மதன்பிரிவுந் தன்பான்
மகிழ்சத்தி யின்றோற்ற மட்டே—யகில
விகற்பமிலை தோற்றமிலை வேறில்லை சத்தி
மிகக்கனவு போல்யானே மெய். 184

(ப—ரை) (உ) அகிலமனைத்தும் = எல்லா உலகங்களும், அதன் பிரிவும் = அவைகளின் பேதங்களும், தன்பால் = ஆத்மாவாகிய தனதிடத்து, மகிழ் சத்தியின் = விளங்குகின்ற மாயா சத்தியின், தோற்றமட்டே =தோற்றங்கள்மாத்திரமேயாம்,

அகில விகற்பம் = சகல பேதங்களும், இலை = இல்லை, தோற்றமிலை = சகலவிதமான தோற்றங்களும் கிடையாது, வேறில்லை சத்தி = அம் மாயாசக்தியானது வேருக இல்லை, (1) மிகக் கனவு போல் = பலவிதமாகத் தோற்றுகிற கனவு போல, (3) யானே மெய் = அனைத்திற்கும் சாக்ஷியாகிய சின்மயமான யானே அழிவற்ற உண்மையான பொருள்.

(பொ—ரை) பலவிதமாகத் தோற்றுகின்ற கனவு போல, எல்லா உலகங்களும் அவைகளின் பேதங்களும் ஆத்மாவாகிய தனதிடத்து விளங்குகின்ற மாயா சத்தியின் தோற்றங்கள் மாத்திரமேயாம். சகல பேதங்களும் இல்லை. சகல விதமான தோற்றங்களும் கிடையாது. ஆகையால் அம் மாயா சத்தியானது வேருக இல்லை. அனைத்திற்கும் சாக்ஷியாகிய சின்மயமான யானே அழிவற்ற உண்மையான பொருள்.

கற்பனைஞா லத்தொழிலுங் காட்சிகளும் பல்விதமாஞ்
சொற்பனமெவ் வண்ணந்தான் ருேற்ருதே-யற்பமுமஃ
துண்டோ விலைவேரு மோவன்று தன்வடிவாய்க்
கண்டோ மிதுதுரியங் காண். 185

(ப—ரை) கற்பனை = பொய்யாகக் கற்பிக்கப்படுகின்ற, ஞாலத் தொழிலும் = உலக விவகாரங்களும், காட்சிகளும் = பலவிதத் தோற்றங்களும், பல்விதமாம் = அனந்த பேதங்களாம், சொற்பனம் = சொற்பனமானது, எவ்வணந்தான் தோற்ருது(ஏ) = எந்த விதமாகத்தான் தோற்றக் கூடாது, அற்பமும் = சிறிதும், அஃதுண்டோ = அச் சொப்பனத் தோற்றங்கள், உண்மையா, இலை = உண்மை இல்லை, வேருமோ = ஆனல் தன்னை விட அவைகள் வேருகுமோ, அன்று = வேருகாது, தன் வடிவாய்க் கண்டோம் = தன் வடிவமாகவே பார்க்கின்ருேம், இது துரியம் = இப்படிப்பட்ட நிலைதான் துரியம் என்பது. காண் = இதை அறி.

(ஏ—அசை)

(பொ—ரை) பொய்யாகக் கற்பிக்கப்படுகின்ற உலக விவகாரங்களும் பலவிதத் தோற்றங்களும் அனந்த பேதங்களாம். சொப்பனமானது எந்த விதமாகத்தான் தோற்றக் கூடாது.

சிறிதும் அச் சொப்பனத் தோற்றங்கள் உண்மையா. உண்மையல்ல. ஆனுல் தன்னைவிட அவைகள் வேருக்மோ. வேருகாது. தன் வடிவமாகவே பார்க்கின்ரேம். இப்படிப்பட்ட நிலைதான் துரியம் என்பது. இதை நீ அறி.

கலித்தாழிசை

கனவுலகம் பொய்யவணங் காணுமறி வேபோல்
நனவுலகும் பொய்யிவண நன்குணர்சித் தாநானே. 186

(ப—ரை) கன உலகம்=சொப்பன உலகமானது, பொய்= பொய்த் தோற்றமாம், அவணம் = அப்படி, காணும் அறிவே போல்=அறிவே காண்பது போல, நன உலகும்=இந்த சாக்கிர பிரபஞ்சமும், பொய்=பொய்யேயாம், இவண்=இந்த விதமாக, நன்கு உணர்=நன்ருக அறிகின்ற, சித்து ஆம் நானே=ஞான வடிவமாகிய நானே உண்மையான வஸ்து.

(பொ—ரை) சொப்பன உலகமானது பொய்த்தோற்றமாம். அப்படி அறிவே காண்பது போல இந்தச் சாக்கிர பிரபஞ்சமும், பொய்யேயாம். இந்த விதமாக நன்ருக அறிகின்ற ஞான வடிவமாகிய நானே உண்மையான வஸ்து.

எண்சீர் விருத்தம்

தனதுமனே கற்பிதமாந் தான்கண்ட கனவிற்
றடங்கிரியொன் றுறவதிலோர் சாற்பையலான் மற்றை
யினமறியா ததுபோற் ருேன்றிடவறியா தவற்றை
யிவனுக்குட் படாததெனை வியம்பியிடத் தகுமோ
வனையநினை வுலகிடையோர் தனுமுதற்சில் பொருளை
யறிந்தறியா வனேகமுள வாய்க்காணப் பட்ட
வெனையபொரு ளாயினும்யா வையுமுணர்ந்த சான்ரு
யெவைக்குமுதற் பொருளாக விலங்குவர்கூ டத்தர். 187

(ப—ரை) தனது, மனேகற்பிதம், ஆம் = ஆகிய,

தான் கண்ட, கனவில்=சொப்பனத்தில், தடங்கிரி=பெரிய மலை, ஒன்று உற=ஒன்று இருக்க, அதில்=அம் மலையில், ஓர் சார்பை அலால்=ஒரு சார்பை அல்லாமல்,மற்றை இனம்=மற்றவகைகளை அறியாதது போல், தோன்றிட = தோற்ற, அறியாதவற்றை= அறியாதவைகளை எல்லாம், இவனுக்கு=இவ்வாறு பார்க்கின்ற இவனுக்கு, உட்படாதது என, இயம்பியிடத் தகுமோ=சொல்லத் தகுமோ, தகாது, அனைய=அப்படிப்பட்ட, நினைவு = நினைவு வடிவமாகிய, உலகிடை = இவ்வுலகத்தில், ஓர் தனு முதல்= தனது இந்த ஒரு சரீர முதலாக, சில் பொருளை=சில வஸ்துக்களை, அறிந்து = அறிந்தும், அறியா = அறியப்படாத, அனேகம் = அனேக வகைகள், உளவாய்=இருக்கின்றன என்று,காணப்பட்ட எனைய=எப்படிப்பட்ட, பொருளாயினும் = வஸ்துக்களாயினும், யாவையும்=அவ் எல்லாவற்றையும், உணர்ந்த = அறிந்த, சான்றாய்=சாட்சியாய், எவைக்கும் = சகலத்திற்கும், முதற் பொருளாக=ஆதாரமான வஸ்துவாக, இலங்குவர் கூடத்தர்= ஆத்மாவாகிய கூடஸ்தர் விளங்கிக் கொண்டிருப்பார்.

(பொ—ரை) தனது மனோகற்பிதமாகிய தான் கண்ட சொப்பனத்தில் பெரிய மலை ஒன்றிருக்க, அம்மலையில் ஒரு சார்பையல்லாமல் மற்ற வகைகளை அறியாதது போல் தோற்ற அறியாதவைகளையெல்லாம், இவ்வாறு பார்க்கிற இவனுக்கு உட்படாததெனச் சொல்லத் தகுமோ; தகாது. அப்படிப்பட்ட நினைவு வடிவமாகிய இவ்வுலகத்தில் தனது இந்த ஒரு சரீரம் முதலாக சில வஸ்துக்களை அறிந்தும் அறியப்படாத அநேக வகைகள் இருக்கின்றன என்று காணப்பட்ட எப்படிப்பட்ட வஸ்துக்களானாலும் அவ்வெல்லாவற்றையும் அறிந்த சாக்ஷியாய் சகலத்திற்கும் ஆதாரமான வஸ்துவாக ஆத்மாவாகிய கூடஸ்தர் விளங்கிக் கொண்டிருப்பார்.

### வெண்பா

கனவிற் கனவிதெனக் கண்டுவிடி னந்தக்
கனவின் பலமகன்று காண்பார்—நனவதுபோற்
பந்தத்தி லேயேபொய்ப் பந்தமீ தென்றுணரிற்
பந்தம்போய் வீடிசையும் பார். 188

(ப—ரை) கனவில்=சொப்பனத்தில், கனவு இது என= இது சொப்பனந்தான் என்று, கண்டுவிடின் = கண்டுவிட்டால், அந்தக்கனவின் பலம்= அந்தச் சொப்பனத்தின் வல்லமை, அகன்று=நீங்கி. காண்பர் நனவு=சாக்கிரத்தில் காண்பார்கள், அதுபோல, பந்தத்திலேயே= பந்த திசையிலேயே, பொய் பந்தம் ஈதென்று உணரில்=இது பொய்யான பந்தம் என்று அறிந்து கொண்டால், பந்தம் போய்=பந்தம் நீங்கி, வீடு இசையும்= மோக்ஷம் உண்டாகும். பார்=இதை நன்றாக விசாரித்துப்பார்.

(பொ—ரை) சொப்பனத்தில் இது சொப்பனந்தான் எனக்கண்டுவிட்டால் அந்த சொப்பனத்தின் வல்லமை நீங்கி, சாக்கிரத்தில் காண்பார்கள். அதுபோல பந்தத்திசையிலேயே இது பொய்யான பந்தம் என்று அறிந்து கொண்டால் பந்தம் நீங்கி மோட்சம் உண்டாகும். இதை நன்ருய் விசாரித்துப்பார்.

கனவின் விடயம்போற் காணப் படுமவ்
வினமுழுதுஞ் தைசதனே யீங்கு நனவின்
விடயம்போற் ரேன்றும் விளக்கமெலா ஞானச்
சுடர்வடிவாந் தானே துணி. 189

(ப—ரை) கனவின் விடயம் போல் = கனவினிடத்து விஷயம் போல, காணப்படும், அவ்வின முழுதும் = அந்தப் பலவகைகளும், தைசதனே =அக்கனவு காணும் தைசதனேயாம், ஈங்கு = இதைப்போல, நனவின்=சாக்கிரத்தினிடத்து, விடயம் போல்=விஷயம் போல, தோன்றும் விளக்கம் எல்லாம், ஞானச் சுடர் வடிவாம்=ஞானப்பிரகாசமாகிய, தானே =ஆத்மாவாகிய தானேயாம், துணி=இதை நிச்சயித்து அறிந்துகொள்.

தைசதன் = சொப்பனம் காண்பவன்.

விஷயம்=அறியப்படும் பொருள்.

(பொ—ரை) கனவினிடத்து விஷயம் போல் காணப்படும் அந்தப் பலவகைகளும் அக்கனவு காணும் தைசதனேயாம். இதைப்போல சாக்கிரத்தினிடத்து விஷயம் போலத் தோன்றும் விளக்கமெலாம் ஞானப்பிரகாச சொரூபமாகிய ஆத்மாவாகிய தானேயாம். இதை நிச்சயித்து அறிந்துகொள்.

இந்திரசா லங்கூத் தியல்சொற் பனக்காட்சி
சுந்தரமே யெவ்வாறு தோற்றிடுனுந்—தொந்தமிலே
சத்தியமல் லாமை தனையொழிந்தில் லாமையினு
லித்திரனே ஞாலமெலா மெண். 190

(ப—ரை) இந்திரசாலம்=இந்திரசாலத் தோற்றம், கூத்து=கூத்தாடுதலின் காட்சி, சொற்பனக்காட்சி=சொற்பனத் தோற்றம் இவைகள், (3) சுந்தரமே=அழகிய விநோதமேயாம், (2) எவ்வாறு தோற்றிடுனும்=எந்த விதமாகத் தோற்றினாலும், (5) தொந்தமிலை = அதில் கட்டுப்படுத்தலில்லை, சத்தியமல்லாமை = அவைகள் சத்தியமல்லாததாலும், தனை ஒழிந்து=தன்னைத்தவிர, இல்லாமையினால் = இல்லாததாலும், (6) இத்திரனே=இத்தன்மை போலவே, ஞாலமெலாம் = சகல பிரபஞ்சத்தையும், எண் = நினை.

(பொ—ரை) இந்திரசாலம், கூத்தாடுதலின் காட்சி, சொற்பனத் தோற்றம் இவைகள் எந்தவிதமாகத் தோற்றினாலும் அழகிய விநோதமேயாகும். அவைகள் சத்தியமல்லாததாலும், தன்னைத் தவிர இல்லாததாலும் அதில் கட்டுப்படுதலில்லை. இத்தன்மையைப் போலவே சகல பிரபஞ்சத்தையும் நினை.

அயல்போலத் தோற்றுவதோற் றுதனவாம் யாவு
மியல்பாலவ் வாறுதெரி கின்ற—சுயஞான
சோதியாம் யான்றானே சூழ்விசும்புஞ் தைசதனு
மேதிலாய்த் தோன்றியுமஃ தே. 191

(ப—ரை) (2) அயல் போல = அன்னியம் போல, தோற்றுவ = தோன்றுபவைகளும், தோற்றுதன = தோற்றுதவைகளும், ஆம் = ஆகிய, யாவும் = சகலமும், இயல்பால் = சுபாவமாக, அவ்வாறு தெரிகின்ற = அவ்விதமே அறிகின்ற, சுய ஞான சோதியாம்=சுயமான ஞான சோதியாகிய, யான்றானே=நான் தானே, (1) சூழ் விசும்பும்=சூழ்ந்திருக்கின்ற ஆகாயமும், தைசதனும்=சொப்பனத் தோற்றத்தை அறிபவனும்,

ஏதிலாய்=முறையே பிரதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமாகவும், சொப்பனத் தோற்றங்கள் போலவும், அன்னியமாக, தோற்றினும் = தோற்றினுலும், அஃதே = ஆகாயமும் தைசதனுமேயாம்.

(பொ—ரை) சூழ்ந்திருக்கின்ற ஆகாயமும் சொப்பனத் தோற்றத்தை அறிபவனும் முறையே பிரதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமாகவும் சொப்பனத் தோற்றங்கள் போலவும், அன்னியமாகத் தோற்றினுலும், ஆகாயமும் தைசதனுமேயாம். அன்னியம் போலத் தோற்றுபவைகளும், தோற்ருதவைகளும் ஆகிய சகலமும் சுபாவமாக அவ்விதமே அறிகின்ற சுயமாகிய ஞான சோதியாகிய நான் தானே.

இல்லதனை வான மெனினுங் கருப்பெனினு
மில்லை யிவையதுவோ வில்லதுவே—சொல்லரிய
தன்னை யுலகெனினுஞ் சார்ந்த விவகார
மென்னினுமீ தில்லையுளன் யான். 162

(ப—ரை) இல்லதனை = ஒன்றும் இல்லாத வெளியை, வானமெனினும் = ஆகாயம் என்றுசொன்னுலும், கருப்பெனினும் = நீல நிறமென்று சொன்னுலும், இல்லை இவை = ஆகாயமென்பதும் நீல நிறமென்பதும் இல்லை, அதுவோ = அந்த இல்லாததோ, இல்லதுவே = இல்லாததே, இதுபோல், சொல்லரிய = சொல்ல முடியாத, தன்னை = ஞான சொரூபமாகிய தன்னை, உலகெனினும் = உலகமென்று சொன்னுலும், சார்ந்த = பலவிதமாகத் தோற்றுகின்ற, விவகாரம் எனினும் = விவகாரங்கள் என்று சொன்னுலும், ஈது இலை = இந்த உலகத்துடன் விவகாரம் என்பது இல்லை. உளன் யான் = ஞான சொரூபியாகிய நானே இருக்கின்றேன்.

(பொ—ரை) ஒன்றும் இல்லாத வெளியை ஆகாயம் என்று சொன்னுலும், நீல நிறமென்று சொன்னுலும் ஆகாயம் என்பதும் நீல நிறமென்பதும் இல்லை. அந்த இல்லாததோ இல்லாததே, இதுபோல் சொல்ல முடியாத ஞான சொரூபியாகிய

தன்னை உலகமென்று சொன்னாலும் பலவிதமாகத் தோற்றுகின்ற விவகாரங்கள் என்று சொன்னாலும் இந்த உலகத்துடன் விவகாரம் என்பதில்லை. ஞான சொரூபியாகிய நானே இருக்கின்றேன்.

விண்ணோ வுளதாங்கு வெய்யோன் விளங்கியதக்
கண்ணா ரமிர்தமுயிர் காக்கின்ற—துண்ணாநத்
தீருஞ்சத் தேயுளதச் சித்தே விளங்கியதிவ்
வோரின்ப மேசுகமா கும். 193

(ப—ரை) விண்ணோவுள = ஆகாயமோ இருக்கின்றது, ஆங்கு= அவ்வாகாயத்தில், வெய்யோன்=சூரியன்,விளங்கியது= பிரகாசிக்கிறது, அக்கண் = அவ்விடத்தில், ஆரமிர்தம் = இருக்கின்ற அமிர்தமானது, உயிர் காக்கின்றது = ஜீவர்களை இரட்சிக்கின்றது, அதுபோல், உள் = உள்ளத்தில், நானு= யானாக, தீரும் = முடிகின்ற, சத்தே, உளது = இருக்கின்றது, அச் சித்தே = அச் சத்தாகிய சித்தே, விளங்கியது = விளங்குகின்றது, இவ்வோரின்பமே = இந்த சத்தும் சித்தும் ஒன்றாக இருக்கின்ற இன்பமே, சுகமாகும் = சுகமென்று வழங்குகின்றது, சத்து= இருப்பது, சித்து விளங்குவது.

(பொ—ரை) ஆகாயமோஇருக்கின்றது,அவ்வாகாயத்தில் சூரியன் பிரகாசிக்கின்றது. அவ்விடத்தில் இருக்கின்ற அமிர்தமானது ஜீவர்களை ரட்சிக்கின்றது. அதுபோல உள்ளத்தில் யானாக முடிகின்ற சத்தே இருக்கின்றது. அச் சத்தாகிய சித்தே விளங்குகிறது. இச் சத்தும் சித்தும் ஒன்றாக இருக்கும் இன்பமே சுகமென்று வழங்குகின்றது.

வானின் மலருமவண் வாழ்சுடரிற் கங்குலுமங்
கானவது சூழு மமுதில்விடந்—தானுமிலை
சத்தி லசத்திலையச் சத்தாஞ்சித் திற்சடமி
லொத்துளவின் பத்திடருண் டோ. 194

(ப—ரை) வானில் = ஆகாயத்தில், மலரும் = தாமரை மலரும் அவண் = அவ்வாகாயத்தில், வாழ்சுடரில் = விளங்குகின்ற சூரியனிடத்தில், கங்குலும் = இருளும், அங்கு ஆன = அவ்விடத்து இருக்கின்ற, அது சூழும் = அந்தச் சூரியன் போன்ற அக்கினியால் சூழப்பட்ட, அமுதில் = அமிர்தத்தில், விடம் (தான்) உம் இலை = விஷமும் இல்லை, இதுபோல, சத்தில் = சத்து என்பதில், அசத்திலை = அசத்து என்பது கிடையாது, அச் சத்து ஆம் = அந்தச் சத்தேயாகிய, சித்தில் = சித்தினிடத்து, சடம் இல் = சடம் என்பது இல்லை, ஒத்து உள = சத்தும் சித்தும் ஒன்ருகவே விளங்குகிற, இன்பத்து = சுகத்தில், இடருண்டோ = துக்கம் உண்டோ, இல்லை; சடம் = விளங்காதது-அறிவில்லாதது-அசத்து இல்லாதது, சித்து = அறிவு-விளக்கமாம்.

(பொ—ரை) ஆகாயத்தில் தாமரைமலரும். அவ்வாகாயத்தில் விளங்குகின்ற சூரியனிடத்தில் இருளும் அவ்விடத்தில் இருக்கின்ற அந்தச் சூரியன் போன்ற அக்கினியால் சூழப்பட்ட அமிர்தத்தில் விஷமும் இல்லை. இதுபோல சத்து என்பதில் அசத்து என்பது கிடையாது. அந்தச் சத்தேயாகிய சித்தினிடத்து சடம் என்பது இல்லை. சத்தும் சித்தும் ஒன்ருகவே விளங்குகின்ற சுகத்தில் துன்பம் உண்டோ. இல்லை.

வெளிக்கமல முண்டோ மிகக்குவிந்த கங்குல்
விளக்கிடுமோ வாங்குண் விடம்வாழ் —வளிப்பதுவோ
ஒல்லை யசத்திருக்கு மோவச் சடம்விளங்குங்
கொல்லதுவாந் துன்பின்போ கூறு. 195

(ப—ரை) வெளிக்கமலம் = ஆகாயத் தாமரை என்பது, உண்டோ, மிகக் குவிந்த = மிகுதியாகக் சூழ்ந்த, கங்குல் = இருளானது, விளக்கிடுமோ = வஸ்துக்களை விளக்கிக் காட்டுமோ, ஆங்குண் = அவ்விடத்தில் உண்ணப்பட்ட, விடம் = விஷம், வாழ்வளிப்பதோ = வாழ்நாளைக் கொடுக்குமோ, ஒல்லை = க்ஷணமாவது, அசத்திருக்குமோ = அசத்து என்பது இருக்குமா, அச்சடம் = அந்தச் சடம் என்பது, விளங்குங்கொல் = விளங்குமா, அதுவாம் துன்பு = அந்தச் சடமாகிய துன்பம், இன்போ = இன்பம் ஆகுமோ, கூறு = நீ சொல்.

(பொ—ரை) ஆகாயத் தாமரை என்பதுண்டோ, மிகுதி யாகச் சூழ்ந்த இருளானது வஸ்துக்களை விளக்கிக் காட்டுமா. அவ்விடத்தில் உ ண் ண ப் ப ட் ட விஷமானது வாழ்நாளைக் கொடுக்குமா. க்ஷணமாவது அசத்தென்பதிருக்குமோ. அந்தச் சடமென்பது விளங்குமா, அந்தச் சடமாகிய துன்பம் இன்பம் ஆகுமோ, நீ சொல்.

## கலித்துறை

மின்மினி மின்னலு டுக்கள்க ளங்கன்வி ளக்கின்ன
பன்மைய சோதிக ளுங்கதிர் முன்னொளிர் பான்மைத்தோ
புன்மையு டற்சக மிந்திய முள்ளுயிர் பொருளாகச்
சின்மய பூரண சுத்தசி வத்திற் றிகளாவே. 196

(ப—ரை) மின்மினி = மின்மினிப்பூச்சி, மின்னல், உடுக்கள் = நக்ஷத்திரங்கள், களங்கன் = சந்திரன். விளக்கு = தீபம், இன்ன = இப்படிப்பட்ட, பன்மைய = பலவிதமான, சோதிகளும், கதிர்முன் = சூரியன் முன்பு, ஒளிர் = விளங்குகின்ற, பான்மைத்தோ = தன்மை உடையதோ, இல்லை. இதுபோல, புன்மை = இழிவான, உடல் = சரீரம், சகம் = உலகம், இந்தியம் = இந்திரியங்கள், உள் = மனம், உயிர் = சீவன், என்னும் இவைகள், பொருளாக = ஓர் பொருளாக, சின்மய = ஞான வடிவ, பூரண = பூரணமான, சுத்த சிவத்தில், திகளா (ஏ) = விளங்காதனவாம். (ஏ—அசை.)

(பொ—ரை) மின்மினிப் பூச்சி, மின்னல், நக்ஷத்திரங்கள், சந்திரன், தீபம் இப்படிப்பட்ட பலவிதமான சோதிகளும் சூரியன் முன்பு விளங்குகின்ற தன்மையுடையதோ, இல்லை. இதுபோல இழிவான சரீரம், உலகம், இந்திரியங்கள், மனம், சீவன் என்னும் இவைகள் ஓர் பொருளாக ஞானவடிவ பூரணமான சுத்த சிவத்தில் விளங்காதனவாம்.

## கலிவிருத்தம்

மருவு சூக்க வடத்தின் விரையினின்
றுரவி னம்மரத் துற்பலங் கூடல்போ
லரிய நுட்பம தாம்பிர மத்தினிற்
சரியுந் தூல சகத்துற் பவமதே. 197

(ப— ரை) (2) மருவு சூக்க = சூக்ஷமத் தன்மை பொருந்திய, (1) வடத்தின் = ஆலமரத்தின், (3) விரையினின்று = விரையில் இருந்து, உரவின் = பெரியதான, அம்மரத்து = அந்த மரத்தின், உற்பவம் = உற்பத்தி, கூடல் போல் = ஏற்படுதல் போல, அரிய = வாக்கு, மனதிற்கு அரிதான; நுட்பம் (அது) ஆம் = சூக்ஷமமாகிய, பிரமத்தினில் = சின்மாத்திரமான பிரமத்திலிருந்து, சரியும் = நழுவுகின்ற, தூல சகத்து = ஸ்தூலமாகிய பிரபஞ்சம், உற்பவம் (அது) (ஏ) = உண்டாகின்றது.

அது, அது—பகுதிப்பொருள் விகுதிகள்.

(ஏ—அசை.) ஸ்தூலம் = தடிப்பு.

(பொ—ரை) ஆலமரத்தின் சூக்ஷமத் தன்மை பொருந்திய விதையிலிருந்து பெரிதான அந்த மரத்தின் உற்பத்தி ஏற்படுதல் போல வாக்கு மனதிற்கரிதான, சூக்ஷமமாகிய சின்மாத்திரமான பிரமத்திலிருந்து நழுவுகின்ற ஸ்தூலமாகிய பிரபஞ்சம் உண்டாகின்றது.

### கலித்துறை

முளைவேர்ம ரங்கிளைக டளைபூந றுங்காய்மு ழுக்கனிசுவை
விளைவான தோர்வித்து நிகராக விவகார விளைபௌதிக
நளிர்பூத மும்புலன் பொறிமனது சீவனஞ் ஞானம்பரை
யளவாம ளைத்தான துணர்வரிய தாய்வேற லாதசிவமே. 198

(ப—ரை) முளை, வேர், மரம், கிளைகள், தளை, பூ, நறுங் காய் = நல்ல காய், முழுக்கனி = நல்ல பழம், சுவை = உருசி என்பவைகளாக, விளைவு ஆனது = விளைந்தது, ஓர் வித்து நிகராக = ஒரே விதை போல, விவகார விளை = விவகாரச் செயல்கள், பௌதீகம் = பஞ்சபூதக் காரியங்கள், நளிர் பூதமும் = விளங்குகின்ற பஞ்ச பூதங்கள், புலன் = சப்த ஸ்பரிசாதி புலன்கள், பொறி = ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள், மனது, சீவன் = அஞ்ஞானம், பரை = சக்தி, அளவாம் = பரியந்தமான, அனைத்தானது = சகலமும் ஆனது, உணர்வரியதாய் = அறிய முடியாததாய், வேறலாத = வேறாகாத, சிவமே = சிவம்-மங்களம். ஆத்மா = பிரமம்.

(பொ—ரை) முளை, வேர், மரம், கிளைகள், தளை, பூ, நல்ல காய், நல்ல பழம், உருசி என்பவைகளாக விளைந்தது ஒரே விதை போல; விவகாரச் செயல்கள்,பஞ்சபூத காரியங்கள், விளங்குகின்ற பஞ்ச பூதங்கள், சப்த ஸ்பரிசாதி புலன்கள், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், மனது அஞ்ஞானம் சக்தி பரியந்தமான சகலமுமானது அறிய முடியாததாய் வேருகாத சிவமே.

வெண்பா

ஆண்பெண் சுகந்தீ ததுவிதுவங் கிங்கென்றே
வீண்பொய் யிலையொன் று மெய்யுணர்வே-காண்ப
பூதம் பசாசு புகல்பிரம ராட்சதனு [வெலாம்
மேதொன்று மில்லைமர மே. 199

(ப—ரை) (2) ஆண், பெண், சுகம், தீது=துக்கம், அது, இது, அங்கு = அவ்விடம், இங்கு = இவ்விடம், என்= என்பனவாகிய, வீண் பொய்=வீணான பொய்கள், இலை ஒன்றும்= ஒன்றும் இல்லை, மெய்யுணர்வே=சத்தியமான ஞானமே, காண்ப எலாம்=காணப்பட்ட எல்லாம், (1) பூதம், பசாசு = பேய், புகல் = சொல்லப்படுகின்ற, பிரம ராட்சதன், ஆம்=ஆகிய, ஏதொன்றும் இல்லை, மரமே=மரமே உள்ளது, இதுபோல.

(பொ—ரை) பூதம், பேய், சொல்லப்படுகின்ற பிரம ராட்சதன் ஆகிய ஏதொன்றும் இல்லை.மரமே உள்ளது.இதுபோல ஆண், பெண், சுகம், துக்கம், அது, இது, அவ்விடம், இவ்விடம் என்பனவாகிய வீணான பொய்கள் ஒன்றும் இல்லை. சத்தியமான ஞானமே காணப்பட்ட எல்லாம்.

அறுசீர் விருத்தம்

ஆணை யென்பது மதனுடை
யவயவ மென்பதும் பொய்யாங்குத்
தானு ரைத்திடப் பட்டதோர்
தாருவே சகமென லதன்கண்ணே
மேனி கழ்த்துப்பல் பேதமென்
றிடுதலு மித்தையே யவ்வண்ண
மான வோதிடப் பட்டது
சிற்சுடர் வடிவமா மொருதானே. 200

(ப—ரை) ஆனை என்பதும், அதனுடை = அதனுடைய, அவயவமென்பதும், பொய் = பொய்யே, ஆங்கு = அப்படி, (தான்) உரைத்திடப்பட்டது = சொல்லப்பட்டது, ஓர் தாருவே = ஒரு மரமேதான், அதுபோல, சகம் எனல் = உலகம் என்பதும், அதன் கண்ணே = அதனிடத்து, மேல் நிகழ்த்து = மேலே சொல்லப் படுகின்ற, பல் பேதம் = பல பேதங்கள், என்றிடுதலும் = என்று சொல்லப்படுதலும், மித்தையே = பொய்யே, அவ்வண்ணமான = அந்த விதம்போல, ஓதிடப்பட்டது = சொல்லப்படுவது, சிற்சுடர் = ஞானப் பிரகாச, வடிவம் ஆம் = வடிவமாகிய, ஒருதானே = ஒரே விதமான ஆத்மாவான தானே. தான்—சாரியை.

(பொ—ரை) ஆனை என்பதும் அதனுடைய அவயவம் என்பதும் பொய்யே. அப்படிச் சொல்லப்பட்டது ஒரு மரமேதான். அதுபோல உலகம் என்பதும் அதனிடத்து மேலே சொல்லப் படுகின்ற பல பேதங்கள் என்று சொல்லப்படுதலும் பொய்யே. அந்த விதமாகச் சொல்லப்படுவது ஞானப் பிரகாச வடிவமாகிய ஒரே விதமான ஆத்மாவான தானே.

### வெண்பா

குற்றியினிற் கள்வன் குரூரவடி வத்தைநனி
யுற்றுப்பார்த் தாற்பொய் யுளதந்தக்—குற்றியொன்றே
தன்னிற் றுயருலகைச் சந்ததமெங் கேதென்னென்
றுன்னிற்பொய் தானே யுளன். 201

(ப—ரை) குற்றியினில் = கட்டையினிடத்து, கள்வன் = இரவில் தோற்றுகின்ற திருடனுடைய, குரூர வடிவத்தை = பயங்கரமான உருவத்தை, நனி = தீபத்தைக் கொண்டு நன்றாக, உற்றுப் பார்த்தால், பொய் = பொய்யாம், உளது = உண்மையாய் இருப்பதோ, அந்த, குற்றி ஒன்றே = கட்டை ஒன்றேதான், இதுபோல, தன்னில் = சர்வ சாட்சியாகிய தன்னிடத்து, தோற்றுகிற, துயருலகை = துக்கவடிவமான உலகத்தை, சந்ததம் = எப்பொழுதும், எங்கு = எவ்விடத்து, இருந்து உண்டாயிற்று, ஏது = எப்படி வந்தது, என் = எப்படி இருக்கிறது, என்று,

உன்னில்=யோசித்து விசாரித்துப் பார்த்தால், பொய் = முழுதும் பொய்யாகவே முடியும், தானே = சச்சிதானந்தமாகிய தானே, உளன்= இருக்கின்ருன்.

(பொ—ரை) கட்டையினிடத்து இரவில் தோற்றுகின்ற திருடனின் பயங்கரமானஉருவத்தை, தீபத்தைக்கொண்டு நன்ருக உற்றுப்பார்த்தால் பொய்யாம். உண்மையாய் இருப்பதோ அந்தக் கட்டை ஒன்றேதான். இதுபோல் சர்வ சாக்ஷியாகிய தன்னிடத்து தோற்றுகிற துக்க வடிவமான உலகத்தை எப்பொழுதும், எவ்விடத்திலிருந்து உண்டாயிற்று, எப்படி வந்தது, எப்படி இருக்கிறதென்று யோசித்து விசாரித்துப் பார்த்தால் முழுதும் பொய்யாகவேமுடியும். சச்சிதானந்தமாகிய தானே இருக்கின்ருன்.

தருப்பணத்திற் சாயை தயங்கினும்பொய் கண்டோ
னிருப்பன்று தன்னையறி வித்துத்—தருக்குறுத்து
மற்புதமாய்த் தான்வைத்த தாங்குலகு தன்சத்தி
கற்பிதம்யான் சற்சிற்சு கம். 202

(ப—ரை) தருப்பணத்தில் = கண்ணுடியில், சாயை, தயங்கினும்=தோற்றிலும், கண்டோன்=அந்த சாயையானது, பார்த்தவனது, இருப்பு அன்று = இருப்பு அல்ல, தன்னை அறிவித்து=பார்க்கின்ற தன்னைத் தெரிவித்தும், தருக்குறுத்தும்= மகிழ்ச்சியைக் கொடுக்கிற, அற்புதமாய் = ஆச்சரியமான வஸ்துவாய், தான் வைத்தது= தானே ஏற்படுத்திக் கொண்டதாம். ஆங்கு=அதுபோல, உலகு=உலகமானது, தன் சத்தி=தனது சக்தியினுல், கற்பிதம்=கற்பிக்கப்பட்டதாம், யான்=நானே, சத் சித் சுகம்=சச்சிதானந்த வடிவன்.

(பொ—ரை) கண்ணுடியில் சாயை தோற்றினுலும் பொய்யே. அந்தச் சாயையானது பார்த்தவனது இருப்பு அல்ல. பார்க்கின்ற தன்னைத் தெரிவித்து மகிழ்ச்சியைக் கொடுக்கிற ஆச்சரியகரமான வஸ்துவாய் தானே ஏற்படுத்திக்கொண்டதாம். அதுபோல உலகமானது தனது சக்தியினுல் கற்பிக்கப்பட்டதாம். நானே சச்சிதானந்த வடிவன்.

இவ்வா றிருக்கின்று யீதலைநீ யின்றென்று
மிவ்வா றுணர்ந்தாய்நீ யென்றுணர்வா-யெவ்வாற்றுந்
தற்பணம்பார்த் துந்துடைத்துந் தான்புறங்கண்
சொற்பனந்தூக் கத்தையறிந் து. [டாங்குநனுச்
203

(ப—ரை) (2) இவ்வாறு = இப்படி இருக்கின்றாய், ஈது அலைநீ = இது நீ அல்ல, இன்று ஒன்றும் = ஒன்றும் இல்லை, இவ்வாறு = இந்த விதமாக, உணர்ந்தாய் நீ = அறிகின்றவன் நீ; என்றுணர்வாய் = என்று அறிந்து கொள்வாய், (1) எவ்வாற்றும் = எந்த விதத்தினாலும், தற்பணம் = கண்ணாடியை, பார்த்து, துடைத்து, தான் புறங்கண்டாங்கு = தான் பின்பக்கத்தைப் பார்த்ததுபோல, நனு = சாக்கிரத்தையும், சொற்பனம் = சொற்பனத்தையும், தூக்கம் = சுழுத்தியையும், அறிந்து.

(பொ—ரை) எந்தவிதத்தினாலும், கண்ணாடியைப்பார்த்துத் துடைத்து தான்பின்பக்கத்தைப் பார்த்ததுபோலசாக்கிரத்தையும், சொப்பனத்தையும், சுழுத்தியையும் அறிந்து இப்படி இருக்கின்றாய் இது நீ அல்ல, ஒன்றுமில்லை. இந்தவிதமாக அறிகின்றவன் நீ என்று அறிந்துகொள்வாய்.

இன்பம்போற் றுன்பு மெதிர்தோற்ற மட்டாகத்
தென்படுவ தானீ தெளிசமமாய்ப்—பின்புமது
பொய்யாய் விசித்திரமாம் பூண்டர்ப் பணநிழல்போன்
மெய்யாய நானே விபு. 204

(ப—ரை) இன்பம் போல் = இன்பத்தைப்போல, துன்பு = துன்பமும், எதிர் = எதிரிலுள்ள, தோற்றமட்டாக = தோற்ற மாத்திரமாக, தென்படுவதால் = காணப்படுவதால், நீ தெளி சமமாய் = நீ சமமாய் அறிந்து தெளிவாய், (3) பொய்யாய், விசித்திரமாம், (2) பூண் = வைத்திருக்கின்ற, தர்ப்பண நிழல்போல் = கண்ணாடிச் சாயை போல், (4) மெய்யாய் = உண்மையாகிய, நானே = சின்மயமான யானே, விபு = வியாபகனும், தலைவனுமாவன்.

(பொ—ரை) இன்பத்தைப் போலவே துன்பமும், எதிரில் உள்ள தோற்ற மாத்திரமாகக் காணப்படுவதால், நீ சமமாய் அறிந்து தெளிவாய். பின்பு அது வைத்திருக்கின்ற கண்ணாடிச் சாயை போல் பொய்யாய் விசித்திரமாம். உண்மையாகிய சின்மயமான யானே வியாபகனும் தலைவனும் ஆவன்.

### கலிவிருத்தம்

கடச லத்திற் கதிரவன் பொய்த்தெதிர்ப்
படினு மின்னிடும் பார்க்கக்கண் கூசுமா
லுடனி னைப்பி லுயிரிருந் தைந்துணர்ந்
திடினு மோர்வரி தீதுமவ் வன்மையே. 205

(ப—ரை) கட சலத்தில்=குடத்திலுள்ள நீரில், கதிரவன்= சூரியன், பொய்த்து=பிரதிபிம்பித்து பொய்யாய், எதிர்ப்படினும்= எதிரே தோற்றினும், மின்னிடும்=பிரகாசிக்கும், பார்க்கக்கண், கூசும்(ஆல்)=கூசும், இதுபோல, உடல்நினைப்பில்=சரீரத்திற்குள் உள்ளத்தில், உயிர் = சிவத்தின் பிரதிபிம்பமான சீவன், இருந்து, ஐந்து = சப்த, ஸ்பரிச, ரச, ரூப, கந்தங்களை, உணர்ந்திடினும்=அறிகின்ற அறிவாக இருந்தும், ஓர்வரிது=அந்த சீவன் தன்னையே அறியாததாய் இருக்கிறது, ஈதும் = இப்படி அறிவாய் இருந்தும் தன்னையறிய முடியாமலிருப்பது, அவ்வன்மையே=அந்தச் சிவசக்தியின் காரியமே.

(பொ—ரை) குடத்திலுள்ள நீரில் சூரியன் பிரதிபிம்பித்து பொய்யாய் எதிரே தோற்றினும், பிரகாசிக்கும். பார்க்கக் கண் கூசும். இதுபோல சரீரத்திற்குள் உள்ளத்தில் சிவத்தின் பிரதிபிம்பமான சீவன் இருந்து சப்த, ஸ்பரிச,ரூப, ரச, கந்தங்களை அறிகின்ற அறிவாக இருந்தும் அந்தச் சீவன் தன்னையே அறியாததாய் இருக்கிறது. இப்படி அறிவாய் இருந்தும் தன்னையறியாமல் இருப்பது அந்தச் சிவசக்தியின் காரியமே.

சலங்க லங்கினுட் சார்பதி விம்பமுங்
கலங்கு மஃது கலங்கில தேனிலைத்
திலங்கு மேனு மிதுபொய் புனலறிற்
றலங்கொள் பொய்யுமச் சத்திய பிம்பமாம். 206

(ப—ரை) சலங்கலங்கின்=குடத்திலுள்ள நீர் கலங்கினுல், உள்சார்=அந் நீரினுள் தோன்றுகிற, பதி விம்பமும் = பிரதி விம்பமும், கலங்கும்,அஃது=அந்த நீர், கலங்கிலதேல்=கலங்காது இருந்தால், நிலைத்து இலங்குமேனும் = அந்தப் பிரதிபிம்பம் கலங்காமல் நிலையாய் இருந்து பிரகாசிக்கும் ஆனுலும், இது பொய் = பிரதிபிம்பம் கலங்குதலும் கலங்காதிருத்தலும் பொய், புனல் அறில்=நீர் வற்றினுல், தலங்கொள் = அங்கு தோற்றுகிற, பொய்யும்=பொய்யான பிரதிபிம்பமும், அச்சத்திய பிம்பமாம் = அந்த உண்மையான பிம்பமே ஆகிவிடும்,

(பொ—ரை) குளத்திலுள்ள நீர் கலங்கினுல் அந்த நீரினுள் தோற்றுகிற பிரதிபிம்பமும் கலங்கும். அந்த நீர் கலங்காதிருந்தால், அந்தப் பிரதிபிம்பம் கலங்காமல் நிலையாய் இருந்து பிரகாசிக்கும். ஆனுலும் பிரதிபிம்பம் கலங்குதலும், கலங்காதிருத்தலும் பொய், நீர் வற்றினுல் அங்கு தோற்றுகிற பொய்யான பிரதிபிம்பமும் அந்த உண்மையான பிம்பமேயாகிவிடும்.

நீரிற் றலைகீழாய் நீயலைந்தாற் போலுறினும்
பாரிலுனை நோக்கிடிலப் பாழ்நிழல்பொய்-யோருயிர்நா
னென்னினுமப் பொய்த்தோற்ற மில்லையதன்
மின்னியசற் சிற்சுகநான் மெய். [சாட்சியாய்
207

(ப—ரை) நீரில் தலைகீழாய், நீ அலைந்தாற்போல் = நீ அசைவது போல, உறினும்=தோன்றினுலும், பாரில் = பூமியின் மேல் இருக்கின்ற, உனைநோக்கிடில் = உன்னைப் பார்த்தால், அப்பாழ் நிழல் பொய் = அந்த வீணான பிரதிபிம்பம் பொய்யாம், இதுபோல, ஓர் உயிர் நான் என்னினும் = நான் ஒரு ஜீவனுக

இருந்தாலும், அப்பொய்த் தோற்றமில்லை அந்தப் பொய்யான பிரதிபிம்பம் இல்லை, அதன் சாட்சியாய் = அவைகளுக்கெல்லாம் சாட்சியாய், மின்னிய = விளங்கிய, சத் சித் சுகம் நான் = சச்சிதானந்தமாகிய நானே, மெய்=உண்மைப் பொருள்.

(பொ—ரை) நீரில் தலைகீழாய் நீ அசைவதுபோலத், தோன்றினாலும், பூமியின் மேலிருக்கின்ற உன்னைப் பார்த்தால் அந்த வீணான பிரதிபிம்பம் பொய்யாம். இதுபோல நான் ஒரு ஜீவனாக இருந்தாலும் அந்தப் பொய்யான பிரதிபிம்பம் இல்லை. அவைகளுக்கெல்லாம் சாட்சியாய் விளங்கிய சச்சிதானந்தமாகிய நானே உண்மைப்பொருள்.

கலித்தாழிசை

வெல்லத்தாற் செய்துவைத்த வேம்புகைக்கு மோவுலகாய்
நல்லசிவந்தானே நடித்தக்காற் பேதமுண்டோ 208

(ப—ரை) (1) வெல்லத்தால், செய்துவைத்த வேம்பு, கைக்குமோ=கசக்குமோ, கசக்காது அதுபோல, (3) உலகாய்= உலகம்போல, (2) நல்லசிவம் = நல்லசிவமானது, (4) தானே நடித்தக்கால் = தானே நடிக்கும்போது, பேதமுண்டோ = பேதங்கள் இருக்குமோ.

(பொ—ரை) வெல்லத்தால் செய்துவைத்த வேம்பு கசக்குமோ, கசக்காது. அதுபோல் நல்ல சிவமானது உலகம் போல் தானே நடிக்கும்போது பேதங்கள் இருக்குமா.

வெண்பா

யாது வருத்த மிலதொன்று மெங்கணுமெய்
ப்போது மகண்டசுக பூரணசிற்—சோதி
விளக்கமன்றோ தித்திப்பு வெல்ல மதனுக்
களிப்பதுண்டோ யாருமய லாய். 209

(ப—ரை) (1) யாது வருத்தம் = என்ன துன்பம் இருக்கிறது, இலது ஒன்றும் = ஒரு துன்பமும் இல்லை, எங்கணும் = எவ்விடத்தும், எப்போதும், அகண்ட, சுக = ஆனந்த, பூரண = பரிபூரண, சித்சோதி = ஞானப்பிரகாசத்தின், விளக்கமன்றோ = விளக்கமல்லவா இருக்கிறது, (4) தித்திப்பு = தித்திப்பை, (3) வெல்லம் தனக்கு = வெல்லத்திற்கு, (6) அளிப்பதுண்டோ = கொடுப்பதுண்டா, இல்லை, யாரும், (5) அயலாய் = வேறாக.

(பொ—ரை) என்ன துன்பம் இருக்கிறது. ஓர் துன்பமும் இல்லை. எவ்விடத்தும், எப்போதும், அகண்ட ஆனந்த பரிபூரண ஞானப்பிரகாசத்தின் விளக்கமல்லவா இருக்கிறது. யாரும் வெல்லத்திற்குத் தித்திப்பை வேறாகக் கொடுப்பதுண்டோ. இல்லை.

இதுவெண்மை யச்சென் றெழுதினுங்கார் மையா
லதனையவன் வாசித்து மாமோ—விதமகித
முண்டிலதோர்ந் தோராது மோர்விளக்க மாத்திரமாக்
கண்ட சுயஞ்சுடரே காண். 210

(ப—ரை) இது, வெண்மை அச்சு என்று = வெண்மையான எழுத்து என்று, எழுதினுங்கார் மையால் = கருப்பு மையினால் எழுதினாலும், அதனை அவன் வாசித்தும் = அதனை அவன் அப்படியே வாசித்தாலும், ஆமோ = அது வெண்மை எழுத்தாகுமோ, ஆகாது, அதுபோல, இதம் = நல்லது, அகிதம் = தீயது, உண்டு = உள்ளது, இலது = இல்லாதது, ஓர்ந்து ஓராதும் = அறிந்தது, அறியாதது முதலிய எல்லாம், ஓர் விளக்கமாத்திரமாக் கண்ட = ஞானப்பிரகாசமாத்திரமாக விளங்குகின்ற, சுயஞ்சுடரே = சுயஞ்சோதியே, காண் = இதை நீ அறி.

(பொ—ரை) இது வெண்மையான எழுத்து என்று கருப்பு மையினால் எழுதினாலும், அதனை அப்படியே வாசித்தாலும் அது வெண்மையான எழுத்து ஆகுமோ, ஆகாது. அதுபோல் நல்லது தீயது, உள்ளது, இல்லாதது, அறிந்தது அறியாதது முதலிய எல்லாம் ஒரே ஞானப்பிரகாச மாத்திரமாக விளங்குகின்ற சுயஞ்சோதியே. இதை நீ அறி.

நின்பாற் பலவாய் நிறைவுகுறை வாயிலதாய்
முன்பார்த்து நீயொன்று முற்றுணர்வே—தன்சாயை
நீண்டு குறைந்தொழித நின்னுடற்கோ பின்னமெலாங்
காண்டனக்கொன் றுண்டோ கழறு. 211

(ப—ரை) நின்பால் = உன்னிடத்தில், பலவாய் = பலவிதமாக, நிறைவு = நிறைவாயும், குறைவாய் = குறைவாயும், இலதாயும் = இல்லாததாயும், முன்பார்த்தும் = முன்னே அறியப் பட்டாலும், நீ, ஒன்றும் = ஒன்றுகிய, முற்று உணர்வே = பூர்ணமான அறிவே, தன் சாயை = சரீரத்தின் நிழலானது, நீண்டு = நீளமாகவும், குறைந்து = குறைவாகவும் தோன்றி, ஒழிதல் = தோன்றுமல் அடங்குதலும், நின் உடற்கா = உனது சரீரத்திற்கா அல்ல, சரீரத்தின் சாயைக்கே, அதுபோல், பின்னம் எலாம் = அநேக பேதங்களை, காண் = அறிகின்ற, தனக்கு = சாட்சியாகிய தனக்கு, ஒன்று = ஒரு பேதமும், உண்டோ, கழறு = சொல்.

(பொ—ரை) உன்னிடத்தில் பலவிதமாய் நிறைவாயும் குறைவாயும், இல்லாததாயும், முன்னே அறியப்பட்டாலும் நீ ஒன்றுகிய பூரணமான அறிவே. சரீரத்தின் நிழலானது நீளமாகவும், குறைவாகவும் தோன்றி அடங்குதலும் உனது சரீரத்திற்கா. அல்ல. சரீரத்தின் சாயைக்கே. அநேக பேதங்களை அறிகின்ற சாட்சியாகிய தனக்கு ஒரு பேதமும் உண்டோ சொல்.

காலைநிழ னீட்சிகுறை கண்டுமுச்சிக் கின்றுநன்றுய்
மாலையுமுண் டாயிரவின் மாய்ந்ததிவை—சாலஞ்
சவண மனனஞ் சமாதியிரு முத்தி
யிவண மெனினுமவை யின்று 212

(ப—ரை) காலை நிழல் = காலையில் சரீரத்தின் நிழலானது, நீட்சி = மிக நீண்டதாயும், குறை கண்டும் = குறைவதாயும், தோற்றியும், உச்சிக்கு = உச்சிக் காலத்தில், இன்று = மறைந்து விடுகிறது, நன்றுய் = நன்றுக, மாலையும் = சாயுங்காலத்தும்,

உண்டாய் = குறைவாகவும், நீளமாகவும் தோன்றி, இரவின்= இராத்திரியில், மாய்ந்தது=மறைந்து விடுகிறது, இவை சாலம்= இவை பொய்த்தோற்றமாம், அதுபோல, சவணம் = சிரவணம், மனனம், சமாதி, இருமுத்தி = ஜீவன் முத்தி, விதேக முத்தி என்பவைகளும், இவணம்=மேற்கூறியது போலவாம், எனினும்= என்றாலும், அவையின்று=அவைகள் உண்மையாக இல்லை.

(பொ—ரை) காலையில் சரீரத்தின் நிழலானது மிக நீண்டதாயும், குறைவதாயும் தோற்றியும், உச்சிக் காலத்தில் மறைந்துவிடுகிறது. நன்றாக சாயங்காலத்தும் குறைவாகவும் நீளமாகவும் தோன்றி இராத்திரியில் மறைந்து விடுகிறது. இவை எல்லாம் பொய்த்தோற்றமாம். அதுபோல சிரவணம், மனனம், சமாதி, ஜீவன் முத்தி, விதேக முத்தி, என்பவைகளும் மேற்கூறியதுபோலவாம் என்றாலும் அவைகள் உண்மையாக இல்லை.

### கலிவிருத்தம்

விவித நாமம் விளங்கப் பலபல
துவிதம் போலவுந் தோற்றினு மக்கட
லெவிதம் பேத மிலாப்புனன் மட்டுமா
மவிதம் போத மகண்ட சொரூபமே. 213

(ப—ரை) (2) விவித நாமம்=அலை, குமிழி, துளி, சுழி முதலிய பல பேர், விளங்க, பல பல = அநேகம், துவிதம் போலவும் = பேதம் போலவும், தோற்றினும் = தோற்றினாலும், (1) அக்கடல் = அந்தச்சமுத்திரமானது, (3) எவிதம்=எப்படி, பேதமிலா=பேதமில்லாத, புனல்மட்டுமாம்=நீர்மாத்திரமாமோ, அவிதம் = அப்படி, போதம்=ஞானமயமாகிய, ஆத்மாவானது, அகண்ட சொரூபமே=பின்னமற்ற ஒரே வடிவமாம்.

(பொ—ரை) அந்தச் சமுத்திரமானது அலை, குமிழி, துளி, சுழி முதலிய பல பேர் விளங்க அனேக பேதம் போலத் தோற்றினாலும் எப்படி பேதமில்லாத நீர் மாத்திரமாமோ அப்படி ஞானமயமாகிய ஆத்மாவானது பின்னமற்ற ஒரே வடிவமாம்.

பாவை யாடப் படல்கயி ருடுத
லாவ தன்றி யறிந்திடில் வேறிலை
சீவ ரீசன் செகங்கள் விளங்குத
றேவ தேவன் றிருவிளை யாடலே. 214

(ப—ரை) பாவையாடப்படல்=பொம்மைகள் ஆடுவது, கயிறு, ஆடுதல், ஆவதன்றி = ஆடுவதைத் தவிர, (3) அறிந்திடில் = அறியுமிடத்து, (2) வேறிலை = வேறல்ல, (4) சீவர் = சீவர்கள், ஈசன் = ஈஸ்வரன், செகங்கள் = உலகங்கள் என்று, விளங்குதல் = தோற்றுதல், தேவ தேவன் = பரஞ்சோதியாகிய சிவத்தின், திருவிளையாடலே. தேவ தேவன் = பிரகாசசொரூபி, பரஞ்சோதி = மேலான பிரகாச சொரூபி.

(பொ—ரை) பொம்மைகள் ஆடுவது கயிறு ஆடுவதைத் தவிர வேறல்ல. அறியுமிடத்து சீவர்கள், ஈஸ்வரன், உலகங்கள் என்று தோற்றுதல் பரஞ்சோதியாகிய சிவத்தின் திருவிளையாடலே.

### வெண்பா

சச்சிதா னந்தமதாந் தன்னிற் பிணிதுயர
மச்சங் கலகமய லஞ்ஞானத்—துச்சமிலை
யுண்டோ தழலிற்பஞ் சோடுபுழு வுண்டிதோ
கண்டோமென் பார்பித்தர் கள். 215

(ப—ரை) சச்சிதானந்தம் (அது), ஆம் தன்னில் = ஆகிய தன்னிடத்தில், பிணி = வியாதி, துயரம் = துன்பம், அச்சம் = பயம், கலகம், மயல் = மயக்கம், அஞ்ஞானம் துச்சம் = அறியாமை முதலிய பொய்கள், இலை = இல்லை, உண்டோ, தழலில் பஞ்சோடு புழு = அக்கினியில் பஞ்சும், புழுக்களும் இருக்குமா, உண்டு = இருக்கும், இதோ கண்டோம், என்பர் = என்று சொல்பவர், பித்தர்கள்.

(பொ—ரை) சச்சிதானந்தமாகிய தன்னிடத்தில் வியாதி,

துன்பம், பயம், கலகம், மயக்கம், அறியாமை முதலிய பொய்கள் இல்லை. அக்கினியில் பஞ்சும், புழுக்களும் இருக்குமா. இருக்கும் இதோ கண்டோம் என்று சொல்பவர்கள் பித்தர்கள்.

### அறுசீர் விருத்தம்

கடியார் பிட்டந் தட்டிற் பற்கள் கழலுங் கொல்
கொடியால் வளரப் படினுங் குயிலக் கொடி யாமோ
சடமார் கருவித் திரன்சா ரிடர்தற் சாரா தத்
தொடர்பா லுணர்வுற் றிடினுந் தானத் தொகை யாகா. 216

(ப—ரை) கடியார் = காக்கப்படுகின்ற, பிட்டம் = பிருஷ்டத்தை, தட்டினுல், பற்கள், கழலுங்கொல் = கழன்று விடுமா, கொடியால் = காகத்தினுல், வளரப்படினும் = வளர்க்கப் பட்டாலும், குயில், அக்கொடியாமோ = அக் காகமாகுமோ, ஆகாது, அதுபோல, சடம் ஆர் = சரீரத்திலிருக்கின்ற, கருவித் திறன் = தத்துவக் கூட்டங்கள், சார் இடர் = அடைகின்ற துன்பம், தற்சாராது = தன்னை அடையாது, அத் தொடர்பால் = அத்தத்துவங்களின் சம்பந்தத்தால், உணர்வுற்றிடினும் = விசேஷ ஞானம் உண்டானுலும், தான் = ஆத்மாவாகிய தான், அத்தொகையாகா = அந்தத் தத்துவக் கூட்டங்கள் ஆவதில்லை.

(பொ—ரை) காக்கப்படுகின்ற பிருஷ்டத்தைத் தட்டினுல் பற்கள் கழன்றுவிடுமா. காகத்தினுல் வளர்க்கப்பட்டாலும் குயில் அக்காகமாகுமா. ஆகாது. அதுபோல் சரீரத்தில் இருக்கின்ற தத்துவக் கூட்டங்கள் அடைகின்ற துன்பம் தன்னையடையாது. அந்தத் தத்துவங்களின் சம்பந்தத்தால் விசேஷ ஞானம் உண்டானுலும் ஆத்மாவாகிய தான் அந்தத் தத்துவக் கூட்டங்கள் ஆவதில்லை.

### வெண்பா

தனைத்தானே தன்னிற் சகமுதலாய்க் காட்டி
யனைத்துருவாய் நின்றழித்து மஃதாம்—பினைக்கருவி
செய்வான் செயுந்தொழிலுஞ் செய்விப்பான் செய்பொருளும்
பொய்வேரு யோர்சிலம்பி போல். 217

(ப—ரை) தனை = தன்னை, தானே = சாட்சியாகிய தானே, தன்னில் = தன்னிடத்தில், சகமுதலாய் = உலகம் முதலானவைகளாக, காட்டி, அனைத்துருவாய் நின்று = எல்லா வடிவம் ஆகவும் இருந்து, அழித்தும் = அவைகளை எல்லாம் இல்லாததாக்கி, அஃதாம் = சாட்சியாகிய தான் மாத்திரமாகவே இருக்கும், பினை = பின்னும், கருவி = கருவிகளும், செய்வான் = செய்பவனும், செயும் தொழிலும் = செய்யும் தொழில்களும், செய்விப்பான் = செய்யும்படி செய்பவனும், செய்பொருளும் = செய்யப்படும் பொருளும், கனவுபோல, பொய் = பொய்யேயாம், (3) வேரு = வேருக, (1) ஓர் சிலம்பி போல் = ஓர் சிலந்திப் பூச்சிபோல, (சிலம்பி = பட்டுப் பூச்சி)

(பொ—ரை) ஒரு சிலந்திப் பூச்சிபோலத் தன்னைச் சாட்சியாகிய தானே தன்னிடத்தில் உலகம் முதலானவைகளாகக் காட்டி எல்லா வடிவமாகவும் இருந்து அவைகளை எல்லாம் இல்லாததாக்கி சாட்சியாகிய தான் மாத்திரமாகவே இருக்கும். பின்னும் வேருகக் கருவிகளும், செய்பவனும், செய்யும் தொழில்களும், செய்யும்படி செய்பவனும், செய்யப்படும் பொருள்களும் கனவு போலப் பொய்யேயாம்.

### கலித்துறை

காலமே யூழியுகம் வருடமதி
நாள்பகலல் கடிகைகணமாஞ்
சாலமே யாயினுமோர் கோலமிலை
யோர்வினைச மைத்ததுமிலை
மூலமே சிவசத்தி யுணர்வருள்
பரன்பரமன் முதலரியயன்
கோலமே யாயோர்பரி ணமமற
மூலமாங் கொள்கையறியே. 218

(ப—ரை) காலமே = காலம் ஒன்றே, யூழி = யூழி எனவும், யுகம் = யுகம் எனவும், வருடம் = வருடம் எனவும், மதி = மாதம் எனவும், நாள் = நாள் எனவும், பகல் = பகல் எனவும், அல் = இரவெனவும், கடிகை = நாழிகை எனவும், கணம் = க்ஷணம்

எனவும், சொல்லப்படுகிற, சாலமே ஆயினும் = கற்பனைகளாக விளங்கினாலும், ஓர் கோலமில்லை = ஒரு பொருளுமாகாது, ஓர் வினை = ஓர் காரியத்தையும், சமைத்ததுமில்லை = தான் செய்ததும் இல்லை, அதுபோல, மூலமே = ஆதாரமான ஆத்மாவே, சிவ சத்தி = சிவம் சத்தி, உணர்வு = ஞானத்தை, அருள் = கொடுக்கின்ற, பரன் = மேலான குரு, பரமன் = ஈஸ்வரன், முதல் அரி = முதன்மையான விஷ்ணு, அயன் = பிரமன் என்னும், கோலமே ஆய் = வடிவங்களாம், ஓர் பரிணாமமற = ஓர் மாறுபாடுமின்றிய, மூலமாம் = சகலத்திற்கும், ஆதாரமாகிய = ஆத்மாவாய் இருக்கிற, கொள்கை அறி (ஏ) = தன்மை அறிவாய்.

(ஏ—அசை.)

(பொ—ரை) காலம் ஒன்றே யூழி எனவும், யுகமெனவும் வருடம் எனவும், மாதம் எனவும், நாள் எனவும், பகல் எனவும், இரவு எனவும், நாழிகை எனவும், க்ஷணம் எனவும் சொல்லப்படுகிற கற்பனைகளாக விளங்கினாலும், ஓர் பொருளும் ஆகாது. ஓர் காரியத்தையும் தான் செய்ததில்லை. அதுபோல் ஆதாரமான ஆத்மாவே சிவம், சக்தி, ஞானத்தைக் கொடுக்கிற மேலான குரு, ஈஸ்வரன், முதன்மையாகிய விஷ்ணு, பிரமன் என்னும் வடிவங்களாயும் ஓர் மாறுபாடுமின்றிய சகலத்திற்கும் ஆதாரமாகிய ஆத்மாவாய் இருக்கிற தன்மை அறிவாய்.

### கலிவிருத்தம்

இராக மச்ச மிடம்ப முலோபமுங்
குரோத மின்பங் கொடுமை பொருமையும்
விராவு காலை வெளிப்படை யாமன
சொரூப மீதெனச் சுட்டிடிற் சாந்தமே. 219

(ப—ரை) இராகம் = இச்சை, அச்சம் = பயம், இடம்பம், உலோபமும் = உலோபம், குரோதம் = கோபம், இன்பம், கொடுமை, பொருமையும் = பொருமை முதலியன, விராவுகாலை = பொருந்துகின்ற காலத்து, வெளிப்படையாம் = வெளிப்படையாகிய, மன சொரூபம் = மனத்தின் வடிவம், ஈது என = இதுதான் என்று, சுட்டிடில் = சுட்டிப் பார்த்தால், சாந்தமே = அவைகள் சாந்தமாகிவிடும்.

(பொ—ரை) இச்சை, பயம், இடம்பம், உலோபம், கோபம், இன்பம், கொடுமை, பொருமை முதலியன பொருந்துகின்ற காலத்து வெளிப்படையாகிய மனத்தின் வடிவம், இதுதான் என்று சுட்டிப்பார்த்தால் அவைகள் சாந்தமாய்விடும்.

### அறுசீர் விருத்தம்

அன்னந் தனக்கா சிரய
மாகி யதனுற் சீவித்
தன்ன மிலதே னசிப்ப
தாய்த்தோல் கறையூண் மலமென்
பன்ன கூட்ட மாகு
மதனு லிந்த வுடல
மன்ன தின்ன தென்னற்
கரிதா மான்மா வாகா. 220

(ப—ரை) அன்னம் தனக்கு = சாப்பிட்ட அன்னத்திற்கு, ஆசிரயமாகி = இருப்பிடமாகி, அதனுல் = அந்த அன்னத்தினுலேயே, ஜீவித்து, அன்னமிலதேல் = அன்னம் இல்லாவிட்டால், நசிப்பதாய் = கெடுவதாய், தோல், கறை = ரத்தம், ஊண் = மாமிசம், மலம், என்பு = எலும்பு முதலிய, அன்ன = அப்படிப்பட்ட, கூட்டமாகும், அதனுல் இந்த உடலம் = இந்த உடலாகிய அன்னமய கோசமானது, அன்னது = அப்படிப்பட்டது, இன்னது = இப்படிப்பட்டது, என்னற்கு = என்று நிச்சயிப்பதற்கு, அரிதாம் = முடியாததாகிய, ஆன்மா = ஆத்மா, ஆகா = ஆகாது.

(பொ—ரை) சாப்பிட்ட அன்னத்திற்கு இருப்பிடமாகி அந்த அன்னத்தினுலேயே ஜீவித்து, அன்னம் இல்லாவிட்டால் கெடுவதாய், தோல், இரத்தம், மாமிசம், மலம், எலும்பு முதலிய அப்படிப்பட்ட கூட்டமாகும். அதனுல் இந்த உடலாகிய அன்னமய கோசமானது அப்படிப்பட்டது, இப்படிப்பட்டது என்று நிச்சயிப்பதற்கு முடியாததாகிய ஆத்மா ஆகாது.

வாத விகார மாயும்
வாதம் போலுள் வெளியும்
போதல் வருத லுடைத்தாய்ப்
பொலியும் பிராண மயமெப்
போதும் யாதோர் வத்தும்
புகலு மிட்டா னிட்ட
மேதிற் றனையுள் ளதையோர்
கிலதா லான்மா வாகா. 221

(ப—ரை) வாத விகாரமாயும்=வாயுவின் விகாரமாகியும், வாதம் போல் = அந்த வாய்வு போல, உள்வெளியும் = உள்ளும் வெளியும், போதல் வருதல், உடைத்தாய் = உடையதாயும், பொலியும் = விளங்குகின்ற, பிராண மயம் = பிராணமய கோசமானது, எப்போதும், யாதோர் வத்தும் = யாதொரு வஸ்துவையும், புகலும்=சொல்லப்படுகின்ற, இட்டா நிட்டம்= இஷ்டத்தையும், அனிஷ்டத்தையும், ஏதில்=அன்னியத்தையும், தனை = தன்னையும், உள்ளதை = மற்றும் இருப்பதையும், ஓர்கிலதால் = அறியாததாய் இருப்பதால், ஆன்மா ஆகா = ஆத்மாவாகாது.

(பொ—ரை) வாயுவின் விகாரமாகியும், அந்த வாய்வு போல உள்ளும் வெளியும் போதல், வருதல் உடையதாயும் விளங்குகின்ற பிராணமய கோசமானது எப்போதும் யாதொரு வஸ்துவையும், சொல்லப்படுகின்ற இஷ்டத்தையும், அனிஷ்டத்தையும், அன்னியத்தையும், தன்னையும், மற்றும் இருப்பதையும் அறியாததாய் இருப்பதால் ஆத்மா ஆகாது.

பவமாய் வுளதாய் விகாரப்
படுவ தாய்த்துன் புருவா
யவமின் ஞான விடய
மதனுன் மனோம யந்தா
னெவமி லான்மா வாகா
விறப்பி லாத வான்மாக்
கவரு முலக வடிவாய்க்
காணப் படாத தன்றோ. 222

(ப—ரை) பவம்=பிறப்பு, மாய்வு = இறப்பு, உளதாய், விகாரப்படுவதாய், துன்புருவாய் = துன்ப வடிவமாய், அவம் இல் = வீண் என்பது இல்லாத, ஞான விடயம் = ஞானத்திற்கு விஷயமாம், அதனல், மனோமயம் (தான்) = மனோமய கோசமானது, எவம் இல்=குற்றம் இல்லாத, ஆன்மா ஆகா= ஆத்மா ஆகாது, இறப்பில்லாத ஆன்மா = அழிவில்லாத ஆன்மாவானது, கவரும்=கிரகிக்கின்ற, உலக வடிவமாய்=உலக வடிவமாக, காணப்படாததன்றோ=காணப்படாததல்லவா.

(தான்—சாரியை)

(பொ—ரை) பிறப்பு, இறப்பு, உளதாய், விகாரப் படுவதாய், துன்ப வடிவமாய், வீண் என்பது இல்லாத ஞானத்திற்கு விஷயமாம். அதனல் மனோமய கோசமானது குற்றம் இல்லாத ஆத்மா ஆகாது. அழிவில்லாத ஆன்மாவானது கிரகிக்கின்ற உலக வடிவமாகக் காணப்படாததல்லவா.

சடமாய் விகார மதுதான்
சார்த லானுங் காணப்
படுவ தான தாலும்
பகரு மற்ப மாகி
யடருஞ் சர்வ வியாப
கந்தா னலதா தலினும்
படரவிஞ் ஞான மயமே
பரமான் மாவா காவால். 223

(ப—ரை) சடமாய் = அறிவில்லாததாய், விகாரம் (அது) (தான்)= விகாரத்தை, சார்தலானும்=அடைதலாலும், காணப்படுவது ஆனதாலும், பகரும்=சொல்லுகின்ற, அற்பமாகி= அற்பமானதாலும், அடரும்=நெருங்கிய, சர்வ வியாபகம், தான் அலது ஆதலினும்= தான்அல்லாததாலும்,படர்=பொருந்துகின்ற, விஞ்ஞான மயம் (ஏ) = விஞ்ஞானமய கோசமானது, பரமான்மா ஆகா (ஆல்) = பரமாத்மா ஆகாது.

அது—பகுதிப்பொருள் விகுதி. தான்—சாரியை.

ஏ, ஆல்—அசைகள்.

(பொ—ரை) அறிவில்லாததாய், விகாரத்தை அடைதலாலும், காணப்படுவது ஆனதாலும், சொல்லுகின்ற அற்பமானதாலும், நெருங்கிய சர்வ வியாபகம் தான் அல்லாததாலும் பொருந்துகின்ற விஞ்ஞானமய கோசமானது பரமாத்மா ஆகாது.

திகழ்த்து மந்தக் கரணு
தியவா முபாதி சார்வாய்
வருத்த மாயைப் பரிணு
மமதாய்க் கரும சன்யத்
தொகைக்கா சிரய மாகித்
தொடர்சன் னியமா த்லினு
மகிழ்ச்சி பொருவா னந்த
மயநல் லான்மா வாகா. 224

(ப—ரை) திகழ்த்தும் = விளங்குகின்ற, அந்தக் கரணுதியவாம் = அந்தக்கரணம் முதலாகிய, உபாதிசார்வாய் = தடைகள் உடையதாய், வகுத்த மாயை = பிரிக்கப்பட்ட மாயையின். பரிணுமம் (அது) ஆய் = பரிணுமமாய், கர்ம சன்யத் தொகைக்கு = கர்ம ஜன்யக் கூட்டங்களுக்கு, ஆசிரயமாகி = இருப்பிடமாய், தொடர் = தொடர்கின்ற, சன்னியம் = உற்பத்தி உடையதாம், ஆதலினும் = ஆதலினுலும், மகிழ்ச்சி, பொருவு = போன்ற, ஆனந்தமய = ஆனந்தமய கோசமானது, நல்லான்மா ஆகா = சுக சொருபமாகிய ஆத்மா ஆகாது.

அது-பகுதிப்பொருள் விகுதி. கர்மஜன்யம் = கர்மத்தினுற்பத்தி.
பரிணுமம் = வேற்றுருவமாதல்.

(பொ—ரை) விளங்குகின்ற அந்தக்கரணம் முதலாகிய தடைகள் உடையதாய் பிரிக்கப்பட்ட மாயையின் பரிணுமமாய்க் கர்ம ஜன்யக் கூட்டங்களுக்கு இருப்பிடமாய்த் தொடர்கின்ற உற்பத்தி உடையதாம். ஆதலினுலும் மகிழ்ச்சி போன்ற ஆனந்தமய கோசமானது சுக சொருபமாகிய ஆத்மா ஆகாது.

சூக்கு மந்தா ஞகா
தூல மாகா குறுக்கோ
டாக்கு நீள மாகா
தாயும் வரவி ஞேடு
போக்கி லாதா யிருந்து
பொலிவ தியாதோ வதுவே
வாக்கு மனமு மெட்டா
வத்து வெனநிச் சயிப்பாய். 225

(ப—ரை) சூக்குமம் (தான்) ஆகா = சூட்சமமாகாது, தூலமாகா = ஸ்தூலமாகாது, குறுக்கோடு = குறுக்குடன், ஆக்கு நீளமாகாதாயும் = செய்கின்ற நீளமும் ஆகாததாயும், வரவிஞேடு போக்கிலதாய் = வரவு போக்கில்லாததாய், இருந்து, பொலிவது யாதோ = விளங்குவது எதுவோ, அதுவே, வாக்கு, மனமும், எட்டா = எட்டாத, வத்து என = வஸ்துவாகிய ஆத்மா என்று, நிச்சயிப்பாய். (தான்—சாரியை)

(பொ—ரை) சூட்சமமாகாது, ஸ்தூலமாகாது, குறுக்குடன் செய்கின்ற நீளமும் ஆகாததாயும் வரவு போக்கில்லாததாய் இருந்து விளங்குவது எதுவோ அதுவே வாக்கு மனமும் எட்டாத வஸ்துவாகிய ஆத்மா என்று நிச்சயிப்பாய்.

## கலிவிருத்தம்

சுருதி யுத்தி சுவானு பவப்படி
குருவு ணர்த்திய கூற்றினம் பிக்கையால்
வருதி டத்துடன் மற்றெவை தோற்றினு
முருவம் யாதெவ ணுற்றதஃ தென்னலே. 226

(ப—ரை) சுருதி, யுக்தி, சுவானுபவப்படி, குரு உணர்த்திய கூற்றின் = சொல்லின், நம்பிக்கையால், வருதிடத்துடன் = வந்த திடத்தோடு, மற்று = வேறு போல், எவைத் தோற்றினும் = எவைகள் தோற்றினுலும், உருவம் யாது = அவைகளுக்கு வடிவம் என்ன, எவண் உற்றது அஃது = அது எங்கே இருக்கிறது,

என்னல் (ஏ) = என்று ஆராய்ந்து பார்க்கக் கடவர், அப்படி விசாரித்தால் கல்லில் பலவகை பிரதிமைகள் போல ஆத்மாவே அவைகளுக்கு வடிவமும் இருப்பிடமும் என்ன விளங்கும்,

(ஏ—அசை.)

சுருதி=வேதம், சுவானுபவம்=தனது அனுபவம்.

(பொ—ரை) சுருதி, யுக்தி,சுவானுபவப்படி குருவுணர்த்திய சொல்லில் நம்பிக்கையால் வந்த திடத்தோடு வேறு போல எவைகள் தோற்றினாலும் அவைகளுக்கு வடிவம் என்ன, அது எங்கே இருக்கிறது என்று ஆராய்ந்து பார்க்கக் கடவர். அப்படி விசாரித்தால் கல்லில் பலவகை பிரதிமைகள் போல ஆத்மாவே அவைகளுக்கு வடிவமும் இருப்பிடமும் என்ன விளங்கும்.

## கலிநிலைத்துறை

அனுசந் தானம்விட் டிருக்குதல் யோகில்வேட் பறுதல்
பின்னையு மன்னபா னுதிமிக் குணறுயில் பிணியின்
கனவிட் சேபம்வேர் விருளொளி சூனியங் காண்கை
யினதொ டக்கறப் பூரணன் சான்றுநா னெனத்தேர். 227

(ப—ரை) அனுசந்தானம், விட்டிருக்குதல், யோகில்= தியானத்தில், வேட்பறுதல்=ஆசையில்லாதிருத்தல், பின்னையும்= மேலும், அன்ன பானுதி மிக்க உணல் = மிகுதியாக அன்னம் உண்ணல், நீர்குடித்தல், துயில்= நித்திரையினாலும், பிணியின்= வியாதியினாலும், கன விட்சேபம் = மிகச் சஞ்சலம் அடைதல், வேர்வு=வேர்வை, இருள், ஒளி=பிரகாசம், சூனியம் காண்கை= சூனியம் என்பவை தோற்றுதல், இன=என்னும் இப்படிப்பட்ட, தொடக்கு அற = விக்கினங்கள் நீங்க, பூரணன் = பூரணனும், சான்று=சாட்சியும்,நான் என=யானே என்று, தேர்= நிச்சயித்து அறி. பின்னையும்—பின்னையும் என்பதன் இடைக்குறை.

இன—இன்ன என்பதன் இடைக்குறை.

அனுசந்தானம்=அப்பியாசம், யோகம். யோகு=தியானம்.

(பொ—ரை) அனுசந்தானம் விட்டிருக்குதல், தியானத்தில் ஆசையில்லாதிருத்தல், மேலும் மிகுதியாக அன்னம் உண்ணல், நீர் குடித்தல், நித்திரையினாலும், வியாதியினாலும், மிகச் சஞ்சலம் அடைதல், வேர்வை, இருள், பிரகாசம், சூனியம் என்பவை தோற்றல் என்னும் இப்படிப்பட்ட விக்கினங்கள் நீங்க பூரணனும் சர்வ சாட்சியும் யானே என்று நிச்சயித்து அறி.

## வெண்பா

உச்சிநுதல் கண்ணாசி யுண்ணாவாய் பற்காது
வைச்சகழுத் தாகந்தோள் வன்கைவயி—னச்சுபுற
நேரிடைகு தங்குய்ய நீள்குறங்கு கால்விரலோ
பாரிடையா மன்றே பகல். 228

(ப—ரை) உச்சி, நுதல் = நெற்றி, கண், நாசி = மூக்கு, உண்ணா = உண்ணுகின்ற நாக்கு, வாய், பல், காது, வைச்ச= ஏற்பட்ட, கழுத்து, ஆகம்= மார்பு, தோள், வன் கை= வலிய கை, வயின் = வயிறு, நச்சு = விரும்புகின்ற, புறம் = முதுகு, நேர்= பொருந்திய, இடை= இடுப்பு, குதம்= மலத் துவாரம், குய்யம்= நீர்த் துவாரம், நீள் = நீண்ட, குறங்கு= தொடை, கால்,விரலோ= விரல் என்னும் இவைகளா, (1) பாரிடை= இவ்வுலகில், யாம்= நாம் என்பது, (3) அன்றே= அல்லவே, பகல்= என்று இப்படி முமூக்ஷுக்கள் பகுத்துப் பார்க்கக் கடவர்.

வைச்ச—வைத்த என்பதின் போலி.

(பொ—ரை) இவ்வுலகில் நாம் என்பது உச்சி, நெற்றி, கண், மூக்கு, உண்ணுகின்ற நாக்கு, வாய், பல், காது, ஏற்பட்ட கழுத்து, மார்பு, தோள், வலிய கை, வயிறு, விரும்புகின்ற முதுகு, பொருந்திய இடுப்பு, மலத் துவாரம், நீர்த் துவாரம், நீண்ட தொடை, கால் விரல்கள் என்னும் இவைகளா. அல்லவே என்று இப்படி முமூக்ஷுக்கள் பகுத்துப் பார்க்கக் கடவர்.

மயிர்தோ னரம்பென்பு மாமிசங்கீ லாலங்
குயில்குறும்பி மூளைசளி கோழை—வியர்வைசிறு
நீர்மலஞ்சீப் புண்ணீர் நிணஞ்சுக் கிலம்புழுக்கள்
சார்மலங்கா ணிந்தத் தனு. 229

(ப—ரை) (2) மயிர் = ரோமம், தோல், நரம்பு, என்பு = எலும்பு, மாமிசம், கீலாலம் = இரத்தம், குயில் = சொல்லுகின்ற, குறும்பி = காதுக் குறும்பி, மூளை, சளி, கோழை, வியர்வை, சிறுநீர், மலம், சீ, புண்ணீர், ஊன் நீர், நிணம் = கொழுப்பு, சுக்கிலம், புழுக்கள், சார் = என்பவைகள் கூடிய, மலம் = மலமாகும், காண் = இதை யோசித்துப் பார், (1) இந்தத் தனு = இந்தச் சரீரமானது.

(பொ—ரை) இந்தச் சரீரமானது ரோமம், தோல், நரம்பு, எலும்பு, மாமிசம், இரத்தம், சொல்லுகின்ற காதுக் குறும்பி, மூளை, சளி, கோழை, வியர்வை, சிறுநீர், மலம், சீ, ஊன் நீர், கொழுப்பு, சுக்கிலம், புழுக்கள் என்பவைகள் கூடிய மலமாகும். இதை யோசித்துப் பார்.

## வஞ்சி விருத்தம்

ஒன்பது புரையோடிய புண்ணை
யென்பதை யறியீருடல் யானென்
றன்பது செயுமஞ் ஞைகணீரிவ்
வன்பதை விடின்மா லொழிவீரே. 230

(ப—ரை) ஒன்பது = இது ஒன்பது, புரை ஓடிய புண்ணை, என்பதை, அறியீர் = நினைத்துப் பார்க்கமாட்டீர்கள், உடல் = இச்சரீரம், யானென்று = நானே என்று, அன்பு (அது) செயும் = இச்சை வைக்கின்ற, அஞ்ஞைகள் நீர் = மூடர்களாகிய நீங்கள், இவ்வன்பு அதை விடின் = இந்த வலிய நிச்சயத்தை விடில், மால் = பந்தமாகிய மயக்கத்தை, விடுவீர் (ஏ) = விடுவீர்கள்.

அது—பகுதிப்பொருள் விகுதி. ஏ—அசை.

(பொ—ரை) இது ஒன்பது புரையோடிய புண்ணை, என்பதை நினைத்துப் பார்க்க மாட்டீர்கள். இச்சரீரம் நானே என்று இச்சை வைக்கின்ற மூடர்களாகிய நீங்கள் இந்த வலிய நிச்சயத்தை விடில் பந்தமாகிய மயக்கத்தை விடுவீர்கள்.

## அறுசீர் விருத்தம்

சிறிது போதின்முன் புறத்துறு
மனதினைச் சிரமுதற் கான்மட்டுஞ்
செறிய வைத்துட லிந்தியம்
பிராணனுஞ் செடஞ்சிறு வடிவென்று
பிறிவு பட்டது கண்டிட
நிறுத்துமப் பெற்றியா லெனக்குள்ளாய்
வறிது நிற்குமிம் மனம்பிரா
ணன்பொறி மாமிச வுடலாகேன். 231

(ப—ரை) சிறிது போதின் முன் = கொஞ்ச நேரத்திற்கு முன்னே, புறத்து உறும் = வெளியே சென்ற, மனதினை = மனத்தைத் திருப்பி, சிரமுதல் = தனது சரீரத்தில் தலை முதல், கால் மட்டும் = கால் வரையும், செறிய வைத்து = பொருந்தச் செய்து, உடல் = உடலும், இந்தியம் = இந்திரியங்களும், பிராணனும் = பிராணனுமாகிய இவைகள், செடம் = சடமும், சிறு வடிவென்று = சிறு வடிவமும் ஆகுமென்று, பிறிவு பட்டு = வேருக, அது கண்டிட = அவைகளைப் பார்க்கும்படி, நிறுத்தும் = அம்மனத்தை நிறுத்துகின்ற, அப்பெற்றியால் = அந்தத் தன்மையினுல், எனக்கு உள்ளாய் = சின்மாத்திர ஆத்மாவாகிய எனக்குள்ளாக, வறிது நிற்கும் = சும்மா இருக்கின்ற, இம்மனம் பிராணன், பொறி = இந்திரியங்கள், மாமிசவுடல் = மாமிச மயமாகிய சரீரம் என்னும் இவைகள், ஆகேன் = சாக்ஷியாகிய நான் ஆகிறதில்லை.

(பொ—ரை) கொஞ்ச நேரத்திற்கு முன்னே வெளியே சென்ற மனத்தைத் திருப்பித் தனது சரீரத்தில் தலை முதல் கால் வரையும் பொருந்தச் செய்து உடலும் இந்திரியங்களும் பிராணனுமாகிய இவைகள் சடமும் சிறுவடிவமும் ஆகுமென்று வேருக அவைகளைப் பார்க்கும்படி அம்மனத்தை நிறுத்துகின்ற அந்தத் தன்மையினுல் சின்மாத்திர ஆத்மாவாகிய எனக்குள்ளாக சும்மா இருக்கின்ற இம்மனம், பிராணன், இந்திரியங்கள், மாமிசமயமாகிய சரீரம் என்னும் இவைகள் சாக்ஷியாகிய நான் ஆகிறதில்லை.

வெண்பா

ஒருடம்பு தூல முலகனைத்துஞ் சூக்குமமாங்
காரணமோ பின்னொன்றுங் காணுமை—பேருணர்வே
மாமிருத்து பிண்டம் வனைகடங்கண் மற்றுமவை
தாமுடைவும் பூமியொன்றே தான். 232

(ப—ரை) (2) ஓர் உடம்பு = இந்த ஒரு சரீரம், தூலம் = ஸ்தூலமாம், உலகனைத்தும் = உலகமெல்லாம், சூக்குமமாம் = சூட்சுமமாம், காரணமோ = காரண சரீரம், பின் ஒன்றும் காணுமை = வேறு ஒன்றும் காணுமையாம், இம் மூவகையும், பேருணர்வே = பெரிய ஞானமாத்திரமாகிய ஆத்மாவே, (1) மா = பெரிய, மிருத்து பிண்டம் = மண்ணின் திரட்சி, வனைகடங்கள் = செய்யப்பட்ட குடங்கள், மற்றும் = மேலும், அவை (தாம்) = அக்குடங்கள், உடைவும் = உடைதல் என்னும் மூவகையும், பூமியொன்றே (தான்) = ஒரே பூமியாகுவது போல.

தான், தாம் — சாரியைகள்.

(பொ—ரை) பெரிய மண்ணின் திரட்சி, செய்யப்பட்ட குடங்கள், மேலும் அக்குடங்கள் உடைதல் என்னும் மூவகையும் ஒரே பூமியாகுவது போல இந்த ஒரு சரீரம் ஸ்தூலமாம். உலகம் எல்லாம் சூட்சுமமாம். காரண சரீரம் வேறு ஒன்றும் காணுமையாம் இம் மூவகையும் பெரிய ஞானமாத்திரமாகிய ஆத்மாவே.

சூழ்புறமும் வீடுஞ் சொலுமதனுட் பல்பொருளும்
வாழ்வுறக்கண் டொன்றுமிலை மற்றென்று-மாழ்குதல்போ
னின்றசகங் காய நினைவனைத்துங் கண்டுபினை
யொன்றுமிலை யென்றுரின் ரே. 233

(ப—ரை) சூழ்புறமும் = சூழ்ந்திருக்கின்ற வெளிப்பக்கமும், வீடும், சொலும் = சொல்லப்பட்ட, அதனுள் = வீட்டினுள் இருக்கின்ற, பல் பொருளும் = பல வஸ்துக்களும், வாழ்வு உற = விளங்கிக்கொண்டிருக்க, கண்டு = பார்த்து, ஒன்றுமிலை மற்று = மறுபடி வேறொன்றுமில்லை, என்று, மாழ்குதல் போல் = அவைகளைக்

கண்டு தன்னையறியாமல் வருந்துதல்போல, நின்றசகம்= தோன்றிக் கொண்டிருக்கின்ற ஜகம், காயம்=சரீரம், நினைவு= நினைவு முதலிய, அனைத்துங் கண்டு = எல்லாவற்றையும் பார்த்து, பினையொன்றுமிலை=மறுபடி வேறு ஒன்றுமில்லை என்று, என்ருர்=அறிந்து சொன்ன தான், இன்ரே=இல்லையா.

(பொ—ரை) சூழ்ந்திருக்கின்ற வெளிப்பக்கமும், வீடும், சொல்லப்பட்ட வீட்டினுள்ளிருக்கின்ற பல வஸ்துக்களும் விளங்கிக் கொண்டிருக்கப் பார்த்து மறுபடி வேருென்றுமில்லை என்று அவைகளைக் கண்டு தன்னையறியாமல் வருந்துதல் போல, தோற்றிக் கொண்டிருக்கின்ற ஜகம், சரீரம், நினைவு முதலிய எல்லாவற்றையும் பார்த்து மறுபடி வேருென்றுமில்லையென்று அறிந்து சொன்ன தான் இல்லையா.

## அறுசீர் விருத்தம்

தூலமே தலைகான் மட்டுஞ்
சூக்கும நினைவு மட்டா
மூலமே மூட மாகு
மூன்றுடல் சாக்கி ரத்தாந்
தூலமல் லாமன் மூல
சூக்குமஞ் சொப்ப னந்தான்
மூலமாத் திரஞ்சு ழுத்தி
முரணிவை யலைநீ கண்டாய். 234

(ப—ரை) தூலம்(ஏ)=ஸ்தூல சரீரம், தலை கால் மட்டும்= தலை முதல் கால் வரையுமாம், சூக்குமம்=சூக்ஷ்ம சரீரம், நினைவு மட்டாம், மூலம் (ஏ) = காரண சரீரம் என்பது, மூடமாகும், மூன்று உடல் = ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சரீரங்கள் மூன்றும், சாக்கிரத்து ஆம்=சாக்கிர காலத்தில் விளங்கிக் கொண்டிருக்கும், தூலம் அல்லாமல் = இந்த ஸ்தூல சரீரத்தைத் தவிர, மூல சூக்குமம்=காரண சரீரமும், சூக்ஷ்ம சரீரமும்; சொப்பனந்தான்= சொப்பன காலத்தில் தோற்றும், மூல மாத்திரம் = காரண சரீர

மாத்திரம், சுழுத்தி = சுழுத்தியில் இருக்கும், முரண் = ஒன்றுக்கொன்று மாறுபடுகின்ற. இவை = இவைகள், யலை நீ= நீயல்ல, கண்டாய்=சாக்ஷியாய் இவைகளைப் பார்த்துக்கொண்டு இருக்கிறுய். (ஏ, ஏ — அசைகள்)

(பொ—ரை) ஸ்தூல சரீரம் தலை முதல் கால் வரையுமாம். சூக்ஷ்ம சரீரம் நினைவு மட்டாம். காரண சரீரமென்பது மூடமாகும். ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சரீரங்கள் மூன்றும் சாக்கிர காலத்தில் விளங்கிக் கொண்டிருக்கும். இந்த ஸ்தூல சரீரத்தைத் தவிர காரண சரீரமும், சூக்ஷ்ம சரீரமும் சொப்பனகாலத்தில் தோற்றும், காரண சரீர மாத்திரம் சுழுத்தியில் இருக்கும். ஒன்றுக்கொன்று மாறுபடுகின்ற இவைகள் நீயல்ல. சாக்ஷியாய் இவைகளைப் பார்த்துக்கொண்டிருக்கிறுய்.

## கலிவிருத்தம்

உலகு தூலமிவ் வோருடல் சூக்கும
மிலது மற்றென் றெனச்சொலல் காரண
மலமு ருவிட யப்பொருண் மந்திர
நலசொ ரூபமஞ் ஞானம தாலரோ. 235

(ப—ரை) (2) உலகு = உலகம், தூலம் = ஸ்தூலமாம், இவ்வோர் உடல் = இந்த ஓர் சரீரம், சூக்குமம் = சூக்ஷ்மமாம், இலது மற்றென்று = மற்றென்றும் தோன்றவில்லை, எனச்சொலல் = என்று அறிந்து சொல்லப்படுதல், காரணம் = காரணமாம், (1) அலம் உரு = முறையே போதுமென்று திருப்தி பெருத, விடயப் பொருள் = விஷய வஸ்துக்களாயும், மந்திர = சிந்தனையாகிய, நல சொரூபம் = நல்ல ரூபமாயும், அஞ்ஞானம் = அறியாமை வடிவமாகியும், அதால் (அரோ) = இருப்பதனுல்.

அரோ—அசை. நல—நல்ல என்பதன் இடைக்குறை.
விடயம் = அறிபடுபொருள்.

(பொ—ரை) முறையே போதுமென்று திருப்தி பெருத விஷய வஸ்துக்களாயும், சிந்தனையாகிய நல்ல ரூபமாயும்,

அறியாமை வடிவாகியும் இருப்பதனால் உலகம் ஸ்தூலமாம். இந்த ஓர் சரீரம் சூக்ஷ்மமாம். மற்றொன்றும் தோன்றவில்லையென்று அறிந்து சொல்லப்படுதல் காரணமாம்.

## வெண்பா

தேகமொடு தேகச் செயலு நினைவுகளு
மேகவறி வாகு மெனக்கயலென்—றூகித்
தவைபிறிவாக் காண்பையா னற்சாந்த சித்தா
குவையவையுஞ் சாந்தமா கும். 236

(ப—ரை) தேகமொடு=இந்தச் சரீரமும், தேகச் செயலும்= இச்சரீரத்தின் செய்கைகளும், நினைவுகளும், ஏக=ஒரேவிதமான, அறிவாகும்=ஞான சொரூபமாயிருக்கிற, எனக்கு, அயலென்று= அன்னியமானவைகளென்று, ஊகித்து = யோசித்துப் பார்த்து, அவை=அவைகளை, பிறிவா=வேறாக, காண்பையால்= காண்பாயானால், சாந்த சித்தாகுவை = நீ சாந்தமான சித் சொரூபமாவாய்; பின்பு, அவையும் சாந்தமாகும் = அவைகளும் சாந்த சொரூபமாய் விடும்.

(பொ—ரை) இந்தச் சரீரமும், இச்சரீரத்தின் செய்கைகளும் நினைவுகளும் ஒரே விதமான ஞான சொரூபமாயிருக்கிற எனக்கு அன்னியமானவைகளென்று யோசித்துப் பார்த்து அவைகளை வேறாகக் காண்பாயானால் நீ சாந்தமான சித் சொரூபமாவாய். பின்பு அவைகளும் சாந்த சொரூபமாய் விடும்.

சனன முருவநிறஞ் சாதியுட னமம்
தனியா சிரமமுதற் சாத—லெனுமிவையே
தூல சரீர சுபாவங்க ளென்றறிந்தே
மேலைநிகழ் சாட்சியான் மெய். 237

(ப—ரை) சனனம்=பிறப்பு, உருவம்=வடிவம், நிறம், சாதியுடன்=சாதி, நாமம்=பெயர், தனி=கலப்பற்ற, ஆசிரமம், முதல்=முதலியன, சாதல்=இறப்பு, எனும் இவையே=என்னும்

இவைகளே, தூல சரீர சுபாவங்கள் = ஸ்தூல, சரீர சுபாவங்கள், என்றறிந்து (ஏ), மேலை நிகழ் = மேலாக விளங்குகின்ற, சாட்சியான் = சாட்சி நானே, மெய் = இதுவே உண்மை.

ஏ—அசை.

(பொ—ரை) பிறப்பு, வடிவம், நிறம், சாதி, பெயர், கலப்பற்ற ஆசிரமம் முதலியன இறப்பு என்னும் இவைகளே ஸ்தூல சரீர சுபாவங்கள் என்று அறிந்து மேலாக விளங்குகின்ற சாட்சி நானே. இதுவே உண்மை.

இச்சைவெறுப் பாதி யியல்சமத மாதிகுணந்
துச்சநலஞ் செய்கைசுகந் துன்பருந்தல்—வைச்ச
விகபரலோ கஞ்சேர்ந் திடலந்த மந்தா
திகளுறுதல் சூக்குமமெய் தேர். 238

(ப—ரை) இச்சை, வெறுப்பு, ஆதி = முதலியன, இயல் = பொருந்திய, சமம், தமாதி, குணம் = குணங்கள், துச்சம், தீமை, நலம் = நன்மை, செய்கை = செய்தல், சுகம், துன்பருந்தல் = துன்பங்களை அனுபவித்தல், வைச்ச = ஏற்பட்டிருக்கிற, இகபரலோகம் = இகலோகம் பரலோகம், சேர்ந்திடல் = அடைதல், அந்த மந்தாதிகள், உறுதல் = அடைதல், சூக்கும மெய் = சூக்ஷ்ம சரீரத்தின் சுபாவங்களாம், தேர் = இதை அறிந்து கொள்.

சமம் = மனவடக்கம். தமம் = இந்திரியவடக்கம். மந்தம் = இந்திரியங்களின் மந்தத் தன்மை. அந்தம் = இந்திரியங்களின் ஓய்வு.

(பொ—ரை) இச்சை, வெறுப்பு முதலியன பொருந்திய சமம், தமாதி குணங்கள், தீமை நன்மை செய்தல், சுகம் துக்கங்களை அனுபவித்தல் ஏற்பட்டிருக்கிற இகலோகம், பரலோகம் அடைதல், அந்தம் மந்தாதிகள் அடைதல் சூக்ஷ்ம சரீரத்தின் சுபாவங்களாம். இதை அறிந்துகொள்.

## அறுசீர் விருத்தம்

உருவங் கிரியை சங்கற்ப
மொன்றுந் தோற்ற மிலாமையெனுஞ்
சருவம் விடய மாமதனாற்
றானன் றவற்றின் சாட்சியதா
யருவ மகன்ம மசங்கற்ப
மறிவா மான்ம சொரூபந்தான்
பருவ முடையார் குருவருளாற்
பயிலுஞ் சுகமாம் பரபதமே. 239

(ப—ரை) உருவம் = வடிவம், கிரியை = செய்கை, சங்கற்பம் = நினைவு, ஒன்றும், தோற்றமிலாமை = தோன்றாமை, எனும் சருவம் = என்னுமனைத்தும், விடயமாம் = விஷயங்களாம், அதனால் = ஆகையினால், தான் அன்று = சாக்ஷியாகிய தான் அல்ல, அவற்றின் = அவைகளுக்கெல்லாம், சாட்சி (அது) ஆய், அருவம் = உருவமற்றது, அகன்மம் = செய்கையற்றது, அசங்கற்பம் = கற்பனைகளற்றது, அறிவு ஆம் = ஞான மாத்திரம் என்பதாகிய, ஆன்ம சொரூபம் (தான்) = ஆத்மாவானது, பருவமுடையார் = முமூட்சுப் பருவமுடையவர்கள், குருவருளால், பயிலும் = அப்பியாசிக்கின்ற, சுகமாம் = சுக சொரூபமாகிய, பரபதம் (ஏ) = மேலான பிரமத் தன்மையாம்.

அது—பகுதிப்பொருள் விகுதி. தான்—சாரியை.

ஏ—அசை. ஒன்றும் தோன்றாமை = நித்திரை.

விஷயங்கள்—அறியப்படுவன.

(பொ—ரை) வடிவம், செய்கை, நினைவு, ஒன்றும் தோன்றாமை என்னுமனைத்தும் விஷயங்களாம். ஆகையினால் சாக்ஷியாகிய தான் அல்ல. அவைகளுக்கெல்லாம் சாட்சியாய் உருவமற்றது, செய்கையற்றது, கற்பனைகளற்றது. ஞான மாத்திரம் என்பதாகிய ஆத்மாவானது முமூட்சுப் பருவமுடையவர்கள் குருவருளால் அப்பியாசிக்கின்ற சுக சொரூபமாகிய மேலான பிரமத் தன்மையாம்.

சத்த பரிச வுருவிரத
கந்தந்தூல சரீர மதாம்
வைத்த சாத்து வீகவிரா
சததா மதசங் கற்பங்க
ளத்த சூக்க தேகமறி
யாமை கார ணத்தனுவாந்
தத்து மிவற்றின் சான்ருய
வான்மாச் சருவ பூரணமே. 240

(ப—ரை) சத்தம், பரிசம்=ஊறு, உரு=உருவம், இரதம்=சுவை, கந்தம்=வாசனை என்னுமிவைகள், தூல சரீரம் (அது) ஆம்=ஸ்தூல சரீரமாம், வைத்த = பிரிக்கப்பட்ட, சாத்துவீக, இராசத, தாமத, சங்கற்பங்கள், அத்த=பொருளாகிய, சூக்க தேகம் = சூக்ஷ்ம சரீரமாம், அறியாமை = அஞ்ஞானம், காரணத்தனுவாம்=காரண சரீரமாம், தத்தும்=தாண்டத் தக்க, இவற்றின், சான்ருய=சாக்ஷியாகிய, ஆன்மா, சருவ பூரணமே= சர்வ பூரணமாம். அது—பகுதிப்பொருள் விகுதி.

(பொ—ரை) சத்தம், ஊறு, உருவம், சுவை, வாசனை என்னுமிவைகள் ஸ்தூல சரீரமாம். பிரிக்கப்பட்ட சாத்துவீக இராசத தாமத சங்கற்பங்கள் பொருளாகிய சூக்ஷ்ம சரீரமாம். அஞ்ஞானம் காரண சரீரமாம். தாண்டத்தக்க இவற்றின் சாக்ஷியாகிய ஆன்மா சர்வ பூரணமாம்.

### சந்த விருத்தம்

ஏவ லாளர் செய்கை தன்னை
யென்ன தென்ன வுன்னிடார்
காவ லோர்வி லட்ச ணத்தர்
கண்டி ருப்பர் தொண்டலார்
தாவு சிந்தை யிந்தி யஞ்ச
ரீரம் யான லன்னவை
மேவு கன்ம மென்ன தன்று
வேறெ னும்வி வேகியே. 241

(ப—ரை) (2) ஏவலாளர்=வேலைக்காரர்கள், செய்கை தன்னை=செய்கையை, என்னதென்ன = என்னுடைய செய்கை என்று, உன்னிடார் = நினையமாட்டார்கள், (1) காவலோர் = காக்கவல்ல அரசர், (4) விலட்சணத்தார்=வேறு லக்ஷணம் உடையவராய், கண்டிருப்பர் = பார்த்துக் கொண்டிருப்பார்கள், அதுபோல, (3) தொண்டு அலார் = ஏவலாளர் அல்லாதவராய், (6) தாவு சிந்தை= தாவுகின்ற மனது, இந்தியம்=இந்திரியங்கள், சரீரம் = சரீரமென்னுமிவைகள், யான் அலன் = நான் அல்ல, அவை = அவைகள், மேவு கன்மம்=செய்கின்ற செயல்களை, என்னது அன்று=என்னுடையவை அல்ல, வேறு எனும் = வேறு என்று நினைவார், (5) விவேகி(ஏ.)

(பொ—ரை) காக்க வல்ல அரசர் வேலைக்காரர்கள் செய்கையை என்னுடைய செய்கையென்று நினைய மாட்டார்கள். ஏவலாளர் அல்லாதவராய் வேறு லக்ஷணமுடையவராய் பார்த்துக் கொண்டிருப்பார்கள். அதுபோல விவேகி தாவுகின்ற மனது, இந்திரியங்கள், சரீரம் என்னுமிவைகள் நான் அல்ல. அவைகள் செய்கின்ற செயல்கள் என்னுடையவை அல்ல, வேறு என்று நினைவார்.

### வெண்பா

பிரபஞ்சந் தேகம் பிராணன் மனதைச்
சரபஞ்சந் தேகமறச் சாய்த்து—மரபஞ்சச்
சீயஞ் சிதைக்குமா சிற்கண்ணுர் பார்த்தழிப்பர்
வாயஞ் சிதைக்குறுகார் மன். 242

(ப—ரை) (5) பிரபஞ்சம், தேகம், பிராணன், மனதை= மனது என்னுமிவைகள், (2) சரபம் = சரபப் பட்சியானது, சந்தேக மற=சந்தேகமில்லாமல், சாய்த்து = வீழ்த்தி, (1) மரபு அஞ்ச=இனமும் அஞ்சும்படி, (3) சீயம்=சிங்கத்தை, சிதைக்கும் ஆ = கொல்லும் விதம் போல, (6) சித் கண்ணுல் = ஞான நேத்திரத்தினுல், பார்த்து, அழிப்பர் = அழிப்பார்கள், வாய் அஞ்சு = ஐம்பொறியாகிய, இதை = இவற்றின் போக்கில், குறுகார்=செல்லாதவர்கள், மன்= நன்ருக.

(பொ—ரை) இனமும் அஞ்சும்படி சரபப் பட்சியானது சந்தேகமில்லாமல் வீழ்த்தி சிங்கத்தைக் கொல்லும் விதம் போல், ஐம்பொறியாகிய இவற்றின் போக்கில் செல்லாதவர்கள் நன்ருக, பிரபஞ்சம், தேகம், பிராணன், மனது என்னும் இவைகளை ஞான நேத்திரத்திஞல் அழிப்பார்கள்.

(சரபம்—சிங்கத்தைக் கொல்லுகின்ற எட்டுக் கால்களையுடைய சிம்புள் என்னும் பட்சி.)

மாயை சரீர மனம்வா தனைதோற்ற
மாயசங் கற்ப மருந்துரிய—மேய
முறையேயொன் ருென்றின் முடிவுறுமவ் வாறு
குறைதீரொவ் வொன்ருய்க் குறித்து. 243

(ப—ரை) மாயை, சரீரம், மனம், வாதனை = வாசனை, தோற்றம், ஆய = ஆகிய, சங்கற்பம், அரும் = அருமையாகிய, துரியம் = துரியம் என்னும் இவைகள், ஏய = பொருந்திய, முறையே, ஒன்றுஒன்றின் = ஒன்று அடுத்த ஒன்றிஞல், முடிவுறும் = முடியும், அவ்வாறு = அந்தவிதமாக, (3)குறைதீர் = குறைகளை எல்லாம் நீக்குவாய், (2) ஒவ்வொன்ருய், குறித்து = நிச்சயித்து.

(பொ—ரை) மாயை, சரீரம், மனம், வாசனை, தோற்றம் ஆகிய சங்கற்பம் அருமையாகிய துரியம் என்னும் இவைகள் பொருந்திய முறையே ஒன்று அடுத்த ஒன்றிஞல் முடியும். அந்த விதமாக ஒவ்வொன்ருய் நிச்சயித்து குறைகளை எல்லாம் நீக்குவாய்.

கலிநிலைத்துறை

என்னில் யாவையெவ் வாறுதோற் றினுமவை யேதே
னென்ன வாயுள தெனிற்கரி நீயிலம் யாநீ
யென்ன வோரமை யெனுமருட் குருமய மெனவே
யென்னில் யானெனை யானென வுணர்ந்தன னினிதே. 244

(ப—ரை) (1) என்னில் = ஆத்மாவாகிய என்னிடத்தில், யாவை = எவைகள், எவ்வாறு தோற்றினும் = எந்த விதமாகத் தோற்றிஞலும், அவை = அவைகள், ஏது = எவ்விடத்திலிருந்து

வந்தன, ஏன்,என்ன ஆய் உளது=எப்படியிருக்கின்றன, எனில்= என்று விசாரித்துப் பார்க்கில், கரி நீ = சாக்ஷியாய் இருக்கிறாய். இலம்யாம்=நாங்கள் இல்லை, நீ என்ன=நீயாகவே, ஓர்=எங்களை அறிவாய்,எனும்=என்று தெரிவிக்கின்ற,அருள்=கிருபையுடைய, குருமயம் எனவே = குரு சொரூபம் என்றே, என்னில் = என்னிடத்தில், யான்=நான், எனை = என்னை, யான் என = நான் என்று, (3) உணர்ந்தனன் = அறிந்தேன், (2) இனிதே= நன்றாக.

(பொ—ரை) ஆத்மாவாகிய என்னிடத்தில் எவைகள் எந்தவிதமாகத் தோற்றினாலும் அவைகள் எவ்விடத்திலிருந்து வந்தன, ஏன், எப்படியிருக்கின்றன என்று விசாரித்துப் பார்க்கில் நீ சாக்ஷியாய், இருக்கிறாய். நாங்கள் இல்லை. நீயாகவே எங்களை அறிவாய் என்று தெரிவிக்கிற கிருபையையுடைய குரு சொரூபம் என்றே என்னிடத்தில் நான் என்னை நான் என்று நன்றாக அறிந்தேன்.

வெண்பா

அறியப் படுவனவுண் டாமென்னி லன்ன
வறியு மொருநானுண் டந்நா—னறியப்
படுவனவா காதாகிப் பண்சாட்சி யென்னப்
படுவனனு பூதிச்செப் பால். 245

(ப—ரை) அறியப்படுவன, உண்டாம் = இருக்கின்றன, என்னில்=என்று சொன்னால், அன்ன = அப்படிப்பட்டவைகளை, அறியும் ஒரு நான் உண்டு=அறிகின்ற ஒரே பொருளாகிய நான் இருக்கிறேன், அந்நான்=அந்த நான், அறியப்படுவன,ஆகாது= ஆகாமல், ஆகி, (3) பண் சாட்சி = ஒழுங்கான சாட்சி, என்னப்படுவன்=என்று சொல்லப்படுவன், (2) அனுபூதி = அனுபவ, செப்பால்=வார்த்தையினால்.

(பொ—ரை) அறியப்படுவன இருக்கின்றன என்று சொன்னால் அப்படிப்பட்டவைகளை அறிகின்ற ஒரே பொருளாகிய நான் இருக்கிறேன். அந்த நான் அறியப்படுவன ஆகாமல் ஆகி அனுபவ வார்த்தையினால் ஒழுங்கான சாட்சி என்று சொல்லப்படுவன்.

### கலிவிருத்தம்

யானு மன்றி யெனையன் றியுமிலா
மான தத்தின் வகைப்பிறி வாஞ்சக
மூனு டம்பொ டுயிர்ப்பைம் பொறிகுண
மான வெல்லா மறிகரி யானரோ. 246

(ப—ரை) யானுமன்றி = யானுமல்லாமல், எனையன்றியுமிலா = என்னைத் தவிரவுமில்லாத, மானதத்தின் = மனதின், வகைப் பிறிவாம் = பலவகைப் பிரிவுகளுமான, சகம், ஊன் உடம்பொடு = மாமிச வடிவமான சரீரம், உயிர்ப்பு = பிராணவாயு, ஐம்பொறி = ஐந்து இந்திரியங்கள், குணம் = முக்குணங்கள், ஆன எலாம் = ஆகிய எல்லாம், அறி = அறிகின்ற, கரி = சாக்ஷியே, யான் (அரோ) = நான். அரோ—அசை.

(பொ—ரை) யானுமல்லாமல், என்னைத் தவிரவுமல்லாத மனதின் பலவகைப் பிரிவுகளான சகம், மாமிச வடிவமான சரீரம், பிராணவாயு, ஐந்து இந்திரியங்கள், முக்குணங்கள் ஆகிய எல்லாம் அறிகின்ற சாக்ஷியே நான்.

### எண்சீர் விருத்தம்

இருமனத்தோ டுங்கூடச் சுரோத்தி ராதி
யிந்தியத்தைத் தத்தம்விட யத்தி னின்றும்
வரநிவர்த்தித் தந்தர்முகஞ் செயவிட் சேப
வாசனைபோய்ப் பிரசன்ன மாகு மந்தக்
கரணமவை யாங்கதனைப் பிரகா சிக்கக்
காட்டுகின்ற பிரத்தியக்குப் பிரமந் தானைப்
பிரகாசிக் கின்றதனன் மவுன மாமிப்
பெரும்பதஞ்சார் வாய்ப்பிரமப் பிராப்தி யாமே. 247

(ப—ரை) இரு மனத்தோடும் = பெரிய மனதுடன், சுரோத்திராதி = காது முதலிய, இந்தியத்தை = இந்திரியங்களை, தத்தம் = அதனதன், விடயத்தினின்றும் = விஷயத்திலிருந்தும், வர நிவர்த்தித்து = வசமாகும்படி திருப்பி, அந்தர் முகம் செய = உள்நோக்கமாக்க, விட்சேப வாசனை போய் = சஞ்சல வாசனைகள்

நீங்கி, பிரசன்னமாகும் அந்தக்கரணம் அவை=அந்தக்கரணம் தெளிவாக விளங்கும், ஆங்கு=அவ்விடத்தில், அதனை=அந்தத் தெளிவாகிய அந்தக்கரணத்தை, பிரகாசிக்கக் காட்டுகின்ற= நன்ருக விளங்கும்படி காட்டுகின்ற, பிரத்தியக்குப் பிரமம் = இருதயத்திற்குள்ளிருக்கும் கூடஸ்த பிரமம், தானுப் பிரகாசிக்கின்றதனுன் = தானுக விளங்குகின்றதனுல், மவுனமாம் இப்பெரும் பதம் சார்வாய்=மவுனமென்று சொல்லப்படுகின்ற இந்தப் பெரிய பதத்தையுற்று, பிரமப் பிராப்தியாம் (ஏ) = பிரம சொரூபமாய் விளங்குவர். ஏ—அசை. (பிரத்தியக்=உள்.)

(பொ—ரை) பெரிய மனதுடன் காது முதலிய இந்திரியங்களை அதனதன் விஷயத்திலிருந்து வசமாகும்படி திருப்பி உள்நோக்கமாக்க சஞ்சல வாசனைகள் நீங்கி அந்தக்கரணம் தெளிவாக விளங்கும். அந்தத் தெளிவாகிய அந்தக்கரணத்தை நன்ருக விளங்கும்படி காட்டுகின்ற ஹிருதயத்திற்குள்ளிருக்கும் கூடஸ்த பிரமம் தானுக விளங்குகின்றதனுல் மவுனமென்று சொல்லப்படுகின்ற இந்தப் பெரிய பதத்தையுற்று பரம சொரூபமாய் விளங்குவர்

## வெண்பா

இவ்வுடல்யா னீதெனதென் றின்பமணுத் துன்பமலை
யவ்வளவாக் கும்பொய் யவாவொழித்தா—ரெவ்வுலகு
மெல்லாந் தனதாய்ப்பே ரின்பக் கடல்குளிப்ப
ரல்லாமற் ருனேயா வார். 248

(ப—ரை) இவ்வுடல் யான்=இந்த சரீரம் நான், ஈது எனது=இவ் இடம், பொருள், ஏவல் என்னுடையது; என்று= என்று நிச்சயித்துக்கொண்டு, இன்பம் அணு = சுகம் அணுப் போலவும், துன்பம் மலை = துக்கம் மலை போலவும், அவ்வளவு, ஆக்கும்=ஆகச்செய்யும், பொய் அவா=பொய்யான ஆசையை, ஒழித்தார்=நீக்கினவர், எவ்வுலகும்=எந்த உலகமும், எல்லாம்= எல்லாமும், தனதாய்=தன்னுடையதாகவும், பேரின்பக் கடல்= பேரின்ப சமுத்திரத்தில், குளிப்பர் = மூழ்குவர், அல்லாமல்= அல்லாமலும், தானேயாவர்=தானுகவும் விளங்குவர்.

(பொ—ரை) இந்தச் சரீரம் நான், இவ் இடம், பொருள், ஏவல் என்னுடையது என்று நிச்சயித்துக்கொண்டு சுகம் அணுப் போலவும், துக்கம் மலை போலவும் அவ்வளவாகச் செய்யும் ஆசையை நீக்கினவர் எந்தவுலகமும் எல்லாமும் தன்னுடையதாகவும் பேரின்ப சமுத்திரத்தில் மூழ்குவர். அல்லாமலும் தானுகவும் விளங்குவர்.

இவ்வுடல்யா னென்று லெலா நா னெனல்வேண்டு
மிவ்வுலகு நானன் றெனுங்காலை—யிவ்வுடலு
நானன் றெனல்வேண்டு நன்கோர்ந்த வோராத
வூன விடயமிரண் டும். 249

(ப—ரை) (1) இவ்வுடல் யான் என்றல் = இந்தச் சரீரம் நான் என்று நினைத்தால், எலாம் = எல்லாம், நான் எனல் வேண்டும் = யான் என்று நினைக்க வேண்டும், 'இவ்வுலகு, நான்அன்று = நான் அல்ல, எனுங்காலை = என்று எண்ணும்போது, இவ்வுடலும் = இந்தச்சரீரமும், நான் அன்று எனல் வேண்டும் = நான் அல்ல என்று எண்ணவேண்டும்: (3) நன்கு = நன்றாக, ஓர்ந்த = அறியப்பட்ட, ஓராத = அறியப்படாத, ஊன = குறைவுள்ள, விடயம் = விஷயங்களாதலால், (2) இரண்டும்.

(பொ—ரை) இச்சரீரம் நான் என்று நினைத்தால் எல்லாம் யான் என்று நினைக்க வேண்டும். இவ்வுலகு நான் அல்ல என்று எண்ணும்போது இந்தச் சரீரமும் நான் அல்ல என்று எண்ண வேண்டும். இரண்டும் நன்றாக அறியப்பட்ட, அறியப்படாத குறைவுள்ள விஷயங்களாதலால்.

கலிவிருத்தம்.

பவமுறு நாமரூ பத்தை யற்பமாக்
குவிவழித் துரும்பெனக் கூர்ந்து பார்த்திடா
தவமுற வெங்கணு மாத ரித்துணர்
நவமுறு சச்சிதா னந்த மாகவே. 250

(ப—ரை) (1) பவமுறு = பிறப்பைக் கொடுக்கிற, நாமருபத்தை, அற்பமா = அலட்சியமாக, குவிவழி = பொருந்திய மார்க்கத்திற் கிடக்கின்ற, துரும்பென = துரும்பைப் போல, கூர்ந்து பார்த்திடாது = கவனித்துப் பாராமல், அவம் உற = அவ்வெண்ணம் கெட, எங்கணும் = எவ்விடத்தும், (3) ஆதரித்து = பிரியமாய், உணர் = அறிவாய், (2) நவ்முறு = புதுமையாகிய, சச்சிதானந்தமாகவே.

(பொ—ரை) பிறப்பைக் கொடுக்கிற நாமருபத்தை அலட்சியமாகப் பொருந்திய மார்க்கத்திற் கிடக்கின்ற துரும்பைப் போலக் கவனித்துப் பாராமல், அவ்வெண்ணம் கெட எவ்விடத்தும் புதுமையாகிய சச்சிதானந்தமாகவே பிரியமாய் அறிவாய்.

குறள் வெண்பா

எவ்வா றெவைதோற் றிடினு மவைகண்டா
யவ்வா றறியுமறி வே. 251

(ப—ரை) எவ்வாறு = எந்தவிதமாக, எவை = எவைகள், தோற்றிடினும் = தோற்றினுலும், அவை (கண்டாய்) = அவைகள், அவ்வாறு = அந்தவிதமாக, அறியும், அறிவே.

கண்டாய்—முன்னிலையசை.

(பொ—ரை) எந்தவிதமாக எவைகள் தோற்றினுலும் அவைகள் அந்தவிதமாக அறியும் அறிவே.

கலித்துறை

பல்லா கார மதாயெவ னெவைதென் படினும்யா
னில்லா விடின்மற் றுண்டோ வதனுல் யானேதா
னல்லா தில்லைவி ருப்புவெ றுப்புறு மவைநல்ல
பொல்லா தனவனு வில்லா வரியதோர் பொருள்யானே.
252

(ப—ரை) பல் = பலவித, ஆகாரம் (அது) ஆய் = வடிவங்களாய், எவண் = எவ்விடத்தில், எவை தென்படினும் = எவைகள் தோற்றினாலும், யான் இல்லாவிடின், (மற்று) உண்டோ = அவைகள் இருக்குமா, அதனால், யானே = நானே, தான் அல்லாது = தன்னைத் தவிர இல்லை, விருப்பு வெறுப்பு, உறுமவை = அடையத்தக்கவைகள், நல்ல = நல்லவை, பொல்லாதன = பொல்லாதவை முதலியன, அணுவில்லா = அணுவும் இல்லாத, அரியது = அருமையாகிய, ஓர் பொருள் = ஒப்பற்ற வஸ்துவாகிய ஆத்மா, யானே.

அது—பகுதிப்பொருள் விகுதி. மற்று—அசை.

(பொ—ரை) பலவித வடிவங்களாய் எவ்விடத்தில் எவைகள் தோற்றினாலும் யான் இல்லாவிடின் அவைகள் இருக்குமா, அதனால் நானே, என்னைத் தவிர இல்லை. விருப்பு வெறுப்பு, அடையத்தக்கவைகள் நல்லவை பொல்லாதவை முதலியன அணுவும் இல்லாத அருமையாகிய ஒப்பற்ற வஸ்துவாகிய ஆத்மா யானே.

ச்ராசரம னைத்தினும டிக்கடிய கண்டான்ம சமபுத்திசெய்
வரேசபுரு டற்குவிரை விற்கடித சூயையவ மானமமதை
யிராகமொட கந்தைகல கங்களுமி லாதகலு மெனவிவ்வணம்
புராதனகி ருட்டினனு முத்தவர்த மக்கினிது புகல்வானரோ
253

(ப—ரை) சரஅசரம் அனைத்தினும்—சஞ்சரிப்பன, சஞ்சரியாதன எல்லாவற்றிலும்; அடிக்கடி, அகண்ட ஆன்மா = அகண்டாத்மாவென்கிற, சமபுத்தி, செய் = செய்கின்ற, வர ஈச புருடற்கு = சிரேஷ்டமான ஈஸ்வரன் போன்ற மனிதனுக்கு விரைவில் = சீக்கிரமாக, கடிது = கடுமையாகிய, அசூயை = பொருமையும், அவமானம் = அவமானமும், மமதை = எனதென்னும் அபிமானமும், இராகமொடு = ஆசையும், அகந்தை = நானென்னும் அபிமானமும், கலகங்களும், இலாது

அகலும்=இல்லாமல் நீங்கிவிடும், என் = என்று, இவ்வணம்= இந்தவிதமாக, புராதன = பூர்வத்தில், கிருட்டினனும் = ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர், உத்தவர் தமக்கு = உத்தவர் என்பவருக்கு, இனிது புகல்வான்(அரோ)=நன்ருகச் சொன்ஞர்.

(அரோ—அசை.)

(பொ—ரை) சஞ்சரிப்பன சஞ்சரியாதன எல்லாவற்றிலும் அடிக்கடி அகண்டாத்மா என்கிற சமபுத்தி செய்கின்ற சிரேஷ்டமான ஈஸ்வரன் போன்ற மனிதனுக்கு, சீக்கிரமாகக் கடுமையாகிய பொருமையும், அவமானமும், எனதென்னும் அபிமானமும், ஆசையும், நான் எனும் அபிமானமும் கலகங்களும் இல்லாமல் நீங்கிவிடும் என்று இந்தவிதமாகப் பூர்வத்தில் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியானவர் உத்தவர் என்பவருக்கு நன்ருகச் சொன்ஞர்.

### கொச்சகக் கலிப்பா

தனைச்சிரிக்கு நட்பினையுந் தானுயர்ந்தோ னவனீச
னெனப்படுமிப் பார்வையையு மிவற்ருலா மிலச்சையையும்
பினைத்தவிர்த்துப் பசுகரநாய் பிறள்நீசர் முதலாக
வனைத்திடத்து மான்மபுத்தி யாற்புவிமேல் வணங்கிடவே. 254

(ப—ரை) தனைச் சிரிக்கும்=தன்னைப்பார்த்துச் சிரிக்கின்ற, நட்பினையும் = சிநேகிதனையும், தான் உயர்ந்தோன், அவன், நீசன் = தாழ்ந்தவன், எனப்படும் = என்று நினைக்கும், இப்பார்வையையும் = இந்தப் புத்தியையும், இவற்ருலாம் = இவைகளாலாகின்ற, இலச்சையையும் = நாணத்தையும், பினைத்தவிர்த்து =பின்பு நீக்கி, பசு, கரம்=கர்த்தபம், நாய், பிறள்= மாறுகின்ற, நீசர், முதலாக, அனைத்திடத்தும் = எல்லா இடத்திலும், ஆன்ம புத்தியால்=ஆத்மாவே விளங்குகின்றது என்னும் நிச்சயத்தால், புவிமேல் = பூமியில், வணங்கிட (ஏ)= வணங்கக் கடவர். (ஏ—அசை.)

(பொ—ரை) தன்னைப் பார்த்துச் சிரிக்கின்ற சிநேகிதனையும் தான் உயர்ந்தோன், அவன் தாழ்ந்தவன் என்று நினைக்கும்

இந்தப் புத்தியையும் இவைகளாலாகின்ற நாணத்தையும் பின்பு நீக்கி, பசு, கர்த்தபம், நாய், மாறுகின்ற நீசர் முதலாக எல்லா இடத்திலும் ஆத்மாவே விளங்குகின்றது என்னும் நிச்சயத்தால் பூமியில் வணங்கக் கடவர்.

## வெண்பா

எல்லாம் விடய மெனத்தோற் றரவென்ன
நில்லா நினைவென்ன நிச்சயித்து—மல்லால்
விடயி யுடன்றோற்று விப்போ னினைப்போன்
வடிவாம்யா னென்றே மதி. 255

(ப—ரை) எல்லாம், விடயம் என=அறியப்படு பொருள் எனவும், தோற்றரவு என்ன = தோற்றம் எனவும், நில்லா = நிலையில்லாத, நினைவென்ன = நினைவு எனவும், நிச்சயித்தும், அல்லால் = மேலும், விடயியுடன் = அறிகிறவன், தோற்றுவிப்போன், நினைப்போன் = நினைப்போன் என்னும் இவர்களின், வடிவாம் = வடிவமுடையவன், யான் = நான், என்று (ஏ) மதி=நிச்சயித்து உணர்.

(ஏ—அசை.)

(பொ—ரை) எல்லாம் அறியப்படு பொருள் எனவும் தோற்றம் எனவும், நிலையில்லாத நினைவு எனவும், நிச்சயித்தும் மேலும் அறிகிறவன் தோற்றுவிப்போன், நினைப்போன் என்னும் இவர்களின்வடிவமுடையவன் நான் என்று நிச்சயித்தும் உணர்.

சித்தாய நான்றானே சித்தம்போ லாய்ச்சித்த
மத்தே சகத்துப்போ லாமதனுற்—றுத்தாஞ்
சகத்தினைச் சித்தமெனத் தான்கண்டே சித்த
நிகழ்ச்சியைநா னாகக்கண்டே னே. 256

(ப—ரை) சித்து ஆய=ஞானவடிவமாகிய, நான் தானே, சித்தம் போலாய்=சித்தம் போலாகி, சித்தம் அத்தே = அந்தச் சித்தமே, சகத்துப் போலாம்=ஜகம் போல் ஆகும், அதனுல்

தொத்தாம் = அடிமையாகிய, சகத்தினை, சித்தம் என = சித்தம் என்று, (தான்) கண்டே, சித்த நிகழ்ச்சியை = சித்தமென்று விளங்குதலை, நானு = நானாக, கண்டேன் (ஏ).

தான்—சாரியை. ஏ—அசை.
அத்தே—விரித்தல் விகாரம்.

(பொ—ரை) ஞான வடிவமாகிய நான் தானே சித்தம் போலாகி அந்தச் சித்தமே ஜகம் போல் ஆகும். அதனால் அடிமையாகிய சகத்தினை சித்தம் என்று கண்டே சித்தமென்று விளங்குதலை நானாகக் கண்டேன்.

சருவ சகத்துந் தனிச்சிதா காயப்
பிரம மெனுமுறுதி பெற்றால்—விரிசீவ
பாவநெய் யற்றதீ பம்போ லுபசாந்த
மேவுமிஃ தோர்தல் விரைந்து. 257

(ப—ரை) சருவ சகத்தும் = எல்லா உலகமும், தனி = ஒப்பற்ற, சித் ஆகாய = ஞானகாயமாகிய, பிரமமெனும் உறுதி = பிரமமே என்னும் உறுதியை, பெற்றால் = அடைந்தால், விரி = விஷயங்களில் செல்லுகின்ற, சீவபாவம் = ஜீவத் தன்மையானது, நெய்யற்ற = நெய்யில்லாத, தீபம் போல், உபசாந்தம் மேவும் = உபசாந்தத்தை அடையும், இஃது = இதனை, ஓர்தல் விரைந்து = சீக்கிரம் அறிந்துகொள்க.

(பொ—ரை) எல்லா உலகமும் ஒப்பற்ற ஞானகாயமாகிய பிரமமே என்னும் உறுதியை அடைந்தால் விஷயங்களில் செல்லுகின்ற ஜீவத் தன்மையானது நெய் இல்லாத தீபம் போல உபசாந்தத்தை அடையும். இதனைச் சீக்கிரம் அறிந்துகொள்க.

## கலிவிருத்தம்

நடுங்கு மாவர ணங்கெடின் ஞானத்தாற்
சடங்க ளென்பவை சத்தின் வியாபக
மடர்ந்த விர்த்திக ளாயின சிற்சுட
ரொடுங்கு சூனிய மோசுகத் துண்மையே. 258

(ப—ரை) நடுங்கும் = முமூட்சுகள் நடுங்குகின்ற, ஆவரணம் = ஆவரண சக்தி, கெடின் = கெட்டால், ஞானத்தால் = உண்டாகின்ற ஞானத்தினால், சடங்கள் என்பவை, சத்தின் வியாபகம் = சத்தின் நிறைவாகும், அடர்ந்த = நெருங்கிய, விர்த்திகளாயின = நினைவுகளெல்லாம், சிற் சுடர் = ஞானப்பிரகாசமாம், ஒடுங்கு = எல்லாம் ஒடுங்கிய, சூனியமோ = சூனியமானது, சுகத்துண்மையே = ஆனந்தத்தின் இருப்பாம்.

சடம் = அறிவில்லாதது, சத்து = இருப்பு மாத்திரம், சூனியம் = ஒன்றும் தோன்றாமை, ஆவரண சக்தி = தத்துவங்களையும் தன்னையுமறியவொட்டாமல் மறைக்கும் சக்தி.

(பொ—ரை) முமூட்சுகள் நடுங்குகின்ற ஆவரண சக்தி கெட்டால் உண்டாகின்ற ஞானத்தினால் சடங்கள் என்பவை சத்தின் நிறைவாகும். நெருங்கிய நினைவுகளெல்லாம் ஞானப் பிரகாசமாம். எல்லாம் ஒடுங்கிய சூனியமானது ஆனந்தத்தின் இருப்பாம்.

வெண்பா

விடய மெலாமறியு மெய்யுணர்வாந் தன்னை
விடவவைதா னுண்டாயின் வேறு—யிடுமவண
மின்றாற் சுயஞ்சுடரா மென்கதிர்க ளென்றறிவா
மின்றே பரமுத்தி யே. 259

(ப—ரை) விடயம் எலாம் = அறியப்படுவன எல்லாவற்றையும், அறியும், மெய்யுணர்வாம் = மெய்ஞ்ஞான வடிவமாகிய, தன்னைவிட = தன்னைத்தவிர, அவைதான் உண்டாயின் = அவைகள் இருக்குமானால், வேறுயிடும் = வேறாகும், அவணம் = அப்படி, இன்றால் = இல்லாததனால், சுயம் சுடராம் = தானே பிரகாசிக்கின்ற, என் கதிர்கள் = என்னுடைய கிரணங்களாம், என்றறிவாம் = என்றறிகின்றேன், இன்றே = அதனால் இப்போதே, பரமுத்தி(ஏ) = மேலான முத்தியாம்.

ஏ—அசை.

(பொ—ரை) அறியப்படுவன எல்லாவற்றையும் அறியும் மெய்ஞ்ஞான வடிவமாகிய தன்னைத்தவிர அவைகள் இருக்குமானால்

வேருகும். அப்படி இல்லாததனுல் தானே பிரகாசிக்கின்ற என்னுடைய கிரணங்களாம் என்று அறிகின்றேன். அதனுல் இப்போதே மேலான முத்தியாம்.

### கலிவிருத்தம்

வெளிச்சக வுட்சக விடய மாயிவை
விளக்கிடுஞ் சாட்சியாம் விடயி யாகியுங்
களித்திடு மகண்டவா கார விர்த்தியி
லொளித்திவை யதீதமா மொருசிற் சோதியே. 260

(ப—ரை) (2) வெளிச்சக = வெளிப் பிரபஞ்ச, உட்சக = உட்பிரபஞ்ச, விடயமாய் = விஷயங்களாகியும். இவை = இவைகளை, விளக்கிடும் = விளக்குகின்ற. சாட்சியாம் = சாட்சியாகிய, விடயியாகியும் = விஷயியாகியும் (4) களித்திடும் = மகிழ்ச்சி வடிவமாம். (3) அகண்ட ஆகார = அகண்டாகார, விர்த்தியில், (5) ஒளித்து இவை = பின்பு இவையெல்லாம் மறைந்து, அதீதமாம் = அதீத நிலையாம். (1) ஒருசித் சோதியே = ஒரே ஞானப் பிரகாசமாகிய தான்.

(அதீதம் = சொல்ல முடியாதது—கடந்தது.)

(பொ—ரை) ஒரே ஞானப் பிரகாசமாகிய தான், வெளிப் பிரபஞ்ச உட்பிரபஞ்ச விஷயங்களாகியும் இவைகளை விளக்குகின்ற சாக்ஷியாகிய விஷயியாகியும், அகண்டாகார விர்த்தியில் பின்பு இவையெல்லாம் மறைந்து மகிழ்ச்சி வடிவாம். இவையெல்லாம் மறைந்து அதீத நிலையாம்.

### எண்சீர் விருத்தம்

அகத்தறிவு புறத்தறிவி விருவகையாம் பிரஞை
யப்பிரஞை பிரஞான கனமிவையு மிலதாய்ப்
பகக்கண்ணிற் ரேன்ருதாய் வழங்கக்கூ டாதாய்ப்
பற்றரிதாய் நினைவரிதா யிலக்கணமற் றதுவாய்த்

தகத்தன்மை யின்சார மேகாட்சி யெனலாய்ச்
சாற்றுபிர பஞ்சோப சமமாய்ச்சாந் தமதாய்
நிகழ்த்தியமங் களமாய்நின் றிடுமத்து வைத
நிமலான்மா வேயறியத் தக்கவரென் றறிவாய். 261

(ப—ரை) அகத்தறிவு=உள்ளுணர்வும், புறத்தறிவு=வெளிஉணர்வும், இவ்விருவகையும் = இவ்விருவகையுணர்வும், பிரஞை = பிரஞ்ஞையும், அப்பிரஞை = அப்பிரஞ்ஞையும், பிரஞான கனமிவையு மிலதாய்=பிரஞ்ஞானப் பிழம்பு என்னும் இவையும் இல்லாததாய், பக = பிரிக்கும்படி, கண்ணிற் தோன்றுதாய்=கண்ணினுற் பார்க்கப்படாததாய், வழங்கக் கூடாததாய், பற்றரிதாய் = பற்றமுடியாததாய், நினைவரிதாய்= நினைத்தற்கரிதாய், இலக்கணமற்றதுவாய் = ஒரு இலக்ஷணமும் இல்லாததாய், தக = தகுதியாக, தன்மையின் = தனது சுபாவத்தின், சாரமே, காட்சி எனல் ஆய்=காட்சி என்பதாக, சாற்று = சொல்லப்படுகிற, பிரபஞ்ச உப சமமாய் = பிரபஞ்சம் ஒடுங்கியதாய், சாந்தம் (அது) ஆய்=சாந்தமாகி, நிகழ்த்திய= பெரியோர்களும், சாஸ்திரங்களும் அறிவிக்கின்ற, மங்களமாய், நின்றிடும் = இருக்கிற, அத்துவைத = இரண்டற்ற, நிமலான்மாவே = பரிசுத்தமான ஆத்மாவே, அறியத்தக்கவர் என்று அறிவாய்.

(அது—பகுதிப்பொருள் விகுதி.)

கனம்=பிழம்பு, கட்டி.

(பொ—ரை) உள்ளுணர்வும், வெளி உணர்வும், இவ்விரு வகை உணர்வும், பிரஞ்ஞையும், அப் பிரஞ்ஞையும்,பிரஞ்ஞானப் பிழம்பு என்னும் இவையும் இல்லாததாய் பிரிக்கும்படி கண்ணினுல் பார்க்கப்படாததாய் வழங்கக் கூடாததாய், பற்ற முடியாததாய் நினைத்தற்கரிதாய் ஒருஇலக்ஷணமும் இல்லாததாய் தகுதியாக தனது சுபாவத்தின் சாரமே காட்சி என்பதாகி சொல்லப்படுகின்ற பிரபஞ்சம் ஒடுங்கியதாய் சாந்தமாகிப் பெரியோர்களும், சாஸ்திரங்களும் அறிவிக்கின்ற மங்களமாய் இருக்கிற இரண்டற்ற பரிசுத்தமான ஆத்மாவே அறியத்தக்கவர் என்று அறிவாய்.

## அறுசீர் விருத்தம்

சலத்துப் பிருக்கை பார்வைபரி சத்தா லறியப் படாதேனும்
புலத்தி னிரதத் தாலறிதல் போலச் சகத்தின் சனுதனமா
மலைப்பில் பிரமந் தரிசியந்தா னுகா விடினுங் கண்முதற்கு
கலத்த லான காரியலிங் கத்தா லிருக்கின் றதுவன்றே. 262

(ப—ரை) சலத்து = நீரில், உப்பு இருக்கை = உப்பு இருத்தல், பார்வை = பார்வையாலும், பரிசத்தால் = பரிசத்தாலும், அறியப்படாதேனும் = அறியப்படாதாயினும், புலத்தின் இரதத்தால் = இரச உணர்ச்சியால், அறிதல் போல = அறியப்படுவது போல, சகத்தின் = ஜகங்களின், சனுதனமாம் = ஆதிகாரணமாகும். அலைப்பு இல் = அசைவற்றதுமான, பிரமம் = பிரமமானது, திரிசயம் (தான்) ஆகாவிடினும் = அறியப்படாவிடினும், கண் முதற்கு = கண் முதலிய இந்திரியங்களால், கலத்தலான = பொருந்திய, காரிய லிங்கத்தால், இருக்கின்றது அன்றே = இருக்கின்றது அல்லவா.

தான்—சாரியை. காரிய லிங்கம் = காரியம் ஆகிய குறியைக் கண்டு காரணம் இருக்கிறதென்று நிச்சயித்தல். புலம் = இந்திரியம் இரதம் = நாவின் உணர்ச்சி

(பொ—ரை) நீரில் உப்பு இருத்தல் பார்வையாலும், பரிசத்தாலும் அறியப்படாதாயினும், இரச உணர்ச்சியால் அறியப்படுவதுபோல ஜகங்களின் ஆதிகாரணமும் அசைவற்றதுமான பிரமமானது அறியப்படாவிடினும் கண் முதலிய இந்திரியங்களால் பொருந்திய காரிய லிங்கத்தால் இருக்கின்றது அல்லவா.

இந்திய விடய மாகா
வேதுவா லின்றே னென்றுஞ்
சந்ததந் தானு நிற்குந்
தன்கமையாற் பரோட்ச மாகத்

தந்தவக் குணத்தோ னென்றுஞ்
சாற்றிடப் படாதிவ் வண்ணம்
வந்திரு வகையி னுலும்
வழங்கிடா தவர்கூ டத்தர். 263

(ப—ரை) இந்திய விடயம்=இந்திரியங்களுக்கு விஷயம், ஆகா ஏதுவால்=ஆகாத காரணத்தால், இன்னேன் என்றும்= இப்படிப்பட்டவன் என்றும், சந்ததம் = எப்போதும், தானு நிற்கும்=தாஞகவேயிருக்கின்ற, தன்மையால் = தன்மையினுல், பரோட்சமாக, தந்த=சொல்லப்படுகிற, அக்குணத்தோன் என்றும் = அந்தக் குணத்தையுடையவன் என்றும், சாற்றிடப்படாது = சொல்லப்படாது, இவ்வண்ணம் = இந்த விதமாக, வந்து=சொல்லப்பட்ட, இருவகையினுலும் = இரண்டு விதத்தினுலும், வழங்கிடாதவர் = சொல்லப்படாதவர், கூடத்தர்=கூடஸ்தராம். (விஷயம்=அறியப்படுதல்.)

(பொ—ரை) இந்திரியங்களுக்கு விஷயம் ஆகாத காரணத்தால் இப்படிப்பட்டவன் என்றும் எப்போதும் தாஞகவே இருக்கின்ற தன்மையினுல், பரோட்சமாக சொல்லப்படுகிற அந்தக் குணத்தையுடையவனென்றும் சொல்லப்படாது. இந்த விதமாகச் சொல்லப்பட்ட இரண்டு விதத்தினுலும், சொல்லப்படாதவர் கூடஸ்தராம்.

ஏகஞ் சுத்தஞ் சுயஞ்சோதி
யாதொன் றினுஞ்சம் பந்தமிலா
தாகுங் கிரியை யற்றதுட
லாதிக் கிடம்யா வைக்குமுதல்
தேகஞ் சகத்து மறிந்துளது
சிதையா ததுமா றுதலிலது
மோகம் படவொன் ருன்மறைக்க
முடியா ததுபூ ரணமான்மா. 264

(ப—ரை) ஏகம்=ஒன்ருனது, சுத்தம் = பரிசுத்தமானது, சுயம் சோதி = தாஞக விளங்குவது, யாதொன்றினும்,

சம்பந்தமிலாதாகும் = சம்பந்தமில்லாதது, கிரியையற்றது = செய்கையில்லாதது, உடலாதிக்கிடம் = சரீரம் முதலாய அனைத்திற்கும் ஆதாரமானது, யாவைக்கு முதல் = யாவைக்கும் ஆதாரமானது, தேகம் சகத்தும் அறிந்துளது = சரீரத்தையும் சகத்தையும் அறிந்துகொண்டிருப்பது, சிதையாதது = அழிவில்லாதது, மாறுதலிலது = மாறுபடுவதற்றது, மோகம்பட = மயங்கும்படி, ஒன்ருன் மறைக்க முடியாதது = ஒன்றினாலும் மறைக்கப்படாதது, பூரணம் = பூரணமானது, இவ்விதங்களால் விளங்கிக் கொண்டிருப்பது, ஆன்மா = ஆத்மா.

(பொ—ரை) ஒன்ருனது, பரிசுத்தமானது, தானாக விளங்குவது, யாதொன்றினும் சம்பந்தமில்லாதது, செய்கை இல்லாதது, சரீரம் முதலிய அனைத்திற்கும் ஆதாரமானது, யாவைக்கும் ஆதாரமானது, சரீரத்தையும் சகத்தையும் அறிந்து கொண்டிருப்பது, அழிவில்லாதது. மாறுபடுவதற்றது, மயங்கும்படி ஒன்றினாலும் மறைக்கப்படாதது, பூரணமானது, இவ்விதங்களால் விளங்கிக் கொண்டிருப்பது ஆத்மா.

### வெண்பா

யானிருக் கின்றே னெனலு மனுபவமு
ஞானம் விளக்கமு நன்மகிழ்வு—மோன
முதாசீனத் தன்மைமற் ரொன்றின்மை சர்வ
சதாசாட்சி சத்தையுநான் ருன். 265

(ப—ரை) யான் இருக்கின்றேன், எனலும் = என்பதும், அனுபவமும் = அனுபவ வடிவமும், ஞானம் = ஞானமும், விளக்கமும், நன் மகிழ்வும் = நல்ல மகிழ்ச்சியும், மோனம் = மௌனமும், உதாசீனத் தன்மையும் = விருப்பு வெறுப்பற்ற தன்மையும், மன்ரொன்றின்மை = அந்நியம் ஒன்றும் இல்லாததும், சர்வ சதா சாட்சி = எல்லாவற்றிற்கும், எப்போதும் சாக்ஷியும் சத்தையும் = இருத்தலும், நான் தான் = நானே தான் அதாவது எனது சொருபமாம்.

(பொ—ரை) யான் இருக்கின்றேன் என்பதும், அனுபவ வடிவமும் ஞானமும் விளக்கமும் நல்ல மகிழ்ச்சியும், மௌனமும்,

விருப்பு வெறுப்பற்ற தன்மையும், அன்னியம் ஒன்றும் இல்லாததும், எல்லாவற்றிற்கும் எப்போதும் சாக்ஷியும் இருத்தலும் நானே தான் அதாவது எனது சொரூபமாம்.

ஒருகுடைக்கீழ்ப் பூமி யொருங்கும் புரக்கு
நிருபனுக்கெல் லாமெங்கு நேரா—யுரிய
தெனினு மொருவனுடை யின்மனைபொன் கொள்ள
நினையத்தா னாமோ நெறி. 266

(ப—ரை) ஒரு குடைக் கீழ்=தனது ஒரு குடை நிழலில், பூமி, ஒருங்கும்=எல்லாம், புரக்கும் = காக்கின்ற, நிருபனுக்கு= சக்கரவர்த்திக்கு, எல்லாம் எங்கும்=எல்லா இடமும் எல்லாமும், நேராய் = கிரமமாக, உரியது, எனினும் = ஆனாலும், (3) ஒருவனுடை=ஒருவனுடைய, இல்=வீடு, மனை=மனைவி, பொன் = திரவியம் முதலியவற்றை, கொள்ள = கவர்ந்து கொள்வதற்கு, நினையத்தான் ஆமோ=நினைக்கத்தான் கூடுமா கூடாது, (2) நெறி=இராஜ தர்மத்தில்.

(பொ—ரை) தனது ஒரு குடை நிழலில் பூமி எல்லாம் காக்கின்ற சக்கரவர்த்திக்கு எவ்விடமும் எல்லாமும் உரியது ஆனாலும் இராஜ தர்மத்தில் ஒருவனுடைய வீடு, மனைவி திரவியம் முதலியவற்றைக் கவர்ந்து கொள்வதற்கு நினைக்கத்தான் கூடுமா. கூடாது.

இவ்வுபமானத்திற்கு உவமேயம்:— ஒரு ஞானிக்கு தனது அனுபவத்தில் எல்லாம் தானாக விளங்கினாலும் விவகார ரீதியில் சிறிதும் கிரமம் தவறலாகாது.

நீயெறிந்த கல்லெனினு நின்கை விடுத்தொழிந்தாற்
கூய தனைத்தடுத்தல் கூடுமோ—தூயறிஞ
ரற்பசங் கற்பத்தா லாயிடினு ஞாலநெறி
சொற்பமும்வே றுன்னார் தொடுத்து. 267

(ப—ரை) (1) நீ எறிந்த கல் எனினும் = நீயே எறிந்த கல்லானாலும் அது, நின் கை விடுத்து=உனது கையை விட்டு,

ஒழிந்தால்=நீங்கினுல், கூய் அதனை=அதைக் கூவி, தடுத்தல் கூடுமோ, தூய் அறிஞர்=அதுபோல பரிசுத்தராகிய ஞானிகள் தமது, அற்ப சங்கற்பத்தால், ஆயிடினும்=ஆவதாயிருந்தாலும், ஞால நெறி=லௌகீக மார்க்கத்தில், (3) சொற்பமும்=சிறிதும், வேறு உன்னுர்=விரோதமாக நினையார். (2) தொடுத்து= ஒன்றை அபிமானித்து.

(பொ—ரை) நீயே எறிந்த கல் ஆனுலும் அது உனது கையை விட்டு நீங்கினுல் அதைக் கூவி தடுத்தல் கூடுமோ. அதுபோல பரிசுத்தராகிய ஞானிகள் தமது அற்ப சங்கற்பத்தால் ஆவதாயிருந்தாலும், லௌகீக மார்க்கத்தில் ஒன்றை அபிமானித்துச் சிறிதும் விரோதமாக நினையார்.

தோன்று மெனினுந் துயர்பிறருந் தாமுமுரு
தான்ற நெறியை யனுசரிப்பார்—சான்ருய்
நரேந்திரரு மிந்திரரு ஞாலமொரு மூன்றும்
புராந்தகருக் கோர்துரும்பு போல். 268

(ப—ரை) (5) தோன்றும் எனினும், துயர்=விவகார ரீதியில் துன்பமானது, பிறரும் தாமும், உருது=அடையாத, ஆன்றி நெறியை = நல்ல விவேக மார்க்கத்தை, அனுசரிப்பர், (1) சான்ருய்=சாக்ஷியாகி, (3) நரேந்திரரும்=மகாராஜாக்களும், இந்திரரும், ஞாலம் ஒரு மூன்றும்=மூன்று உலகமும், (2) புராந்தகருக்கு=மூன்று சரீரங்களையும் ஞானுக்கினியாற்றகித்த ஞானிகளுக்கு, (4) ஓர் துரும்புபோல.

நர இந்திரர்=மனிதருக்குள் இந்திரர்—மகாராஜாக்கள்.

புர அந்தகர்=சரீரத்திற்கு எமன்.

(பொ—ரை) சாக்ஷியாகிய மூன்று சரீரங்களையும் ஞானுக்கினியால் தகித்த ஞானிகளுக்கு, மகாராஜாக்களும், இந்திரரும், மூன்று உலகமும் ஓர் துரும்பு போலத் தோன்றும். எனினும் விவகார ரீதியில் துன்பமானது பிறரும் தாமும் அடையாத நல்ல விவேக மார்க்கத்தை அனுசரிப்பர்.

பிரவிர்த்தி மார்க்கமுறிற் பின்வழுவா தவ்வக்
கிரமத்திற் சூழ்நிவர்த்தி கிட்டின்—மருவுசதா
நிட்டையிரு சார்பினுங்கா ணீண்ஞான முன்னுமுளை
விட்டுவிளை வுற்றபினும் வித்து. 269

(ப—ரை) (2) பிரவிர்த்தி மார்க்கம் = பிரவிர்த்தி மார்க்கத்தை, உறில்=அடைந்தால், பின்=பின்பு, வழுவாது= தவறுமல், அவ்வக்கிரமத்தில்=அந்த அந்த ஒழுங்கில், சூழ் = செல்க, நிவர்த்தி= நிவர்த்தி மார்க்கத்தை, கிட்டின் = அடைந்தால். (4) மருவு=பொருந்துக, (3) சதா நிட்டை=சதா நிஷ்டையை, (5) இரு சார்பினும்=இவ்விரண்டு மார்க்கத்திலும், (7) காண்= பார்த்து அறிக. (6) நீண் ஞானம் = பூரண ஞானத்தை, (1) முன்னும்=வித்திடுவதற்கு முன்னும், முளைவிட்டு=முளைத்து, விளைவுற்ற பினும்=விளைத்த பின்னும், வித்து = வித்தே போல.

பிரவிர்த்தி=விவகாரங்களில் செல்லுதல்.
நிவர்த்தி=விவகாரங்களை எல்லாம் விட்டொழித்தல்.

(பொ—ரை) வித்திடுவதற்கு முன்னும், முளைத்து விளைந்த பின்னும் வித்தே போல, பிரவிர்த்தி மார்க்கத்தை அடைந்தால் பின்பு தவறுமல் அந்த அந்த ஒழுங்கில் செல்க. நிவர்த்தி மார்க்கத்தை அடைந்தால் சதா நிஷ்டையைப் பொருந்துக. இவ்விரண்டு மார்க்கத்திலும் பூரண ஞானத்தைப் பார்த்து அறிக.

பெருநிலத்திற் றாமும் பிறரும் வருந்தா
ரொருவரையும் வஞ்சித் தொழுகார்—குருவின்
புகழ்ச்சிமற வாரே புருட சிரேட்ட
ரிகழ்ச்சியெவர் பாலு மிலர். 270

(ப—ரை) பெரு நிலத்தில் = பெரிய இந்த உலகத்தில், தாமும், பிறரும், வருந்தார்=வருந்தும்படி நடவார், ஒருவரையும் வஞ்சித்து ஒழுகார், குருவின், புகழ்ச்சி=புகழ்ச்சியை, மறவார்(ஏ), (1) புருட சிரேட்டர்=புருஷரில் உத்தமர், (3) இகழ்ச்சி = இகழ்ச்சியை, எவர்பாலும்=எவரிடத்தும், இலர் = நினையார்.

ஏ—அசை.

(பொ—ரை) புருடரில் உத்தமர் இந்தப் பெரிய உலகத்தில் தாமும் பிறரும் வருந்தும்படி நடவார். ஒருவரையும் வஞ்சித்து ஒழுகார். குருவின் புகழ்ச்சியை மறவார். இகழ்ச்சியை எவரிடத்தும் நினையார்.

## வஞ்சி விருத்தம்

ஆற்றுதல்சீ வர்க்குப காரஞ்
சாற்றிடலீ சன்றிரு நாம
மேற்றதியா னித்தல்ப ரத்தை
மேற்றவர்சேர் வீடவர் தாமே. 271

(ப—ரை) (2) ஆற்றுதல்=செய்தல், சீவர்க்கு, உபகாரம், சாற்றிடல்=சொல்லுதல், ஈசன் திருநாமம், ஏற்ற = உயர்வாக, தியானித்தல், பரத்தை = பிரமத்தை, (1) மேல் தவத்தவர் = மேலான தவத்தையுடையவர், (3) சேர் வீடு = அடைகின்ற மோக்ஷம், அவர் தாமே=அவர்களே.

(பொ—ரை) மேலான தவத்தையுடையவர் செய்தல் சீவர்க்கு உபகாரம், சொல்லுதல் ஈசன் திருநாமம். உயர்வாகத் தியானித்தல் பிரமத்தை, அடைகின்ற மோக்ஷம் அவர்களே.

## கலிநிலைத்துறை

நண்ப லொத்தகன் மிகட்குளே தாலுவா ஞானி
புண்செய் கற்பனைக் கிமையென விடங்கொடான் போதப்
பண்பு டைக்கிழப் பெனிற்கைபோ லாண்டுகண் படிசான்
றென்சு கத்தனெண் ணின்றியுங் காலினே ருழோன். 272

(ப—ரை) நண்=பொருந்திய, பல் ஒத்த = பற்களுக்குச் சமானமாகிய, கன்மிகட்குளே=கர்மிகளுக்குள்ளே, தாலு ஆம் = நாவு போன்ற, ஞானி, புண் செய் = துன்பம் செய்கின்ற, கற்பனைக்கு = சங்கற்பங்களுக்கு, இமையென=தூசிகளுக்கு

இடங்கொடாத இமையைப் போல, இடங்கொடான், போத= ஞானமென்கிற, பண்பு உடைக்கு = குணமான வஸ்திரத்திற்கு, இழப்பு எனில் = நழுவுதல் ஏற்பட்டால், கை போல் = தனது கைகள் போல், ஆண்டு=உடனே காத்துக்கொண்டு, கண்படி= கண்ணைப்போல,ஒண் சுகத்தன்=உயர்ந்த சுகமே வடிவானவன், எண் இன்றியும்=நினையாமலும், விசிகாலின்=நடக்கின்ற காலைப் போல, நேர் = பொருந்துகின்ற, ஊ ழே ா ன் = பிரார்த்தத்தை உடையவன்.

(பொ—ரை) பொருந்திய பற்களுக்குச் ச ம ா ன ம ா கி ய கர்மிகளுக்குள்ளே நாவு போன்ற ஞானி துன்பம் செ ய் கி ன் ற சங்கற்பங்களுக்கு தூசிகளுக்கு இடம் கொடாத இமையைப் போல இடம் கொடான். ஞானமென்கிற கு ண ம ா ன வஸ்திரத்திற்கு நழுவுதல் ஏற்பட்டால் தன் கைகள் போல உடனே க ா த் து க் கொண்டு, கண்ணைப் போல சாக்ஷியாகிய உயர்ந்த சு க மே வடிவானவன். நினையாமலும் நடக்கின்ற க ா லை ப் போ ல பொருந்துகின்ற பிரார்த்தத்தையுடையவன்.

வெண்பா

அன்னமிக வுண்டோனு மக்காரந் தின்றோனு
மின்னைக் கலந்தோனு மேவுபய –னென்னநிதஞ்
சற்சிற் சுகானுபவந் தானவர் மூவுலகுஞ்
சொற்பனம்போற் கண்டுதுணிந் தோர். 273

(ப—ரை) (2) அன்னம் மிக உண்டோனும்=திருப்தியாக அன்னம் சாப்பிட்டவனும், அக்காரம் தின்றோனும் = வெல்லம் பு சி த் த வ னு ம், மின்னைக் க ல ந் தே ா னு ம் = பெண்ணைச் சேர்ந்தோனும், மேவு பயன் என்ன=பிரத்யக்ஷமாக அடைகின்ற பிரயோசனத்தைப் போல, நிதம் = எப்போதும், சத் சித் சுக அனுபவம்=சச்சிதானந்த அனுபூதி,தான் ஆவர்=தானே யாவர், (1) மூவுலகும்=மூன்று உலகம், மூன்று அ வ ஸ் தை த, மூன்று சரீரம் என்பவற்றை, சொற்பனம் போல் கண்டு துணிந்தோர்= சொற்பனத்தைப் போலக் கண்டு தெளிந்தவர்.

(அவஸ்தை மூன்று—சாக்கிரம், சொற்பனம், சுழுத்தி.)

(பொ—ரை) மூன்று உலகம், மூன்று அவஸ்தை, மூன்று சரீரம் என்பவற்றை சொற்பனத்தைப் போலக் கண்டு தெளிந்தவர் திருப்தியாக அன்னம் சாப்பிட்டவனும், வெல்லம் புசித்தவனும், பெண்ணைச் சேர்ந்தோனும், பிரத்யக்ஷமாக அடைகின்ற, பிரயோசனத்தைப் போல எப்போதும் சச்சிதானந்த அனுபூதி தானேயாவர்.

## அறுசீர் விருத்தம்

தனமி லாதவ னாகினு
மகிழ்வுளான் சகாயமற் றவனேனும்
புனைம காபல முள்ளவன்
புசிப்பிலாப் போதிலு மானந்த
மினித டைந்தவன் சமமிலா
னாகிலும் யாவையுஞ் சமமாக
நனிதெ ரிந்தவன் ஞானியென்
றளவறு நான்மறை சொலுமன்றே. 274

(ப—ரை) தனமிலாதவன்= திரவியமில்லாதவன், ஆகினும் = ஆனாலும், மகிழ்வுளான் = மகிழ்ச்சியடைந்தவனும், சகாயம், அற்றவனேனும் = இல்லாதவனானாலும், புனை = பொருந்திய, மகா பலமுள்ளவன் = மகா பலசாலியாக விளங்குபவனும், புசிப்பிலாப் போதிலும் = சாப்பிடாத காலத்திலும், ஆனந்தம் இனிது அடைந்தவன் = நன்றாக ஆனந்தம் அடைந்திருப்பவனும், சமமிலானாகிலும் = தனக்கு ஒருவரும் சமானமில்லாத அவ்வளவு உயர்வு உடையவனானாலும், யாவையும் சமமாக = எல்லாவற்றையும் தனக்குச் சமானமாக, நனி தெரிந்தவன் = நன்றாக அறிந்தவனும், ஞானியென்று, அளவறு நான்மறை = அளவற்ற மகிமையுடைய நான்கு வேதங்களும், சொலும் (அன்று ஏ) = சொல்லுகின்றன.

அன்று, ஏ—அசைகள்.

(பொ—ரை) திரவியம் இல்லாதவன் ஆனாலும் மகிழ்ச்சியை அடைந்தவனும், சகாயமில்லாதவன் ஆனாலும்,

பொருந்திய மகா பலசாலியாக விளங்குபவனும், சாப்பிடாத காலத்திலும் நன்ருக ஆனந்தம் அடைந்திருப்பவனும், தனக்கு ஒருவரும் சமானமில்லாத அவ்வளவு உயர்வு உடையவனுனலும் எல்லாவற்றையும் தனக்கு சமானமாக நன்ருக அறிந்தவனும் ஞானியென்று அளவற்ற மகிமையையுடைய நான்கு வேதங்களும் சொல்லுகின்றன.

### கலித்துறை

பூசுரர் பூசுர லோபியர் பூசுரர் பொருள் கொண்டோர்
நீசரி டத்துஞ் சாந்தர்கு ரூரர்நி லேக்கண்ணு
மாசரு கதிரோ னழலினி டத்ினு மற்றெங்கு
மேசறு சமபுத் தியையுடை யோர்பண் டிதரன்றே. 275

(ப—ரை) பூசுரர் = பிராமணர், பூசுர லோபியர் = பிராமண லோபியர், பூசுரர் பொருள் கொண்டோர் = பிராமணர்களுடைய பொருள்களைக் கவர்ந்தோர், நீசரிடத்தும் = நீசர் என்னும் இவர்களிடத்தும், சாந்தர் = சாந்தமுடையவர், குரூரர் = குரூரத் தன்மையுடையவர், நிலேக் கண்ணும் = இந்நிலே உடையவர்களிடத்தும், ஏசு அறு = குற்றமற்ற, சமபுத்தியை உடையோர், பண்டிதர் (அன்று ஏ) = பண்டிதராவார்.

(அன்று, ஏ—அசைகள்.) பண்டிதர் = எல்லாம் அறிந்தவர்.

(பொ—ரை) பிராமணர், பிராமண லோபியர், பிராமணர் களுடைய பொருள்களைக் கவர்ந்தவர் நீசர் என்னுமிவர்களிடத்தும், சாந்தமுடையவர் குரோதத் தன்மையுடையவர் என்னும் இந்நிலே உடையவர்களிடத்தும் குற்றமற்ற சமபுத்தியையுடையோர் பண்டிதராவார்.

### வெண்பா

அறிஞர்க் கிலீலே யறியார்க்குக் கன்ம
முறுமெய்ப் பரஞ்சுடர்தா ரென்றே—நெறிகயிறு
தாம்பென்று கண்டக்காற் சந்தோஷ மற்றதுவே
பாம்பென்று கண்டாற் பயம். 276

(ப—ரை) (3) அறிஞர்க்கு = ஞானிகளுக்கு, இலீலை = விளையாட்டாம், அறியார்க்கு = அறியாதவர்களுக்கு, கன்மம் = கர்ம பலனும், (2) உறும் = பொருந்திய, மெய்ப்பரஞ்சுடர் = உண்மையான மேலாகிய ஞான சோதியான, தான் ஒன்றே, (1) நெறி = வழியில், கயிறு = கிடக்கின்ற கயிற்றை, தாம்பு என்று கண்டக்கால் = கயிறே என்று பார்க்குமிடத்து, சந்தோஷமாம், (மற்று) அதுவே = அக்கயிற்றையே, பாம்பு என்று கண்டால், பயம் = பயமாம், அதுபோல. (மற்று—அசை.)

(பொ—ரை) வழியில் கிடக்கின்ற கயிற்றை கயிறே என்று பார்க்குமிடத்து சந்தோஷமாம். அக்கயிற்றையே பாம்பு என்று கண்டால் பயமாம். அதுபோலப் பொருந்திய உண்மையான மேலாகிய ஞானசோதியான தான் ஒன்றே ஞானிகளுக்கு விளையாட்டாம். அறியாதவர்களுக்கு கர்ம பலனும்.

## அறுசீர் விருத்தம்

இந்தோ சருப்பந் தீண்டிற்
றினியோர் பழுதை யிலையென்
றந்தோ வழுகை மேலு
மழுகை யுறுவா ரஞ்ஞர்
பைந்தார்ப் பழுதை தன்னைப்
பழுதை யாகக் கண்டு
சந்தோ டத்தின் மீது
சந்தோ டிப்பர் தஞ்ஞர். 277

(ப—ரை) இந்தோ = இதோ, சருப்பம் = பாம்பு, தீண்டிற்று, இனியோர் பழுதை இலை என்று = இதைத் தவிரப் பழுதை என்பது இல்லையென்று, அந்தோ, அழுகை மேலும் அழுகை, உறுவார் = அடைவர், அஞ்ஞர் = அறியாதவர்கள், பைந்தார் = பசுமையான மாலை போன்ற, பழுதை தன்னை = பழுதையை, பழுதையாகக் கண்டு = பழுதையாகவே பார்த்து, சந்தோடத்தின் மீது = சந்தோஷத்தின் மீது, சந்தோடிப்பர் = சந்தோஷம் அடைவார்கள், தஞ்ஞர் = அறிந்தவர்கள்.

இந்தோ—இதோ என்பதன் விகாரம்.

(பொ—ரை) இதோ பாம்பு தீண்டிற்று இதைத் தவிரப் பழுதை என்பது இல்லை என்று அந்தோ அழுகை மேலும் அழுகை அடைவார் அறியாதவர்கள். பசுமையான மாலை போன்ற பழுதையைப் பழுதையாகவே பார்த்து சந்தோஷத்தின் மேல் சந்தோஷம் அடைவார்கள் அறிந்தவர்கள்.

இந்த உபமானத்திற்கு உபமேயம்:— மனோ வாக்குக் காயங்களால் இவ்விதத் துன்பங்களை அடைகிறேன். நித்திய சுகமில்லை என்று அறியாதோர் வருந்துவர். சர்வமும் மங்களகரமான சத்திய ஞான சொரூபமே என்று அறிஞர்கள் திருப்தராய் இருப்பர்.

## கலிவிருத்தம்

வேக வாதனை மேவ மனோசகத்
தாக நாடுயிர் தன்னை விசாரிப்பிற்
பாகி யப்பிர பஞ்சக் கரியதாம்
யோகி காணு னுயிர்மனப் பந்தமே. 278

(ப—ரை) வேக வாதனை=வேகமுடைய பூர்வ வாசனைகள், மேவ=உண்டாக, மனோ சகத்தாக=சங்கற்பமயமான பிரபஞ்சம் தோற்ற, நாடு உயிர் தன்னை = அதை லக்ஷியம் பண்ணுகின்ற ஜீவனை, விசாரிப்பில்=விசாரித்துப் பார்த்தால், பாகிய = வெளி, பிரபஞ்சக்கரி (அது) ஆம்=பிரபஞ்சத்தின் சாக்ஷியாய் இருப்பன், அதாம் யோகி=அப்படிப்பட்ட யோகியானவன், காணுன் உயிர் மனப்பந்தம் (ஏ)=ஜீவபந்த மனோபந்தங்களை காணுகிறதில்லை.

அது—பகுதிப்பொருள் விகுதி.,
ஏ—அசை.

(பொ—ரை) வேகமுடைய பூர்வ வாசனைகள் உண்டாக சங்கற்பமயமான பிரபஞ்சம் தோற்ற அதை லக்ஷியம் பண்ணுகின்ற ஜீவனை விசாரித்துப் பார்த்தால் வெளிப் பிரபஞ்சத்தின் சாக்ஷியாய் இருப்பன். அப்படிப்பட்ட யோகியானவன் ஜீவபந்த மனோபந்தங்களைக் காணுகிறதில்லை.

### வெண்பா

இந்திரசா லப்பொருளின் யாதை வெறுத்திடுவார்
விந்தையுடன் யாதை விரும்புவார்—வந்தொருகா
லிச்சை வெறுப்புறுவா ரேனுந் திடபுத்தி
வைச்சிலர்மெய் யென்றுமெண்ணூர் மன். 279

(ப—ரை) இந்திரசால, பொருளின் = வஸ்துக்களில், யாதை வெறுத்திடுவர் = எதை வெறுப்பார்கள், விந்தையுடன் = ஆச்சரியத்துடன், யாதை = எதனை, விரும்புவார் = விரும்புவார்கள், வந்து ஒருகால் = ஒருக்கால் வேண்டுமென்று, இச்சை வெறுப்புறுவரேனும் = விருப்பு வெறுப்பு அடைவார்களானுலும், திடபுத்தி வைச்சிலர் = அவைகளில் திடபுத்தி வையார்கள், மெய் என்றும் எண்ணூர் (மன்) = அவ்விஷயங்களை உண்மை என்றும் நினையார்கள்.

மன்—இடைச்சொல், வைச்சிலர்—வைத்திலர் என்பதன் போலி.

(பொ—ரை) இந்திரசால வஸ்துக்களில் எதை வெறுப்பார்கள். ஆச்சரியத்துடன் எதனை விரும்புவார்கள். ஒருக்கால் வேண்டுமென்று விருப்பு வெறுப்பு அடைவார்களானுலும் அவைகளில் திடபுத்தி வையார்கள். அவ்விஷயங்களை உண்மை என்றும் நினையார்கள்.

"இந்திரசாலப் பொருளில்" என்னும் உபமானத்திற்கு "உலக விவகாரங்களில் என்பது உவமேயம். மற்றவை இரண்டிற்கும் பொருத்தமாம். மற்றவை என்பது 'யாதை வெறுத்திடுவார்' என்பது முதலியவைகளாம்.

### கலிவிருத்தம்

கலங்கி யோடினுங் கங்கையில் நீர்கொள்வார்
நிலஞ்செ யங்கண நீர்தெளிந் துந்தொடா
ரலங்க ரிப்பில தாகினு ஞானிசொன்
னலங்கண் மற்றோர் நயச்சொலி னில்லையே. 280

(ப—ரை) கலங்கி, ஓடினும் = ஓடினலும், கங்கையில் நீர் = கங்கா ஜலத்தை, கொள்வார் = எடுத்துக் கொள்வார்கள், நிலம் செய் = பூமியில் செய்யப்பட்டிருக்கின்ற, அங்கண நீர் = சலதாரை நீரை, தெளிந்துந் தொடார் = தெளிந்திருந்தாலும் தொடமாட்டார்கள், அதுபோல, அலங்கரிப்பு இலாதாகினும் = அலங்காரமில்லாததாலும், ஞானி சொல் நலங்கள் = ஞானியின் சொற்களில் உள்ள நன்மைகள், மற்ருேர் = மற்றவர்களுடைய, நயச்சொலின் = அலங்காரமான சொற்களில், இல்லே (ஏ).

ஏ—அசை.

(பொ—ரை) கலங்கி ஓடினலும் கங்கா ஜலத்தை எடுத்துக்கொள்வார்கள். பூமியில் செய்யப்பட்டிருக்கிற சலதாரை நீரை தெளிந்திருந்தாலும் தொடமாட்டார்கள். அதுபோல அலங்காரமில்லாததாலும் ஞானியின் சொற்களில் உள்ள நன்மைகள் மற்றவர்களுடைய அலங்காரமான சொற்களில் இல்லே.

**கலித்துறை**

புழுகுபூ சைக்குளத சுத்தமன்
றுயர்புழுகு புனிதரணிவா
ரிழிவதாய் மற்றுளதெ லாமசுத்
தந்தொடா ரெதிரின்ஞானி
வழுவுபோல் வினேசெயினும் வினேகளன்
றருளென்று மறைகள்புகழு
மழிவர்வே ரெருருவர்செயி லோசம்பு
புலியுருவ ணிந்தவாறே. 281

(ப—ரை) (1) புழுகு பூசைக்குளது = புனுகு பூனேக்கு இருக்கிற மலம், அசுத்தம் அன்றே = அசுத்தம் அல்ல, உயர் புழுகு = அது உயர்ந்த புனுகு என்று சொல்லப்படும், புனிதர் அணிவார் = அதைப் பரிசுத்தமான தேவதைகளும் மனிதர்களும் தரிப்பார்கள், இழிவு (அது) ஆய் = இழிவுடையதாகி, மற்று உளது எலாம் = வேருகிய மற்றப் பிராணிகளின் மலங்களெல்லாம்,

அசுத்தம்=அசுத்தமாம், தொடார்=அதை ஒருவரும் தொடார், அதுபோல, எதிர் இல் ஞானி=வேறென்றிருப்பதாக அறியாத ஞானி, வழுவுபோல் = குற்றமானது போல, வினை செயினும்= ஒரு செயலைச் செய்தாலும், வினைகளன்று = அச்செயல்கள் வினைகளாகா, அருள் என்று = அருள் விளையாட்டு என்று, மறைகள்=வேதங்கள், புகழும், (4) அழிவர் = கெடுவார்கள், (3) வேறொருவர் செயிலோ = மற்றவர்கள் செய்தாலோ, (2)சம்பு = நரியானது,புலிஉரு=புலி வடிவம் போன்ற வேஷத்தை அணிந்த அரே=கொண்ட விதத்தைப் போல.

அது—பகுதிப்பொருள் விகுதி.

வேஷம் என்பது புலிச்சாரை போல சூடு போட்டுக் கொள்ளுதல். புனுகு பூனை என்பதால், சவ்வாது பூனை, கஸ்தூரி மிருகம் முதலியவற்றையும் கொள்க.

(பொ—ரை) புனுகு பூனைக்கு இருக்கிற மலம் அசுத்தம் அல்ல. அது உயர்ந்த புனுகு என்று சொல்லப்படும். அதைப் பரிசுத்தமான தேவதைகளும் மனிதர்களும் தரிப்பார்கள். இழிவுடையதாகி வேறாகிய மற்றப் பிராணிகளின் மலங்களெல்லாம் அசுத்தமாம். அதை ஒருவரும் தொடார். அதுபோல வேறென்று இருப்பதாக அறியாத ஞானி குற்றமானது போல ஒரு செயலைச் செய்தாலும் அச்செயல்கள் வினைகளாகா. அருள் விளையாட்டு என்று வேதங்கள் புகழும். நரியானது புலி வடிவம் போன்ற வேஷத்தைக்கொண்ட விதத்தைப் போல மற்றவர்கள் செய்தாலோ கெடுவார்கள்.

குஞ்சித பாதங் கண்டக் கணமழல் குவிபஞ்சாய்க்
சஞ்சித மற்றன வாகா மியமயல் சாராதாற்
றுஞ்சிய தன்னியர் கண்ட பிராரத் துவமும்பொய்
யஞ்சிய கூகைமுன் விஞ்சிருள் செஞ்சுட ரதிலுண்டோ. 282

(ப—ரை) (1) குஞ்சிதபாதம் = நடராஜாவின் தூக்கிய பாதத்தை, கண்ட அக்கணம்=தரிசித்த அந்த க்ஷணமே, அழல் குவி பஞ்சாய்=அக்கினி பட்ட பஞ்சுபோல, சஞ்சிதம் அற்றன= சஞ்சித கர்மங்களெல்லாம் ஒழிந்துவிடும், ஆகாமியம்=ஆகாமிய

கர்மமோ, அயல் சாராதால் = அன்னியம் இல்லாதபடியால், துஞ்சியது = கெடும், (3) அன்னியர் கண்ட = பிறர்க்குத் தோற்றுகின்ற, பிராரத்துவமும் பொய் = பிராரத்வ கர்மங்களும் கண்ணுடிச் சாயைப் போலவும் பொய்யாம், (2) அஞ்சிய = பயந்த, கூகைமுன்=கோட்டானுக்கு பகலில் தோற்றுகிற, விஞ்சிருள் = மிகுந்த இருளானது, செஞ்சுடர் அதில்=நல்ல சூரியனிடத்து, உண்டோ=இருக்கிறதா, இல்லை. அதுபோல.

குஞ்சித பாதம்=தூக்கிய பாதம்—எல்லாம் தானே என்று விளங்கும் ஞான நிலை.

(பொ—ரை). நடராஜாவின் தூக்கிய பாதத்தைத் தரிசித்த அந்த க்ஷணமே அக்கினிபட்ட பஞ்சுபோல சஞ்சித கர்மங்கள் எல்லாம் ஒழிந்துவிடும். ஆகாமிய கர்மமோ அன்னியம் இல்லாதபடியால் கெடும். பயந்த கோட்டானுக்குப் பகலில் தோற்றுகிற மிகுந்த இருளானது நல்ல சூரியனிடத்து இருக்கிறதா இல்லை. அதுபோல பிறர்க்குத் தோற்றுகின்ற பிராரத்வ கர்மங்களும், கண்ணுடிச்சாயைப் போலவும் பொய்யாம்.

சஞ்சிதம்=அநேகஜன்மங்களில் செய்த பழைய கர்மங்கள், ஆகாமியம்=பின் பிறப்புக் காரணமாய் இப்போது செய்யும் புதிய கர்மங்கள். பிராரத்துவம் = சஞ்சிதத்திலிருந்து இப்பிறப்பில் சுக துக்க அனுபவங்களைக் கொடுக்க ஏற்பட்ட கர்மம்.

அகமு கம்பகிர் முகத்தினு மோர்விட யத்தை
மிகவு மோகமாய் புசித்திடும் போதினும் வெய்தாய்
புகன்ம காபயந் தன்னினுந் தன்னனு பூதி
தகைவு ருமையே சகசஞா னம்மெனச் சாற்றும். 283

(ப—ரை) அகமும் = உள் நாட்டத்திலும், பகிர் முகத்தினும் = வெளி நாட்டத்திலும், ஓர் விடயத்தை = ஓர் விஷயத்தை, மிகவும் மோகமாய், புசித்திடும் போதினும் = அனுபவிக்கும் காலத்திலும், வெய்து ஆய் = கொடுமையாய், புகல் = சொல்லப்படுகிற, மகா பயந்தன்னினும் = பெரிய

பயத்திலும், தன் அனுபூதி = தனது அனுபவம், தகைவு உருமையே = தடைப்படாதிருத்தலே, சகச ஞானம், எனச் சாற்றும் = என்று சொல்லப்படும்.

(பொ—ரை) உள் நாட்டத்திலும், வெளி நாட்டத்திலும் ஓர் விஷயத்தை மிகவும் மோகமாய் அனுபவிக்கும் காலத்திலும் கொடுமையாய்ச் சொல்லப்படுகிற பெரிய பயத்திலும் தனது அனுபவம் தடைப்படாதிருத்தலே சகச ஞானம் என்று சொல்லப்படும்.

## கலிவிருத்தம்

சாக்கிர சாக்கிரஞ் சாக்கி ரத்தினிற்
றூக்கிய சுழுத்தியே சுழுத்தி சாக்கிரஞ்
சூக்குமாஞ் சுழுத்தியிற் சுழுத்தி யென்பர்க
ளாக்கருந் துரியமா மனுப வத்தையே. 284

(ப—ரை) (2) சாக்கிர சாக்கிரம் = விழுப்பில் விழிப்பும், சாக்கிரத்தினில் = விழிப்பினில், தூக்கிய சுழுத்தி (ஏ) = உயர்ந்த நித்திரையும், சுழுத்தி சாக்கிரம் = நித்திரையில் விழிப்பும், சூக்குமாம் = சூக்ஷ்மமாகிய, சுழுத்தியில் சுழுத்தி = நித்திரையில் நித்திரையும், என்பர்கள் = ஆம் என்று சொல்வார்கள், (1) ஆக்க அரும் = கற்பிக்க முடியாத, துரியமாம் அனுபவத்தை (ஏ) = துரியானுபவத்தை.

ஏ, ஏ—அசைகள்.

(பொ—ரை) கற்பிக்க முடியாத துரியானுபவத்தை, விழிப்பில் விழிப்பும், விழிப்பில் உயர்ந்த நித்திரையும், நித்திரையில் விழிப்பும், சூக்ஷ்மமாகிய நித்திரையில் நித்திரையும் ஆம் என்று சொல்வார்கள்.

உலகமென் றுரைன்றிலை யுன்சொ ரூபமே
நிலவுறு மென்றுபின் னின்னில் வேறிலை
யுலகினில் யாவையு முளவென் றெம்மிறை
நிலவிடு மனைத்துமே நின்னி லென்றனன். 285

(ப—ரை) (2) உலகம் என்று ஒன்று இலை = உலகம் என்பதாக ஒன்றும் கிடையாது, உன் சொரூபமே, நிலவுறும்= விளங்கும், என்று = என்று கூறி, பின் = பின்பு, நின்னில் = உன்னிடத்தில், வேறு இலை=அன்னியம் என்பது கிடையாது, உலகினில் = உலகத்தில், யாவையும் உள =அநேகபேதமாக எல்லாம் இருக்கின்றன, என்று=என்று சொல்லி மேலும், (1) எம் இறை=எங்கள் குருவானவர், (4) நிலவிடும் அனைத்தும் (ஏ) = எல்லாம்விளங்கும்,(3) நின்னில்=உன்னிடத்தில்,(5)என்றனன்= என்று கூறினார். (ஏ—அசை.)

(பொ—ரை) எங்கள் குருவானவர், உலகம் என்பது ஒன்றும் கிடையாது, உன் சொரூபமே விளங்கும் என்று கூறிப் பின்பு உன்னிடத்தில் அன்னியமென்பது கிடையாது, உலகத்தில் அநேக பேதமாக எல்லாம் இருக்கின்றன என்று சொல்லி மேலும் உன்னிடத்தில் எல்லாம் விளங்கும் என்று கூறினார்.

அகிலமு நீயலை யனைத்து நீயெனு
நிகிலமுங் காண்பைநீ நின்னைக் கண்டிடா
தகிலமு மென்றுநீ யனைத்துஞ் சார்ந்திடாய்
நிகிலமுஞ் சார்ந்திடு நின்னை யென்றனன். 286

(ப—ரை) அகிலமும்=எல்லாம், நீயலை=நீயல்ல என்று சொல்லிப் பின், அனைத்தும் = எல்லாம், நீ எனும்=நீயே என்று சொன்னார், நிகிலமும் = எல்லாவற்றையும், காண்பை நீ = நீ அறிவாய், நின்னை = உன்னை, கண்டிடாது அகிலமும்=எல்லாம் அறியாது, என்று = என்று கூறி, நீ அனைத்தும் = நீ எல்லாவற்றையும், சார்ந்திடாய் = பொருந்தாய், நிகிலமும் = எல்லாம், சார்ந்திடும் நின்னை=உன்னைச் சார்ந்திருக்கும், என்றனன்=என்று சொன்னார்.

(பொ—ரை) எல்லாம் நீ அல்ல என்று சொல்லிப் பின், எல்லாம் நீயே என்று சொன்னார். எல்லாவற்றையும் நீ அறிவாய். உன்னை எல்லாம் அறியாது என்று கூறி, நீ எல்லாவற்றையும் பொருந்தாய் எல்லாம் உன்னைச் சார்ந்திருக்கும் என்று சொன்னார்.

இன்பதுன் பப்பகுப் பெண்ண றுன்பமாம்
பின்பிவை யிரண்டுமில் பெற்றி யின்பமே
நன்கொடு தீங்கினை நாட நீங்கெனும்
புன்குண மாமவை போக்கி னன்கரோ. 287

(ப—ரை) இன்ப துன்ப பகுப்பு=சுக துக்க பேதங்களை, எண்ணல்=பாவித்தலே, துன்பமாம்=துக்கமாம், பின்பு, இவை இரண்டும்=சுக துக்கங்கள் என்னும் இவை இரண்டு பாவனையும், இல் = இல்லாத, பெற்றி = தன்மை, இன்பமே = சுகமேயாம், நன்கொடு தீங்கினை=நன்மையையும், தீமையையும், நாடல் = நினைத்தல், தீங்கு எனும் = தீமையென்று சொல்லப்படும், புன் குணம் ஆம் = இழிந்த குணமாகிய, அவை போக்கின் = அந் நன்மை தீமை நினைவுகளை ஒழித்தால், நன்கு அரோ = நன்மையாம்.

(பொ—ரை) சுக துக்க பேதங்களை பாவித்தலே துக்கமாம். பின்பு சுக துக்கங்கள் என்னும் இவை இரண்டு பாவனையும் இல்லாத தன்மை சுகமேயாம். நன்மையையும், தீமையையும் நினைத்தல் தீமை என்று சொல்லப்படும். இழிந்த குணமாகிய அந் நன்மை தீமை நினைவுகளை ஒழித்தால் நன்மையாம்.

இறுகுமெய் யீதுபொய் யிதுவென் றுன்னுத
லுறைகொள்பொய் யிப்பகுப் பொழிதன் மெய்ம்மையா
மறிவறி யாமைதா மறிவி லாமையிப்
பிறிவில தறிவெனப் பேசு மெந்தையே. 288

(ப—ரை) இறுகு மெய்=உறுதியான உண்மை,ஈது=இது, பொய் இது என்று, உன்னுதல் = நினைத்தல், உறை கொள் = தங்கிய, பொய் = பொய்யாம், இப் பகுப்பு=இந்த மெய் பொய் என்னும் பேத நினைவுகள், ஒழிதல் = ஒழிதலே, மெய்ம்மையாம், அறிவு, அறியாமை (தாம்)=அறியாமை என்னும் நினைவுகள், அறிவிலாமை=அறியாமையாம், இப்பிறிவு = இவ்வறியாமை

